| | |
|---|---|
| **5.** | முன்னுரை |
| 5.1. | மலையாளிகளின் சடங்குகள் |
| 5.1.1 | பிறப்புச் சடங்கு |
| 5.1.2 | குழந்தைப்பேறு வேண்டி செய்யும் சடங்குகள் |
| 5.1.2.1 | குழந்தை பிறப்பதற்கு முன் நடத்தப்படும் சடங்குகள் |
| 5.1.2.2. | கருவுற்ற காலத்தில் செய்யக்கூடிய செயல்கள் |
| 5.1.2.3 | குழந்தை ஆணா, பெண்ணா என்று அறிதல் |
| 5.1.2.4. | பிரசவம் |
| 5.1.2.5. | குழந்தையை நீராட்டுதல் |
| 5.1.2.6. | குழந்தையின் உணவு |
| 5.1.2.7. | பேறு காலத்தில் தாயின் உணவு |
| 5.1.3. | பெயரிடுதல் (அ) பெயர் சூட்டுதல் |
| 5.1.4. | காது குத்துதல் |
| 5.1.5. | பூப்புச் சடங்கு |
| 5.1.5.1. | குடிசையை எரித்தல் |
| 5.1.6. | திருமணம் |
| 5.1.6.1. | திருமண உறவு முறைகள் |
| 5.1.6.2. | பெண் கேட்கும் முறை |
| 5.1.6.3. | பரிசம் போடுதல் |
| 5.1.6.4. | கடவுள் வழிபாடு |
| 5.1.6.5. | அழைப்பிதழ் பண்பாடு |
| 5.1.6.6. | நலங்கு |
| 5.1.6.7. | பெண் அழைப்பு |
| 5.1.6.8. | மணப்பந்தல் |
| 5.1.6.9. | தாலிகட்டும் முன் செய்யும் சடங்கு |
| 5.1.6.10. | தாலி கட்டுதல். |
| 5.1.6.11. | மணமக்கள் விளையாட்டு |
| 5.1.6.12. | மறுமுசி போதல் |
| 5.1.7. | இறப்புச் சடங்கு |
| 5.1.7.1. | பால் ஊற்றுதல் |
| 5.1.7.2. | சந்தைக்கு அனுப்புதல் |
| 5.1.7.3. | ஒப்பாரி |

## 5. முன்னுரை

"முற்காலத்தில் காரண காரியத்தோடு செய்யப்பட்ட செயல்களைப் பிற்காலத்தவர் அர்த்தம் புரியாமல் மரபாகப் பின்பற்றுகின்றனர். இவற்றைச் சடங்குகள் என்று கூறலாம்"[1]. இன்று நாம் செய்யும் பிறப்பு, திருமணம், இறப்புப் போன்ற சடங்குகளிலும் கூட எண்ணற்ற காரணம் புரியாத செயல்கள் உள்ளன. அவற்றிற்கு நாம் வலிந்து பொருள் கூறுகின்றோம். உண்மையிலேயே நாம் இன்று கொள்ளும் பொருளில்தான் முற்காலத்தவர்களும் பொருள் கொண்டனரா? என்பது விவாதத்திற்குரியதாகும்.

சடங்குகள் செய்யப்படுவதன் நோக்கம் சமூக அனுமதி பெறல் என்பதையே குறிக்கோளாக கொண்டதாகும். பிறப்புச் சடங்கானால் அக்குழந்தைப் பிறந்ததை ஊருக்கு அறிவிப்பதே முக்கிய நோக்கம். அதுபோலவே பூப்புச் சடங்கு ஒரு பெண் கல்யாண வயதை எட்டிவிட்டாள் என்பதைச் சமூகத்திற்கு அறிவிப்பதற்காகச் செய்யப்படுகிறது. இவ்வாறு மனிதச் சமுகத்தால் மேற்கொள்ளப்படும் ஒவ்வொரு சடங்குகளும் ஒவ்வொரு காரணகாரியங்களை அடிப்படையாகக் கொண்டு காலம்காலமாக நிகழ்த்தப்பட்டு வருகின்றன.

மக்களின் பிறப்பு முதல் இறப்பு வரை பலவகையான சடங்குகள் இடம் பெறுகின்றன. இவை மக்கள் வசதிக்கேற்பவும் தரத்திற்கேற்பவும் நிகழ்த்தப்படுகின்றன. மக்கள் வாழ்க்கையில் பல்லாயிரக் கணக்கான சடங்குகள் உண்டென்றாலும் இலக்கியத்தில் இடம்பெறுபவை மிகச் சிலவே. "சடங்குகள் மக்களின் மனவளத்தையும் அவர்தம் ஒற்றுமைப் பண்பாட்டையும் இறைவழிபாட்டையும் எடுத்துக்காட்டும் மானிடவியல் கருவூலமாகும். சடங்குகள் செய்வதில் இனத்திற்கு இனம் வேறுபடுகிறது. ஒரே இனத்தில் கூட ஒரே விதமான சடங்கினைப் பின்பற்றுகிறார்கள் எனக் கூற இயலாது. நாகரிகம் வளர்ந்துற்ற இக்காலத்திலும் பலவகையான சடங்குகளை மக்கள் பின்பற்றி வரக் காண்கிறோம்"[2]. "ஒரு தனி நபரால் தொடங்கப்படும் ஒரு செயல் பின்பு யாவராலும் பின்பற்றப்பட்டுப் பழக்கமாகவும் சமுதாயத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்டுப் பின்பு சடங்காகவும் மாறுகிறது"[3] என்கிறார் வசந்தி.

"புனிதத்தன்மையைப் பாதுகாக்கவும் அதற்கு களங்கம் ஏற்படாமல் இருக்கவும் தீயவற்றிலிருந்து தனிமைப்படுத்தித் தூய்மையாக வைக்கவும் சடங்குகள் மேற்கொள்ளப்படுகின்றன. புனிதத்தன்மையை மக்கள் இறைவன் என்னும் பெயரால் மனித உருவமாக்கியோ, மனித உணர்வாக்கியோ வழிபட முற்படுவதால் இறைவனுக்கும் மனமுண்டு என எண்ணி இறைவனின் மனதை நிறைவு செய்யும் பொருட்டு

மேற்கொள்ளப்பட்ட செயல்களும் சடங்குகளாயின"[4]. மேலும் "ஒரு மங்கள நிகழ்ச்சியோ, சிறப்பு நிகழ்ச்சியோ அதற்குரிய காரணகாரியம் அறியமுடியாத நிலையில் ஒரு சங்கிலித் தொடர் போன்று நிகழ்ந்து வரும் செயல்முறை நிகழ்ச்சியைச் சடங்கு என்று கூறலாம்"[5].

"சடங்கு என்பது வாழ்வியல் நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டவை" என்று காந்தி அவர்கள் தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும் என்னும் நூலில் குறிப்பிடுகிறார். உலகில் வாழும் ஒவ்வொரு இனத்தவருக்கும் தனித்தனிப் பழக்கவழக்கங்களும், சடங்கு முறைகளும் காணப்படுகின்றன. இங்கு ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட மலையாளி இனப் பழங்குடி மக்களும், பல்வேறு விதமான பழக்கவழக்கங்களையும் சடங்குகளையும், நம்பிக்கைளையும் கடைபிடித்து வருகின்றனர். அந்த வகையில் பழங்குடி இனமான மலையாளிகள் வாழ்வியல் பின்பற்றிவரும் சடங்குகள், நம்பிக்கைகள், கலைகள் மற்றும் புழங்குப் பொருட்கள் குறித்து ஆராய்வதாக இந்த இயல் அமைகிறது.

## 5.1. மலையாளிகளின் சடங்குகள்

மலையாளி இனப் பழங்குடி மக்கள் தங்கள் வாழ்வில் பின்பற்றிவரும் சடங்கு முறைகளைப் பின்வருமாறு வகைப்படுத்தலாம். ஆவை,

1. பிறப்புச் சடங்கு
2. பூப்புச் சடங்கு
3. திருமணச் சடங்கு
4. இறப்புச் சடங்கு
5. கொழுச் சடங்கு
6. வழிபாட்டுச் சடங்கு

என்பனவாகும்.

### 5.1.1. பிறப்புச் சடங்கு

மனித வாழ்வில் பிறப்புத் தொடங்கி இறப்புவரை பல்வேறு வகையான சடங்குகள் செய்யப்பட்டு வந்தாலும் முதன்மையாகச் செய்யப்படுவது பிறப்புச் சடங்கு ஆகும். குழந்தைச் செல்வம் மனித வாழ்வில் மிகவும் இன்றியமையாத ஒன்றாகக் கருதப்படுகிறது. மிகுந்த செல்வம் இருப்பவர்களாயினும், குழந்தைச் செல்வம் இல்லாதவர்களைச் சமூகம் 'மலடி' என்ற பட்டம் சூட்டி நல்ல செயல்களிலிருந்து அவர்களை விலக்கிவைக்கும்

நிலைதான் இன்றும் காணப்படுகிறது. இதனை உணர்ந்த வள்ளுவரும் குழந்தைச் செல்வத்தின் சிறப்பை எடுத்துக் கூறும்போது,

“குழலினிது யாழினிது என்பதம் மக்கள்

மழலைச்சொல் கேளா தவர்” (திருக்குறள், குறள் எண். 66)

என்று குழந்தைப் பேற்றின் முக்கியத்துவத்தைப் பற்றிப் பாடியுள்ளார்.

குழந்தைப்பேறு கிட்டாதப் பெண்ணைச் சமூகம் மதிப்பதில்லை, மங்கள நிகழ்வுகளில் பங்கு பெறும் பாக்கியத்தை அப்பெண் இழக்கின்றாள். அவளின் பார்வை பட்டால் பிறக்கும் குழந்தைகள் ‘ஆரோக்கியம்’ (நலம்) இல்லாமல் போய்விடும், ஒரு செயலின் காரணமாகப் போகின்ற செயல் வெற்றிபெறாது என்றும் மலையாளிகள் கருதுகின்றனர். எனவே குழந்தை என்பது மனித வாழ்க்கைக்கு எவ்வளவு முக்கியம் பெறுகின்றது என்பதை உணர்த்துகின்றது.

### 5.1.2. **குழந்தைப்பேறு வேண்டி சடங்குகள்**

ஒரு பெண்ணுக்குத் திருமணம் நடந்து நான்கு, ஐந்து ஆண்டுகளுக்குக் குழந்தை இல்லையென்றால் அவள் ஊர்ப் பலிக்கு ஆளாக்கப்படுகிறாள். அவற்றிலிருந்து தன்னைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்றால் பிள்ளைப் பேறு பெற வேண்டும். எனவே, தனக்குப் பிள்ளைப் பேறு கிட்டாமல் போனதற்குக் காரணம் தெய்வக் குற்றமே என்று அஞ்சி தெய்வத்திற்குச் செய்யும் நேர்த்திக் கடன்களே குழந்தைப் பேறு வேண்டி செய்யும் சடங்குகள் ஆகும்.

மலையாளி இனப் பெண்கள் குழந்தைப் பேறு வேண்டி வீடு வீடாக மடி ஏந்திப் பிச்சை எடுத்து மாரியம்மனுக்குப் பொங்கல் வைத்தால் குழந்தை பிறக்கும் என நம்புகின்றனர். சிலர் தெய்வங்கள் செல்லும் வழியில் குறுக்கே படுத்து மண்டியிட்டால் குழந்தை பிறக்கும் என்றும், பிறந்த குழந்தையின் தொப்புள் கொடியை உண்டால் குழந்தை பிறக்கும் என்றும் நம்புகின்றனர்.

இதனையே

‘‘குன்றக் குறவன் கடவுட் பேணி

இரந்தனன் பெற்ற எல்வளைக் குறுமகள்’’ (ஐங். பா.எ. 257)

என்ற பாடல் கடவுளைப் பேணி குறவன் ஒருவன் பெண்மகவு பெற்றமையைக் கூறுகிறது. மலையாளிகளின் பிறப்புச் சடங்கினைக் குழந்தை பிறப்பதற்கு முன் நடத்தப்படும்

சடங்குகள், குழந்தைப் பிறந்ததற்குப் பின் நடத்தப்படும் சடங்குகள் என்று இரண்டு வகையாகப் பிரிக்கலாம்.

### 5.1.2.1. குழந்தை பிறப்பதற்கு முன் நடத்தப்படும் சடங்குகள்

இச்சடங்குகள் கருநிலைச் சடங்குகள் என்று அழைக்கப்படுகின்றன. மலையாளிப் பெண் கருவுற்றவுடனே அச்செய்தியை பெண்ணின் பெற்றோருக்குத் தெரியப்படுத்துகிறார்கள். செய்தியறிந்த பெற்றோர்கள் நிறைய இனிப்பு, சத்தான தினை, வரகு கலந்த தேன் மாவு போன்றவைகளைக் கொண்டு வந்து பெண்ணுக்குக் கொடுக்கின்றனர். கணவனும் மனைவி விரும்பி கேட்கக் கூடிய உணவினைச் சேகரித்துக் கொண்டு வந்து கொடுக்கின்றான். பிடித்தமான உணவினை வாங்கிக் கொடுத்தால் பிறக்கும் குழந்தை பேராசைக்காரனாக இல்லாமல் இருக்கும் என்று நம்புகின்றனர்.

### 5.1.2.2. கருவுற்ற காலத்தில் செய்யக்கூடிய செயல்கள்

மலையாளிச் சமூகத்தில் பெண் கருவுற்ற நான்கு மாதங்களுக்குச் சத்தான உணவு, பழவகைகள் கொடுக்கின்றனர். கடினமான வேலைகளைச் செய்ய அவர்களை அனுமதிப்பதில்லை. நான்கு மாதத்திலிருந்து மகப்பேற்றிற்கு முன்பு வரை எல்லா வேலைகளையும் அப்பெண்னே செய்கின்றாள். அவ்வாறு செய்வதால் சுகபிரசவம் ஆகும் என்று கூறுகின்றனர். முன்பு மலையாளிகள் பெண் கருவுற்ற ஏழாவது மாதத்தில் பெண்ணின் தாய் தந்தையர் தங்களின் உறவினர்களை அழைத்துக் கொண்டு மாப்பிள்ளை வீட்டிற்கு ஒரு சிறு விருந்து உபசரிப்பு நடத்துகின்றனர். விருந்து முடிந்ததும் பெண் வீட்டார் பெண்ணை அழைத்துக் கொண்டு தங்கள் வீட்டுக்குச் செல்கின்றனர்.

தாய் வீட்டில் பெண்ணுக்குப் பிடித்தமான சத்தான உணவு வகைகள் கொடுக்கப்படுகின்றன. கருவுற்றிருக்கும் பெண்களுக்கு, குழந்தை நல்ல ஆரோக்கியத்துடன் பிறக்கவேண்டும் என்பதற்காக, நல்ல சத்தான உணவுக் கொடுக்கப்படுகிறது. அதே போன்று அவரின் உடல்நலன்களையும் மிகுந்த கவனத்துடன் பார்த்துக் கொள்கின்றனர். கடினமான வேலைகளைச் செய்யக் கூடாது. காடுகளுக்குச் செல்லக் கூடாது, இரவு நேரங்களில் வீட்டுக்கு வெளியே வரக்கூடாது, நல்ல இனிப்பான உணவு ஓரளவுக்குத்தான் உண்ண வேண்டும். தண்ணீர் அதிகமாக எடுக்கக் கூடாது. சூடான பொருட்களை உண்ணக் கூடாது என இவர்கள் தங்களுக்குள் சில கட்டுப்பாடுகளைக் கடைப்பிடித்து வருகின்றனர்.

#### 6.1.2.1. குழந்தை ஆணா, பெண்ணா என்று அறிதல்

மலையாளிகள் பிறக்கப் போகும் குழந்தை ஆணா, பெண்ணா என்பதைத் தாயின் முகப்பாவனையையும், உடம்பில் தோன்றும் சிற்சில அடையாளங்களையும் வைத்து அறிந்து கொள்ளலாம் என்கின்றனர். தாயின் முகத்தில் வலது பக்கம் முகப்பரு வந்தால் ஆண் குழந்தை என்றும், இடப்பக்கம் வந்தால் பெண் குழந்தை என்றும் கூறுகின்றனர். சிலர் கருவுற்ற காலத்திலிருந்து பத்து மாதம் வரை கணக்கு வைத்துள்ளனர். பத்து மதத்திற்கு முன்பாகவே பிறந்தால் பெண் குழந்தை என்றும் பத்து மதாம் முடிந்தது பிறகு பிறந்தால் அது ஆண் குழந்தை என்றும் கருதுகின்றனர்.

#### 6.1.2.2. பிரசவம்

பத்தாண்டுகளுக்கு முன்பு கருவுற்ற பெண்ணைப் பேறுகால நேரம் நெருங்கியதும், குடியிருக்கும் வீட்டிலிருந்து முப்பது அல்லது 40 அடி தூரத்தில் சிறுகுடிசைக் கட்டி ஒரு நாளில் பெண்ணை அக்குடிசையில் கொண்டு போய் விட்டுவிடுகின்றனர். அதன்பின் அப்பெண் குடியிருக்கும் வீட்டிற்குள் அனுமதிக்கப்படுவதில்லை. இரவு நேரங்களிலும் அந்தப் பெண் குடிசையிலேயே உண்டு உறங்க வேண்டும். இவர்களுடன் பிரசவம் பார்க்கும் ‘மருத்துவச்சியோ’ அல்லது வயதான மூதாட்டியோ அருகிலிருப்பார்கள். ஆனால், இன்று வயதான பெண்கள் மகப்பேறு நிலையிலுள்ள பெண்ணின் அருகில் இருந்து உற்ற துணையாக பார்த்துக் கொள்கிறார்கள். குழந்தை பிறந்தவுடன் ‘வைக்கோல்’ எடுத்து அந்தக் குடிசையில் பரப்பி அதன் மீது பாய் விரித்து அதன் மேல் சேலையை விரித்து தாய், பிள்ளை இருவரையும் அதில் இருக்க வைக்கின்றனர். ‘வைக்கோல்’ தாயும் சேயும் கதகதப்பாக (அ) சூடாக இருக்கப் பயன்படுத்தப்படுகிறது. பின்னர் தாயையும் சேயையும் பிரிக்கும் தொப்புள் கொடி அறுக்கும் நிகழ்வைப் பிரசவம் பார்த்த மருத்துவச்சி அறுத்து எடுக்கிறாள்.

“குழந்தை பிறந்த மூன்றாம் நாள் மிதமான வெந்நீரில் (சுடுதண்ணீர்) தாயையும், குழந்தையையும் வசம்பு, மஞ்சள் இரண்டையும் அரைத்துத் தேய்த்து நீராட்டுகின்றனர். பின்னர் வசம்புக் கிழங்கினை நீரில் நன்கு ஊறவைத்து பின் அதனைச் சிறிது சிறிதாக நறுக்கி நூலால் கோர்த்து குழந்தையின் கையில் கட்டுகின்றனர். அவ்வாறு கட்டுவதால் பால் கவுச்சி, மூத்திரக் கவுச்சி வராமல் இருக்கும்”[6] என்று தகவலாளி ‘ருக்குமணி’ அவர்கள் கூறுகின்றார்.

### 6.1.2.3. குழந்தையை நீராட்டுதல்

மலையாளிகள் பிறந்த குழந்தைக்கு மூன்றாம் நாள் தண்ணீர், ஐந்தாம் நாள் தண்ணீர் என்று முறைகள் வைத்துக் நீராட்டுகின்றனர். ஐந்தாம் நாள் நீர் ஊற்றியதும் கரும் வளையல், கருகமணி ஆகியவற்றைக் குழந்தைக்கு அணிவிக்கின்றனர். தாயோ, பாட்டியோ குழந்தையை நீராட்டும்போது நீட்டப்பட்ட காலின்மேல் குழந்தையைப் படுக்கவைத்து நீராட்டுகின்றனர். அவ்வாறு நீராட்டும் போது நீட்டப்பட்ட காலுக்குக் கீழே தட்டு ஒன்றை வைக்கின்றனர். குழந்தையைக் குளிப்பாட்டும் தண்ணீர் அதில் விழுகிறது. குழந்தையைக் குளிப்பாட்டி முடித்ததும் காலுக்குக் கீழிருக்கும் தட்டில் குழந்தை அணிந்திருந்த கருப்பு வளையள்களைக் கழட்டிப் போட்டு, அதில் இரண்டு மிளகாய், கரிதுண்டு, சிறிது மஞ்சள் சேர்த்துக் கலக்கி வெற்றிலை, பாக்கு வைத்து கற்பூரம் ஏற்றி குளித்து முடித்த குழந்தைக்கு கண்ணேறு கழிக்கின்றனர்.

சிலர் குழந்தைக்குப் பால் கொடுத்து விட்டு 'ஏணு' (தொட்டில்) கட்டி அதில் குழந்தையை உறங்க வைக்கின்றனர். குழந்தைக்கு கண்ணேறு கழிப்பதற்காக எடுக்கப்பட்ட ஆரத்தியை ஏணின் கீழ் வைத்து விட்டு சிறிது நேரம் கழித்து அதனை எடுத்து விடுகின்றனர். ஆரத்தி காய்ந்து இருந்தால் குழந்தையின்மேல் அதிகமான கண்ணேறு பட்டிருக்கின்றன என்றும், காயாமல் அப்படியே இருந்தால் குழந்தை மீது கண் திஷ்டி இல்லை என்றும் நம்புகின்றனர்.

பதினாறாம் நாள் கழித்து தாய், குழந்தை ஆகியோர் படுத்திருந்த வைக்கோல் படுக்கையை எடுத்துக்கொண்டு போய் (குழந்தை பெற்ற தாய்) ஒரு சந்தில் போட்டுக் கொளுத்தி விடுகின்றார். வைக்கோல் படுக்கையை எடுத்துச் செல்லும் போது ஆடு, மாடுகள் வாய் படமால் (தின்றுவிடமால்) எடுத்துச் செல்ல வேண்டும். மாடு வாய்பட்டால் அது தீங்கு என்று மலையாளிகள் நம்புகின்றனர். தாய் பயன்படுத்திய தட்டு, டம்ளர் போன்ற பொருள்களைச் சாம்பல் கொண்டு கழுவிவிடுகின்றனர். குழந்தை பிறந்த பதினைந்து நாட்கள் வரை தாயும், சேயும் தீட்டாகக் கருதப்படுகிறார்கள். பதினாறாம் நாள் வீடு, வாசல் போன்றவற்றைச் சாணத்தால் மெழுகிக் குழந்தை பெற்ற தாயை தலை முழுகவைத்தப் பின்னர் வீட்டிற்குள் அழைக்கின்றனர். இரண்டு (அ) மூன்று மாதங்கள் கழித்துத் தாய்வீட்டில் இருந்து கணவன் வீட்டிற்குத் தாயும், சேயும் அழைக்கப்படுகின்றனர்.

மலையாளிகள் இன்று மகப்பேறு சமயத்தின் போது அருகிலுள்ள அரசு மருத்துவமனைக்குச் சென்று விடுகின்றனர். குழந்தை பிறந்த பிறகு அரசு தரும் மகப்பேறு உதவிப் பணம் கிடைக்கும் என்றதன் அடிப்படையிலே அங்கு செல்கின்றனர். குழந்தை பிறந்து மூன்று நாட்கள் வரை தாயும், சேயும் மருத்துவமனையில் தங்கவைக்கப்

படுகின்றார்கள். பின்னர் தாயையும் சேயையும் தாய்வீட்டிற்கு அழைத்து வருகின்றனர். குழந்தையின் அத்தை, மாமன் முறையுள்ளவர்கள் குழந்தைக்கு வேண்டிய புத்தாடைகள் எடுத்துக் கொடுக்க வேண்டும். ஒரு சிலர் வெள்ளி அரணாகயிறு, வெள்ளிக் கொலுசு, மோதிரம் போன்றவற்றை அன்பளிப்பாகக் கொடுப்பதும் உண்டு. நெருங்கிய உறவினர்கள் புத்தாடை எடுத்துவந்து கொடுத்துக் குழந்தையைப் பார்த்துவிட்டு செல்கின்றனர். சிலர் பணமாகவும் கொடுத்துப் பார்த்துவிட்டுச் செல்வது வழக்கமாக இருக்கின்றது.

### 6.1.2.4. குழந்தையின் உணவு

குழந்தை பிறந்தவுடன் தாயப்பால் கொடுக்கின்றனர். தாய்ப்பால் கொடுக்கும்போது சில குழந்தைகள் செரிமானம் ஆகாமல் வலியால் அவதிப்படும். மலம் கழிக்கவும் சிரமப்படும். அப்பொழுது நல்லெண்ணெய்யை ஒரு கரண்டியில் ஊற்றி தீயில் காய்ச்சுகின்றனர். பின்னா் வசம்பின் வேரை நெருப்பில் சுட்டு எண்ணெய்யில் சேர்த்துக் கரைக்கின்றனர். அத்துடன் சிறிது ஓமப்பொடியையும் வறுத்து அவற்றுடன் கலந்து அதில் தாய்ப்பால் கலந்து குழந்தைக்கு நக்கில் தடவுவதன் வழியாக உள்ளுக்குக் கொடுக்கின்றனர். இவை குழந்தைக்கு நல்ல செரிமானத்தை உண்டாக்கவும் சிரமமின்றி மலம் கழிக்கவும் கொடுக்கப்படுகிறது என்கின்றனா். இச்செயல் முறை மாதத்திற்கு இருமுறை பின்பற்றப்படுகின்றன.

குழந்தை, துா்நாற்றம் இல்லாமல் ஆரோக்கியமாக இருக்க வசம்பு, சிறுஇலை இரண்டையும் சோ்த்து அரைத்துக் குழந்தையை வாரத்திற்று ஒரு முறை நீராட்டினால் குழந்தை மென்மையாகவும் பளப்பளப்பாகவும், வாசனையாகவும் இருக்கும் என்கின்றனர். மேலும், ‘வகனை’ என்கிற ஒரு வகை மரத்தின் இலையை எண்ணெய்யில் தோய்த்து நெருப்பில் (தீயில்) சிறிது வாட்டி குழந்தைகளின் வயிறு, இடுப்பில் கட்டிவிட்டால் குழந்தையின் உடல் மென்மையாக இருக்கும் என்றும் கூறுகின்றனர்.

### 6.1.2.5. பேறு காலத்தில் தாயின் உணவு

மலையாளிகள் இனத்தில் ஒரு பெண் குழந்தையைப் பெற்றெடுத்தால் அவளுக்குப் பனைவெல்லம், மிளகு, சீரகம் மூன்றையும் அரைத்துக் கொடுக்கின்றனர். தினைச்சோறு, ஓமப்புளி, கேழ்வரகு கூழ் போன்றவைகள் தொடர்ந்து மூன்று மாத காலம் வரை கொடுக்கப்படுகிறது. சிலர் சமவெளிப் பகுதிகளில் உள்ள நாட்டு மருந்துக் கடைக்குச் சென்று, பேறு காலச் செலவு என்று கேட்டு வாங்கி வந்து, அவற்றை நெருப்பில் வறுத்து இடித்துக் கருப்பட்டி மாவு காச்சி, அதில் கலந்து உருண்டை பிடித்துத் தினமும் காலை, மாலை என இருவேளையும் குழந்தை பெற்ற தாய்மார்களுக்குக் கொடுக்கின்றனா். இவை

நன்றாகப் பசி எடுப்பதற்கும், உடல் நலன்களைக் குணப்படுத்துவதற்கும் தருவதாகக் கூறுகின்றனர். ஆனால், இனிப்பான பண்டங்கள், குளிர்ச்சியான பொருள்கள் போன்றவற்றைக் கொடுப்பதில்லை.

### 6.1.2.6. பெயரிடுதல் (அ) பெயர் சூட்டுதல்

ஒருவரைப் பிறிதொருவரிடமிருந்து வேறுபடுத்திக்காட்ட பெயர்கள் உதவுகின்றன. "பெயர் சூட்டுதல் என்பது முக்கியமான சமுதாயச் செயல்பாடு. மனித வரலாற்றில் மிக முக்கியமான இடத்தைப் பெயர் பெற்றிருக்கிறது. ஒரு மனிதனை மனிதனாக உருவாக்குவது பெயராகும். ஒரு மனிதனின் அடையாளத்தைக் காணுவதற்குப் பெயர் பயன்படுகிறது"[7]. "பெயர் ஒரு மனிதனுக்குச் சொத்தையும், உறவையும், உரிமையையும் தருகிறது. பெயர் குறியீடாக மட்டுமல்ல மனிதனின் ஆளுமையையும், இயல்பையும் சுட்டிக் காட்டி மனித சமுதாயத்தின் பழக்க வழக்கங்கள், நம்பிக்கை, பண்பாடு ஆகியவற்றை வெளிப்படுத்துகிறது"[8].

ஒருவனைக் குடும்பத்தில் ஒரு அங்கமாகவும், சமுதாயத்தில் மதிப்பும் மரியாதையும் உள்ள ஒரு உறுப்பினராகவும் மாற்றும் சக்தி பெயருக்கு உண்டு. மலையாளிகள் பெயரை ஒரு பண்பாட்டு அடையாளமாகவும், முகவரியாகவும் கருதுகிறார்கள். எனவே மலையாளிகள் பெயரிடுதல் சடங்கைப் பெருமையாகவும், ஒரு விழா போன்றும் கொண்டாடுகின்றனர்.

மலையாளிகள் குழந்தைக்குப் பெயர் சூட்டுதல் செய்தியை ஊர்ப் பொது மக்களுக்கும், உற்றார் உறவினர்களுக்கும் முன்கூட்டியே தெரிவித்து விடுகின்றனர். பெயர் சூட்டும் நாளன்று பச்சரிசி, பானையுடன் தன் குலதெய்வக் கோவிலுக்குப் பொங்கல் வைத்து தெய்வத்திற்குப் படைக்கின்றனர். பின்னர், தெய்வத்தின் முன்பு ஒரு வாழை இலையை விரித்துப் புத்தாடை உடுத்தி குழந்தையைக் கிழக்கு முகம் பார்த்தவாறு படுக்க வைக்கின்றனர். மலையாளி இனத்தில் உள்ள பூசாரி குழந்தையின் தலையில் சிறிது முடியை அறுத்து எடுத்துத் தெய்வத்தைப் பார்த்தவாறு அக்குழந்தைக்குத் தெய்வத்தின் பெயரையோ அல்லது அக்குழந்தையின் மூதாதையரின் பெயரையோ வைக்கின்றார்.

(எ.கா.) குல தெய்வத்தின் பெயர் 'சேமியம்மன்' என்று இருந்தால் ஆண் குழந்தைக்குச் 'சேமன்' என்றும், பெண் குழந்தைக்குச் 'சேமி' என்றும் பெயர் சூட்டுகின்றனர். நாச்சியம்மனாக இருந்தால் நாச்சியப்பன், நாச்சியம்மாள், நாச்சி என்றும், காளியம்மனாக இருந்தால் காளியப்பன், காளியம்மாள் என்றும் தன் குலத் தெய்வத்தின் பெயரை வைக்கும் வழக்கம் மிகுதியாகக் காணப்படுகிறது. அதன் பின்னர்க் 'கிடா' வெட்டி, விருந்தினர் அனைவருக்கும் விருந்து பரிமாறுகின்றனர்.

இன்று மலையாளிகளிடையே குல தெய்வத்திற்கு முடிகொடுத்துவிட்டுப் பின்னர் தனக்குப் பிடித்தமான பெயர்களையும், சினிமா நட்சத்திரங்களின் பெயர்களையும் வைத்துக் கொள்ளும் வழக்கம் காணப்படுகிறது. என்ன பெயர் வைக்க வேண்டும் என்றாலும் தங்களுடைய குல தெய்வங்களுக்கு முடி கொடுத்த பின்னரே வைக்கின்றனா். அவ்வாறு செய்யவில்லை என்றால் குல தெய்வக் குற்றங்களுக்குக் குழந்தை ஆளாகிவிடும் என்று நம்புகின்றனர். ஒரு சிலர் தன்னுடைய மூதாதையர்களின் நினைவாக அவர்களின் பெயரையே வைத்துக் கொள்ளும் மரபும் காணப்படுகிறது. இந்த மரபு சங்கக் காலம் முதற்கொண்டே இருந்துள்ளதைப் பின்வரும் பாடல்கள் மூலம் அறியலாம்.

"அகன் பெருஞ்சிறப்பின் தந்தை பெயரன்" - (ஐங். 403:3)

"முதல்வன் பெரும்பெயர் முறையுளிப் பெற்ற<br>புதல்வற் புல்லிப் பொய்த்துயில் துஞ்சும்" - (கலி. 75 : 24-25)

"மேதக்க எந்தை பெயரனை யாம் கொள்வோம்'' - (கலி.81 : 35)

இவ்வாறு தங்களுடைய முன்னோர்களின் பெயர்களை வைத்தால் அவரைப் போலவே ஆற்றலும், குணமும், வீரமும், திறனும் கொண்டவர்களாக குழந்தைகளும் இருப்பார்கள் என்று நம்புகின்றனா். மேலும், பாட்டன் பெயர், தந்தை பெயர் பெறும் குழந்தைகள் அக்குடியிருப்புகுரிய உரிமையையும், மரியாதையையும் பெறுவோராக விளங்குகின்றனர்.

மலையாளிகள் பெயரிடுவதற்கு என்று ஒரு சில வரைமுறையை வைத்துள்ளனர். இதனால் இவர்களுடைய பண்பாடு மேலும் காக்கப்படுகிறது. ஆனால், இன்று வளர்ந்து வரும் இளைய தலைமுறைகள் தன்னுடைய முன்னோர்களின் பெயர்களை வைக்க தயக்கம் காட்டுகின்றனர். சிலர் சிறந்த எழுத்தாளர்கள், அரசியல் தலைவர்கள், போரட்டக்காரர்கள், சினிமா நடிகா்கள் என்று தனக்குப் பிடித்தமானவர்களின் பெயர்களை வைத்துக் கொள்ள முன் வருகின்றனர். இதனால் இவர்களின் மரபார்ந்த பண்பாடு அழிய வாய்ப்புள்ளது.

### 6.1.3. காது குத்துதல்

மலையாளிகள் ஆண் குழந்தைகளுக்கும், பெண் குழந்தைகளுக்கும் காது குத்துகின்றனர். இதற்கு என்று இவர்கள் விழா எடுப்பது இல்லை. ஒரு நல்ல நாள் பார்த்து குலத் தெய்வக் கோவிலுக்குத் தம் உறவினர்களுடன் செல்கின்றன். குலத் தெய்வத்திற்குத் தன்னால் முடிந்த சிறு காணிக்கையைப் பணமுடிப்பாகக் கொடுக்கின்றனர். அதன்பின்னா் பூசாரி அங்கு கிடைக்கக் கூடிய 'காரமுள்' என்ற ஒரு வகை முள்ளைப் பயன்படுத்தி காது குத்துகின்றார். இதே போல அவ்வின ஆண்களுக்கும் காது குத்துகின்றனர். காது

குத்தும்போது சாமிக்கு மொட்டையிடுவதாக வேண்டியிருந்தால் மொட்டையடித்துப் பின்னர்க் காதுகுத்திக் கொள்கின்றனர்.

மலையாளிகள் காது குத்தாமல் கல்யாணம் செய்து கொள்வதில்லை. இன்று சிலர் சமவெளிப் பகுதிகளுக்குச் சென்று ஆசாரிகளிடம் மூக்குக் குத்திக் கொள்வதும் உண்டு. மூக்குக் குத்துபவர்களுக்கு ரூ.101, வெற்றிலை, பாக்கு மற்றும் ஒரு வேளை உணவும் கொடுக்கின்றனர். காதில் புண் ஆறும் வரைக்கும் சிறு குச்சியை ஓட்டைக்குள் செருகி வைத்திருக்கின்றனர். பொங்கல், பண்டிகைக் காலங்களில் மட்டும் காதணி வாங்கி அணிந்து கொள்கின்றனர்.

### 6.1.4. பூப்புச் சடங்கு

“பூப்பு என்ற சொல் பூத்தல், மாதவிடாய் ஆகிய பொருள்களைக் குறிக்கும். வயசுக்கு வந்திட்டாள், அல்லது சமைஞ்சிட்டாள், வீட்டிற்கு விலக்காகிவிட்டாள் என்ற தமிழ்ச் சொற்கள் பூப்பெய்தியதைக் குறிக்கும் சொற்களாகும். பெண்ணின் கருப்பைச் சளிப்படலத்திலிருந்து சளியும் தீட்டுறு, நீர்மங்களம் கொண்ட உறைய இயலாத குருதி வெளியேறுவதையே பூப்பு”[9] என்பர். “பூப்பெய்தல் என்பது திருமணத்திற்குரிய அல்லது பாலுணர்வுக்குரிய முழுத்தகுதியையும் நிறைவு செய்கிறது”[10]. என்று ‘பட்டாச்சாரியா’ கூறுவதாகத் ‘தர்மராஜ்’ கூறுகின்றார். “பெண்கள் பருவம் எய்துவதைக் குறிக்கப் பின்வரும் சொற்கள் தமிழ்நாட்டில் வழக்கில் உள்ளன. பூத்தல், புஷ்பவதியாதல், சமஞ்சிட்டாள், பெரியமனுஷியாயிட்டாள், ‘ரெது’ (ருது) வானாள், மேஜராயிட்டாள், திரண்டிட்டாள், வயசுக்குவந்திட்டாள், ஆளாகிவிட்டாள், சடங்காகிவிட்டாள் என்பனவாகும்”[11] என்று ஆ.சிவசுப்பிரமணியன் கூறுவதாக இராஜேந்திரன் அவர்கள் குறிப்பிடுகின்றார். மலையாளிகள் பெண் வயதுக்கு வருவதை ‘வீட்டிற்குத் தூரம் போய்ட்டாள்’ வெளியே போய்ட்டாள்’ ‘பொளக்காரிசி’ என்று பலவாறு கூறுகின்றனர்.

மலையாளி இனப் பெண்கள் பூப்பாகிவிட்டால் அவர்களை ஊருக்கு ஒதுக்குப்புறமாக அமைக்கப்பட்டிருக்கும் தனிக் குடிசையில் விட்டுவிடுகின்றனர். இக்குடிசைக்குப் ‘பொல’ குடிசை என்று பெயர். இரவில் இவர்களுக்குக் காவலாக இவர்களின் தாய் அல்லது பாட்டிமார்கள் உடன் தங்குகின்றனர். மலையாளியினப் பெண் பூப்பாகிவிட்டால் ஐந்து நாட்கள்வரை பெரிய தீட்டாகக் கருதுகின்றனர். பூப்பாகிய ஐந்து நாட்கள் வரையிலும் பெண்கள் அக்குடிசையில்தான் இருக்க வேண்டும்.

முதல் முதலாகப் பூப்படைந்த பெண்ணைக் குடிசையில் விடும்போது அவளுக்குப் பாதுகாப்பாக ஒரு கத்தியும், குடிசையின் கூரையில் வேப்பிலைக் கொத்தையும் செருகி வைக்கின்றார்கள். குடிசையைச் சுற்றிலும் எப்போதும் 'தீயசக்தி' சுற்றிக் கொண்டே இருக்கும் என்றும், அது குடிசைக்குள் வராமல் இருக்கவும், பூப்படைந்த பெண்ணைத் தாக்காமல் இருக்கவும் இவை வைக்கப்படுவதாகக் கூறுகின்றனர்.

திருமணமான பெண்கள் பூப்படைந்து தனிக்குடிசையில் இருக்கும்போது அப்பெண்ணின் கணவர் அவளுக்கு வேண்டிய உணவு, போன்றவற்றைக் கொண்டுவந்து கொடுக்கின்றார். குழந்தை உள்ள பெண்கள் பூப்படைந்து விட்டாள் குழந்தையைக் கொண்டு வந்து பால் கொடுத்த பிறகு வீட்டிற்கும் எடுத்துச் சென்று விடுகின்றனர். இது குழந்தை, தாயின் உடல்நிலையைப் பொறுத்துச் செய்கின்றனர். சில குழந்தைகள் தாயுடனும் இருப்பதும் உண்டு. அவர்களுக்குத் தேவையான பொருட்களை அங்கேயே கொண்டுபோய் கொடுப்பார்கள். அங்கு ஐந்து நாட்கள் வரை சமைத்துச் சாப்பிட வேண்டும். மேலும், அவ்விடத்தில் ஒரு பாய், உணவு உண்பதற்கான பாத்திரம், நீர் அருந்துவதற்கான ஒரு சிறு பாத்திரம் போன்றவற்றை வைத்திருக்கின்றனர்.

பூப்படைந்த பெண்ணை ஆண்களின் பார்வை படாமல் ஒரு குடிசையில் தங்கவைத்திருப்பர். அவர் உடல் தூய்மையாகாமல் வீட்டிற்குள் அனுமதிப்பதில்லை., யாரிடமும் பேசமாட்டார்கள் வீட்டு வேலை, நிலத்து வேலை, ஆடு, மாடு மேய்த்தல் போன்ற எந்தச் வேலைகளையும் செய்யமாட்டார்கள். இந்நிலை சங்கக் காலத்திலேயே கடைப்பிடிக்கப்பட்டிருந்த ஒரு வழக்கமாகும். "பெண்கள் பூப்புற்றிருக்கும் நாட்களில் வீட்டுப் பண்டங்களைத் தொடாமல் ஒதுங்கியே இருப்பார்கள். இவர்கள் 'காலந்தொடா மகளிர்"[12] எனப்படுவர்.

ஐந்தாம் நாள் முடிந்ததும் முதலாவதாக பூப்படைந்தப் பெண்ணை வெந்நீர் கொண்டு நீராட்டி புத்தாடை அணிவித்து வீட்டிற்குள் சேர்த்துக் கொள்கின்றனர். வீட்டிற்குள் வரும்போது அவள் உடுத்திருந்த துணிகளையும் தூய்மைப்படுத்தித் துவைத்து எடுத்துக் கொண்டு வருகின்றனர். பத்து நாட்கள் கழிந்த பிறகுதான் சாமிகும்பிடுதல் போன்ற சடங்குகளில் கலந்து கொள்கின்றனர். பூப்புக் காலம் முடிந்து வீடு திரும்பும் அன்று சாமை, தினை, அரிசிசோறு சமைத்து அப்பெண்ணிற்குக் கொடுக்கின்றனர். மேலும், தினைமாவு புட்டு, கழி, ரொட்டி, கீரை போன்ற சத்தான உணவுப் பொருட்களைச் செய்தும் கொடுக்கின்றனர். இந்த சத்தான உணவுகள் பூப்படைந்த நாட்களில் அப்பெண்ணிற்கு ஏற்பட்ட உதிரப்போக்கைச் சரிசெய்தல் பொருட்டும், உடல் வலிமை பெறுதல் பொருட்டும் கொடுக்கப்படுகிறது.

மலையாளிகள் பூப்படைந்த பெண்ணிற்கு ‘மஞ்சள் நீராட்டு’ மாமன், மச்சான சீர் போன்ற சடங்குகள் செய்வதில்லை, காரணம் இவர்களின் பொருளாதாரக் குறைபாடு ஆகும். வசதியுள்ள சிலர் மட்டும் புத்தாடை வாங்கிக் கொடுப்பது உண்டு. தங்களுடைய தேவைகளுக்காக மட்டுமே சேமித்து வாழ்வைக் கழித்துவரும் இவர்களிடம் அனைவரையும் வரவழைத்து விருந்து உபசரிப்பு செய்வது என்பது இயலாத ஒன்றாகவே இருக்கிறது.

### 6.1.4.1. குடிசையை எரித்தல்

மலையாளிகள் முதன் முதலாக பூப்படைந்த காலம் முடிந்து, பெண்ணை வீட்டிற்கு அழைத்துச் சென்ற பிறகு, அப்பெண் தங்கியிருந்த குடிசையை எரித்து விடுகின்றனர். அவள் பயன்படுத்திய பாய் போன்றவற்றையும் எரித்துவிடுகின்றனர். இப்பழக்கம் ‘இரவாளர்’ ‘குடுகுடுப்பைக்காரர்’ ‘குறவர்’ போன்ற பழங்குடி மக்களிடமும் இருந்துள்ளன என்பதை அறியமுடிகிறது. இவ்வாறு எரிப்பதால் குடிசையில் உள்ள தீட்டு அழிந்துவிடுவதாக நம்புகின்றனர். குடிசை தீயில் எரிந்து சாம்பலான பின்பு, அக்குடிசையை எரித்தவர்கள் வெந்நீரில் குளித்துவிட்டுதான் வீட்டிற்குள் வருகின்றார். ஏன் எனில் குடிசையை எரித்த அவரும் தீட்டுப்பட்டவராகக் கருதப்படுகிறார். இவ்வாறு பருவடைந்த பெண்கள் தங்கியிருந்த குடிசையைத் தீயிடும் பழக்கம் தென்னிந்தியப் பழங்குடிகளிடையே பரவலாகக் காணப்படும் ஒன்றாக இருக்கின்றது.

பூப்படைந்த பெண்ணைத் தனித்து இருக்கச் செய்வதும், அவள் தங்கியிருந்த குடிசையை எரித்து விடுவதும் பெண்ணைக் கெட்ட ஆவிகள் வந்து பிடித்துக் கொள்ளாமல் இருப்பதற்காகவே என்று கூறுகின்றனர். தீய ஆவிகள் குடிசையிலிருந்து பெண்ணுடன் ஊருக்கும் வீட்டிற்கும் வந்துவிடக் கூடாது என்பதற்காக வெந்நீர் வைத்து நீராடி, வீட்டைச் சாணத்தால் மெழுகிய பின்னர் வீட்டிற்குள் அழைக்கின்றனர்.

இன்று மலையாளி இனப் பெண்களிடையே இத்தகைய கட்டுப்பாடுகள் தளர்ந்துவிட்டன. ‘பொல குடிசை’ என்பது பல பகுதிகளில் காண முடியாத ஒன்றாக மாறிவருகிறது. பூப்படையும் காலங்களில் பெண்கள் வீடுகளிலுள்ள வெளித் திண்ணைகளில் தங்கிக் கொள்கின்றனர். பூப்புக் காலம் முடிந்ததும் குளித்துவிட்டு வீட்டிற்குள் செல்கின்றனர். வீட்டைச் சாணம் போட்டு மெழுகி சுத்தம் செய்கின்றனர். வீட்டு வேலைகளிலும் ஈடுபடுகின்றனர்.

### 6.1.5. திருமணச் சடங்கு

தொடக்கக் காலத்தில் விருப்பம்போல் வாழ்ந்து வந்த மனிதன், நாகரிக வளர்ச்சியினால், திருமணத்தின் வாயிலாக குடும்ப உறவுகளை ஏற்படுத்திக் கொண்டு வாழத் தொடங்கினர். பண்டையத் தமிழர்களும் சடங்குகள் இன்றியே திருமண இல்வாழ்க்கையில் ஈடுபட்டு வந்துள்ளனர். அதன்பின்னர் இச்செயல்பாட்டில் பொய்யும், வழுவும் அதிகரிக்க அவைகளைக் களைதற் பொருட்டுச் சடங்குகள் என்ற பெயரில் சில விதிமுறைகளை ஏற்படுத்தினர். இதனைத் தொல்காப்பியம்

''பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம் என்ப'' (தொல். நூற்பா: 1091)

என்று கூறுகின்றது. எனவே, இக்குற்றங்களுக்குப் பின்னரே திருமண விதிகளைப் பின்பற்ற வேண்டும் என்ற நியதியும் உருவாகியிருக்கலாம் என்ற கருத்தும் நிலவுகிறது. திருமணம் என்ற சடங்கு மனித வாழ்வில் முக்கிய பங்கை வகிக்கின்றது. உலக வாழ்வில் ஆணும், பெண்ணும் இணைந்து வாழ்வதன் பொருட்டுத் திருமணம் என்ற நிகழ்வு நடைபெறுகின்றது. உலகில் உள்ள அனைத்துச் சமூகத்திலும் திருமணச் சடங்கு பல்வேறு மாற்றங்களைக் கொண்டு காணப்படுகிறது.

'திருமணம் என்பது ஆயிரங்காலத்துப் பயிர்', 'ஆயிரம் பொய் சொல்லியாவது ஒரு கல்யாணத்தை நடத்திட வேண்டும்' என்பர் பெரியோர். 'வீட்டைக் கட்டிப்பார் கலியாணத்தை நடத்திப்பார்' என்பது பழமொழி. 'இருமணம் இணைந்தால் திருமணம்' என்பதும் முன்னோர் வழக்கு. ஒரு திருமணம் நடக்க வேண்டுமானால் எத்தனைப் பணிகள் நிகழ வேண்டியிருக்கின்றன என்பதை, இம்முதுமொழிகள் உணர்த்துகின்றன. இக்கருத்துகளின் வழி ஒரு மனிதனைப் பக்குவமுள்ள மனிதனாகவும், பண்புள்ள மனிதனாகவும், முழுமையான மனிதனாகவும் மாற்றுவது திருமணம் என்பதை உணர்கிறோம். சவ்வாதுமலை மலையாளிகள் பெற்றோர்களால் முடிவு செய்யப்படும் திருமணத்தையே பெரிதும் விரும்புகின்றனர். இவர்களின் திருமண முறைகளைப் பின்வருமாறு பகுக்கலாம்.

1. திருமண உறவு முறைகள்
2. பெண் கேட்கும் முறை
3. பரிசம் போடுதல்
4. கடவுள் வழிபாடு
5. அழைப்பிதழ் பண்பாடு
6. நலங்கு
7. மணப்பந்தல்

8. தாலிகட்டுதல்
9. மணமக்கள் விளையாட்டு
10. மறுமுசி போதல்

### 6.1.5.1. **திருமண உறவு முறைகள்.**

மலையாளி இனப் பழங்குடி மக்கள் தங்களுடைய இனத்தைச் சார்ந்த தங்களின் நெருங்கிய உறவுகளாக மதிக்கப்படுகின்ற தாய்மாமன் மகள், அத்தை மகள், அக்கா மகள், தூரத்து மண உறவு உள்ளவர்களாக இருப்பின் அதே சாதியைச் சேர்ந்த வேற்றுக் குலத்தில் திருமணம் செய்வதும், செய்து கொடுப்பதுமாகிய மரபான வழக்கங்களை உடையவர்களாக இருக்கின்றனர். இத்தகைய மணங்களுக்குக் காரணம் கேட்டபொழுது 'ஒரேவகை இரத்த உறவுடையவர்களுக்கிடையே மணவுறவு வைத்துக் கொண்டால் வம்சம் விருத்தியாகாது என்றும், குழந்தை பாக்கியம் கிடைக்காமல் போகும் என்றும் கூறுகின்றனர்'. இந்த வழக்கம் இப்பழங்குடியின மக்களிடம் முன்பிருந்தே இருந்து வருவதை அறியமுடிகின்றது.

### 6.1.5.2. **பெண் கேட்கும் முறை**

மலையாளி இன மக்களிடையே பெண் பார்த்தல் என்பது பெண்ணின் குணங்கள், தோற்றப் பொலிவு, குடும்பநிலை, அக்குடுப்பத்தின்மீது ஊரார் வைத்திருக்கும் மதிப்பு போன்றவற்றைப் பார்த்து பெண் எடுக்கும் மரபு காணப்படுகிறது. பெண் வீட்டாரிடம் பெண் கேட்கும் பொழுது பெண் வேண்டும் என்று நேரடியாகக் கேட்பதில்லை. மாறாக 'உங்களிடம் கொஞ்சம் நிலம் உள்ளதாம், அந்த நிலத்தை உங்களிடம் கேட்டு வேளாண்மை செய்யலாம் என்று வந்திருக்கிறோம்' என்று ஜாடையாகவே கேட்பார்கள். பெண்வீட்டார் அதனைப் புரிந்து கொண்டு 'நீங்கள் அந்த முள்ளுக்காட்டை வெட்டமாட்டீர்கள்' என்று கூறுவர். பின்பு வீட்டிலுள்ள அனைவரையும் கேட்டுவிட்டுச் சொல்லுகிறோம் என்று பெண் வீட்டார் கூறுகிறார்கள். பையன் வீட்டார் மீண்டும் மற்றொரு நாள் வந்து 'நிலம் வேண்டும்' என்று கேட்கிறார்கள், பெண் வீட்டார் 'எங்களிடம் சின்ன காடுதான் இருக்கிறது அதை நல்லமுறையில் வேளாண்மை செய்ய வேண்டும்' என்று பெண்வீட்டார் சொல்லுகிறார்கள். 'நாங்கள் நல்ல முறையில் நிலத்தைப் பயிர் செய்கிறோம்' என்று மாப்பிள்ளை வீட்டுக்காரர்கள் கூறுகிறார்கள். இதன் பின்னரே இருவீட்டாரும் திருமணத்திற்குச் சம்மதிக்கிறார்கள்.

மலையாளி இனப் பழங்குடி மக்களிடம் உள்ள பெண் கேட்கும் வழக்கத்தினைப் போன்றே மலசர், இராவளர் போன்ற பழங்குடி இன மக்களிடமும் இருப்பதை த.கவிதா அவர்கள் மலசர் பழங்குடிகள் என்னும் நூலில் குறிப்பிடுகின்றார். இவற்றை நோக்குங்கால்

பழங்குடி மக்களிடம் பெண் கேட்கும் மரபானது மிகவும் பழமையான பண்பட்ட மரபாக இருந்து வருவதை அறிந்துக்கொள்ள முடிகின்றது.

### 6.1.5.3. பரிசம் போடுதல் (பரியம்)

பெண்வீட்டாருக்கும் ஆண் வீட்டாருக்கும் இடையே ஏற்படுகின்ற திருமண ஒப்பந்த நிகழ்ச்சியினைப் ‘பரிசம் போடுதல்’ ‘நிச்சய தாம்பூலம்’ ‘பரியக்கட்டு’ என்று பல்வேறு சொற்கள் வழக்கில் இருந்து வருகின்றது. தற்காலத்தில் பரியம் என்பது வரதட்சணையாக பிற சமுதாயங்களில் உருமாறியிருக்கின்றது. இன்று நாகரிகவாசிகள் என்று சொல்லிக் கொள்ளும் பலரிடம் வரதட்சணை என்பது கொடும் சமுதாய நோயாக மாறி பெண் குழந்தைகளையும், பெண்ணைப் பெற்ற பெற்றோரையும் பயமுறுத்தி வருகிறது. ஆனால், பழங்குடி இனமான மலையாளிகளிடையே ஆண்தான் பெண்ணுக்குப் பரிசம் போட்டு பெண் எடுக்க வேண்டும் என்பது இவர்களின் வழக்கமாகும்.

ஆண் வீட்டாருக்குப் பெண்ணைப் பிடித்திருந்தால் திருமணத்தை மாப்பிள்ளை வீட்டிலும், நிச்சயத்தை பெண் வீட்டிலும் நடத்துகின்றனர். ஒரு குறிப்பிட்ட நாளில் நிச்சயம் (நிச்சயதார்த்தம்) வைத்துக்கொள்ளலாம் என்று முடிவு செய்து, மாப்பிள்ளை வீட்டார் அந்த நாளில் தன் உற்றார் உறவினர், ஊர்ப் பொதுமக்கள் அனைவரையும் அழைத்துக்கொண்டு பெண் வீட்டிற்குச் வருகின்றனர். வரும்போது பெண்ணிற்குத் தேவையான கண்ணாடி, சீப்பு, மஞ்சல், பவுடர், கம்மல், மூக்குத்தி போன்ற பொருட்களையும் வாங்கி வருகின்றனர். பெண் வீட்டார் மாப்பிள்ளை வீட்டாரை இன்முகத்துடன் வரவேற்று ‘பாணக்கம்’ (வெள்ளம் கலந்த நீர்) கொடுக்கின்றனர். பின்னர் நல்ல நேரம் பார்த்துத் தட்டு மாற்றி நிச்சயம் செய்கின்றனர். நிச்சயத்தின் போது மோதிரம் அணிவித்து உறுதிசெய்து கொள்கின்றனர். மேலும், மாப்பிள்ளை வீட்டார் இரண்டு ஊர்க்காரர்கள் முன்னிலையில் தாம் கொண்டுவந்த பரியப் பணத்தைக் கொடுக்கின்றனர். இருபது வருடங்களுக்கு முன்னர் மோதிரம் மாற்றும் வழக்கமில்லை. பரியப்பணம் 12 (பனிரெண்டு) கால் ரூபாயாக இருந்து பத்து வருடங்களுக்கு முன்னர் ஐநூறு, எழுநூறு என அதிகரித்தது. அவை இன்று ஒரு நாடுகளுக்கு உட்பட்ட கிராமங்களுக்குள் பெண் எடுத்தால் ஐந்தாயிரம் ரூபாயாகவும், நாடுவிட்டு நாடு சென்று பெண் எடுத்தால் ஏலாயிரம் ரூபாய்யாகவும் பரியப்பணம் வாங்கப்படுகிறது. அத்துடன் தானியங்கள் (சாமை, கேழ்வரகு, கம்பு, மலை நெல்) மற்றும் ஆடுகள், மாடுகள், எருமை மாடுகள் போன்றவற்றையும் பெண் வீட்டாருக்குக் கொடுத்து பெண் எடுக்கும் மரபு இருந்து வருகிறது. இம்முறை சங்ககால மக்களிடையேயும் இருந்துள்ளதை

"தருமணல் தாழப்பெய்து, இல்பூவல் ஊட்டி,
எருமைப் பெடையொடு, எமர் ஈங்கு அயரும்
பெருமணம்'' (கலி. 144: பா.எ.12-14)

என்ற வரிகள் மூலம் அறிய முடிகின்றன. இவ்வழக்கத்தை அப்படியே கடைப்பிடித்து வருகின்ற இனமாக மலையாளி இனப் பழங்குடிகள் காணப்படுகின்றனர். பெரும்பாலான பழக்குடி மக்களிடையேயும் பெண்ணுக்கு பரிசம் போட்டுத் திருமணம் செய்யும் வழக்கமே உள்ளது. பரிசம் போடப்பட்ட அன்றே திருமணத் தேதியையும் குறித்து விடுகின்றனர்.

### 6.1.5.4. கடவுள் வழிபாடு

திருமணத்திற்கு பின்பு குடும்ப வாழ்வை ஏற்க இருக்கின்ற மணமக்களின் எதிர்கால வாழ்வு சிறப்பாக அமைய வேண்டும் என்றும், அவர்கள் வாழ்வில் எவ்வித குறைபாடுகளும், இடையூறுகளும் இன்றி பிள்ளைப் பேறு கிடைக்க வேண்டும் என்றும் வேண்டிக்கொண்டு, திருமணத்திற்கு முன்பே ஊர்த்தெய்வங்களுக்கும், குலதெய்வங்களுக்கும், குடும்ப தெய்வங்களுக்கும் சென்று பொங்கல் வைத்து வழிபட்டு வருகின்ற மரபை இப்பழங்குடி மக்களிடையே காணமுடிகின்றது.

### 6.1.5.5. அழைப்பிதழ் பண்பாடு

மலையாளிகள் ஆரம்ப காலங்களில் திருமணம் நடைபெறும் நாள் குறித்த செய்தியைத் தங்களுடைய உறவினர்களுக்கும், மற்றவர்களுக்கும் நேரில் சென்று வெற்றிலை, பாக்கு வைத்து மணமக்கள் வீட்டார் அழைத்துள்ளனர். தம் ஊரைச் சார்ந்தவர்களுக்கும் அவ்வாறே 'தாம்பூலம்' கொடுத்துத் திருமணத்திற்கு அழைக்கும் மரபு இருந்துள்ளது. ஆனால், இன்றைய நவின உலகில் பொருளாதாரத்தில் மிகவும் பின்தங்கியவர்களும் அழைப்பிதழ் அடித்துத்தான் திருமணத்தை நடத்துகின்றனர். திருமண அழைப்பிதழை அச்சடித்து வீட்டிற்கு எடுத்து வந்ததும் அவரவர்கள் தங்களின் குலதெய்வங்களின் முன்பு வைத்து படைத்த பின்பு, பிறருக்குக் கொடுக்கும் வழக்கம் இம்மக்களிடம் இருந்து வருகின்றது.

### 6.1.5.6. நலங்கு

திருமணத்திற்கு இரண்டு நாட்களுக்கு முன்பே மணமக்களுக்கு அவரவர் வீட்டில் நலங்கு வைத்து விருந்து உபசரிக்கும் மரபு மலையாளி இனப்பழங்குடி மக்களிடம் காணப்படுகிறது. நலங்கு வைப்பது, மணமக்கள் தங்களது இல்லற வாழ்வு தொடங்குவதற்கான ஆயத்தம் ஆக்கல் செய்யும் ஒரு சடங்கு ஆகும். இஃது ஒரு மகிழ்ச்சியான நிகழ்ச்சி. மணமக்கள் சமுதாயத்தில் கலந்து பழகும் மனநிலையை

வளர்ப்பது. மணமக்களை வீட்டின் நடுவில் கிழக்குத் திசை பார்த்தார் போல் ஒரு மனையில் உட்கார வைத்து ஒருவருக்கொருவர் சந்தனம் கலந்த பல மூலிகைச் சாற்றைத் தலை முதல் உள்ளங்கால் வரை பூசி விளையாடுகின்ற மரபு காணப்படுகிறது. இந்த சடங்கில் ஊர் பொதுமக்கள், உறவினர்கள் அனைவரும் தவராமல் கலந்துக்கொள்கின்றனர். வருபவர்களுக்கு வெல்லம், பச்சை அரிசி மாவு கலந்த அடை, அதர்சம், போன்றவைகள் கொடுக்கப்படுகின்றன. மேற்கண்ட மூலிகையை மணமக்களின் உடல்களில் பூசுவதின் மூலம் அவர்கள் இல்லற வாழ்வில் ஈடுபடுவதற்கான உடல் தகுதியினைப் பெற்றுவிடுகின்றனர் என்கின்றனர்.

### 6.1.5.7. மணப்பந்தல்

மலையாளி இனப் பழங்குடி மக்கள் திருமணத்திற்காகப் அவரவர் இல்லத்திற்கு முன்பு பந்தல் இடும் பழக்கம் காணப்படுகிறது. திருமணப்பந்தல் அமைப்பதற்கு முன்பு முகூர்த்தக்கால் நடும் பழக்கத்தினைக் கொண்டுள்ளனர். திருமணம் நடைபெறுவதற்கு மூன்று நாட்களுக்கு முன்பாக முகூர்த்தம் நடைபெறுவதற்குரிய இடத்தின் வட கிழக்கு மூலையில் பச்சை முங்கில் கால் ஒன்று வெட்டி, அதற்கு மஞ்சள், சந்தனம், குங்குமம் வைத்து முதல் அரசாணைக்கால் நடுவது இவர்களின் மரபாக உள்ளது.

முதன் முதலாக நல்லறமாகிய இல்லறத்தை ஏற்க இருக்கின்ற மணமக்களின் திருமணம் ஒரு பந்தலின் கீழ் நடப்பதால் பந்தலுக்கு எவ்விதத் தீங்கும் நடந்துவிடக் கூடாது, திருமணம் மங்களகரமாக நல்ல முறையில் நடைபெறவேண்டும் என்று இறைவனை வேண்டி பந்தலுக்குரிய முதல் காலினை நட்டுப் பந்தல் அமைக்கின்றனர். அதன் பின்னர் திருமணத்திற்கு முதல் நாள் மணமகனின் வீட்டின் முன்பு பந்தல் அமைத்து காட்டு மலர்கள் கொண்டு அலங்கரிக்கின்றனர்.

மணப்பந்தலுக்கு நடுவில் மணமக்கள் அமரும் மணமேடையை அமைத்து அதன் அடியில் நெல்லோ (அ) அரிசியோ இடுவர்; இ∴து அவர்கள் வாழ்வு நெல்லுக்கும் அரிசிக்கும் சிறிதும் குறைவு இன்றி அமைய வேண்டும் என்பதைக் குறிப்பதாகும்.

'நிறை குடங்கள்' (சாலும் கரகம்) மணமக்கள் இருவரின் இல்லற வாழ்க்கை நிறைவானதாக அமைய வேண்டும் என்பதற்கு அறிகுறியாக மணப்பந்தலில் மூன்று நிறைகுடங்கள், மங்கலத் தோற்றத்துடன் மணமேடைக்கு அருகில் வைக்கப்படுகின்றன. இக்குடங்களில் மணமகள் ஆற்றுக்குச் சென்று நீர் கொண்டுவருகின்றாள். இந்நிகழ்வு வாழ்க்கையில் ஒரு பெண் குடும்பம் செய்ய வேண்டிய தகுதிப்பாட்டைப் பெற்றுவிட்டாள்

என்பதைச் சடங்குகளின் வழி அனைவரும் அறிந்துக்கொள்ள வேண்டும் என்பதற்காகப் பொதுச் சிந்தனை மரபுகள் அடிப்படையில் உருவாகியிருக்கலாம் என்று கருதமுடிகின்றது.

மணமகன் மணமகளுக்குத் தாலிகட்டி முடித்த பிறகு மணப்பந்தலில் வைக்கப்பட்டுள்ள முளைவந்த நவதானியங்களை, மேளதாளத்துடன் ஊரிலுள்ள ஆற்றங்கரைக்கு எடுத்துச் செல்கின்றனர். அங்கு பாத்திகள் அமைத்து மணமகள் நவதானியங்களை எடுத்துத் தர மணமகன் அதை வாங்கி பாத்தியில் விதைத்து வணங்குகின்றனர். இம்மரபு மணமக்கள் ஒன்று பலவாக வாழ்வில், அறிவில், திறமையில், ஆற்றலில், செல்வத்தில், சிறப்பில், பிறவற்றில் இனி திளைக்க வேண்டும் என்ற நோக்கத்தின் அடிப்படையில் உருவாகியது என்கின்றனர். மணப்பந்தலில் இருக்கும் அம்மியும், குலவியும் மணமக்கள் எதைச் செய்தாலும் ஒன்றாக இருந்து உறுதியுடன் செய்யவேண்டும் என்பதை நினைவுறு கூறுவதாக அமைகின்றது.

### 6.1.5.8. பெண் அழைப்பு

திருமணத்திற்கு முதல் நாள் மணமகன் வீட்டார் உறவினர்களுடன் பச்சரிசி, மஞ்சள், வெற்றிலை, பாக்கு, உப்பு, ஒரு புடவை போன்றவற்றைக் குலதெய்வங்களின் முன்புவைத்து கும்பிட்டு பெண்வீட்டிற்குக் கொண்டு வருகின்றனர். அவர்கள் பெண் வீட்டிற்கு வந்ததும், அரிசியை வைத்திருப்பவர்கள் மட்டும் வீட்டிற்குள் செல்கின்றனர். வீட்டில் ஒரு பாயை விரித்துப் கொண்டுவந்த பொருட்கள் அனைத்தையும் வைகின்றனர். அதன் பின்னர் கொண்டுவந்த வெற்றிலை, பாக்கு இரண்டையும் எடுத்து ஊர்மக்கள் முன்னிலையில் நலங்கு வைக்கப் பயன்படுத்தியத் தட்டில் ஐந்து முதல் ஏழு சுற்றுவரை அடுக்குகின்றனர். அதில் ஒவ்வொரு சுற்றும் ஒரு நாட்டைக் குறிப்பதாகும். ஏழு நாடுகளின் நாட்டாமைத் தலைமையில் இந்தத் திருமணம் நடைபெறும் என்பதை வெற்றிலை அடுக்கும் சடங்கு உணர்த்துகின்றன. கொண்டுவந்த புதுப்புடவையை மணப்பெண் கட்டிவருகின்றார். மணப்பெண் அந்த வெற்றிலை பாக்கை எடுத்து அங்குள்ளவர்களின் கையில் கொடுத்து, காலில் விழுந்து ஆசிப்பெருகின்றார். அதனையடுத்து கொண்டுவந்த தானியங்களை ஒரு இடத்தில் கொட்டி, மணமகள் முந்தானியால் அள்ளுகின்றச் சடங்கு நடைபெருகின்றது. இச்சடங்கு குடம்ப வாழ்க்கையை ஏற்க்க இருக்கின்ற மணப்பெண் பல்வேறு வேலைகளுக்குச் சென்று தாணியங்ளை சேகரித்து வரவேண்டும். என்பதன் அடிப்படையில் இந்த சடங்கை நிகழ்த்துகின்றனர். அதன் பின்னர் அனைவருக்கும் மாமிச உணவு உண்டு பெண்ணை மேளத் தாளத்துடன் மணமகன் வீட்டிற்கு அழைத்துச் வருகின்றனர்.

### 6.1.5.9. தாலி கட்டும் முன் செய்யும் சடங்கு

மலையாளிகள் மணமக்களின் முகூர்த்தப் பட்டுவேட்டி, பட்டுச்சட்டை, பட்டுப்புடவை போன்றவற்றை முகூர்த்த நேரத்திற்கு முன்பாகத் தங்களின் குலதெய்வத்தின் முன் வைத்து, வணங்கிய பின்னர் உடுத்துகின்றனர். மணமகன் குலதெய்வத்தை வழிபட்டு, தன் மாமனுடன் மணவறையை மூன்று முறை சுற்றிவந்து, மணமேடையின் இடது பக்கமாக அமருகின்றார். மணப்பெண்ணின் தாய்மாமன் பெண்ணுக்கு பட்டுப்புடவை உடுத்தி மணமேடைக்கு அழைத்து வருகின்றார். மனமேடையை மூன்றுமுறை சுற்றிவந்ததும், தாய்மாமன் மணப்பெண்ணை மணமேடையின்மீது தூக்கி வைக்கின்றார். மணப்பெண் தாய்மாமன் காலில் விழுந்து ஆசி பெற்று மணமகனின் வலது புறமாக அமருகின்றாள். நமது நாட்டுப்புறத் திருமணங்களில் மணமேடைக்குப் பெண்ணை மணமகனின் சகோதரி அல்லது முறை உள்ள பெண் உறவினர்கள் தான் அழைத்து வருவார்கள். ஆனால், சவ்வாதுமலை மலையாளிகளின் திருமணத்தில் மணப்பெண்ணை முறைமாமன் அழைத்து வருவது அவ்வினத்திற்குறிய தனித்தன்மையைக் காட்டுகின்றது.

### 6.1.5.10. தாலி கட்டுதல்.

மணமகன், மணமகளின் கழுத்தில் மனைவியாக ஏற்றுக் கொண்டதற்கு அடையாளமாக ஒரு மங்களக் கயிறைக் கட்டுவதை ‘தாலி கட்டுதல்’ என்று கூறுகின்றனர். மலையாளிகள் முன்பு மஞ்சல் கயிற்ரை மட்டும் தாலியாகப் கட்டிக்கொள்வது மரபாக இருந்துள்ளது. இன்று மணமகளுக்குக் கட்டப்படும் தாலி தேங்காய் மேல் சுற்றித் தேங்காய் ஆடாதபடி அரிசியின் மீது வைக்கப்படுகின்றன. அவையினர் தாலியைத் தங்கள் இருகரத்தாலும் தொட்டு, தூய சிந்தனையோடு வாழ்த்துவதற்கு ஏற்றபடி பொன் தாலி மேல்புறமாக அனைவருடைய கண்களிலும் தோன்றும்படி இருக்கும். திருமணத்திற்கு வந்தவர்கள் தாலியைத் தொட்டு வணங்கிக் கொடுத்தப் பின்னரே தாலிகட்டும் மரபு காணப்படுகின்றது. திருமணத்திற்கு இன்றியமையாத அடையாளமாக வந்தவர்கள் தாலியைத் தொட்டு வணங்குவதால் திருமணம் நடந்ததற்கு அவையினரே சான்றாகின்றனர்.

மலையாளியினப் பழங்குடிகள் திருமணத்தை அவர்களின் முன்னோர்களே முன் நின்று நடத்துகின்றனர். அதற்குப் பணமோ, பொருளோ வாங்குவது இல்லை. அதனை ஒரு சேவையாகக் கருதுகின்றனர். தாலி கட்டி முடிந்தவுடன் மணமக்களுக்கு நெறுங்கிய உறவினர்கள் தங்க நகைகளை அண்பளிப்பாகக் கொடுக்கின்றனர். பிறர் ‘மொய்’ (பணம்) எழுதுகின்றனர். திருமணத்திற்கு வந்தவர்களுக்கு மாமிசம்கலந்த உணவு பரிமாறுவது மரபாக இருக்கின்றது.

### 6.1.5.11. மணமக்கள் விளையாட்டு

மணமக்களின் தனிப்பட்ட திறமைகளைச் சோதிப்பதற்காக 'அம்மி மிதித்தல்', 'மோதிரம் மாற்றுதல்', குடத்துத் தண்ணீரில் மோதிரம், வளையல் போன்றவற்றைப் போட்டு எடுக்க வைத்தல், அரசானைக் காலுக்குச் சோறு ஊட்டுதல், குழந்தை போன்று பொம்மை செய்து இருவரையும் மாற்றி மாற்றி வாங்கச் செய்தல் போன்ற விளையாட்டுக்கள் மலையாளிகளின் திருமணங்களில் பின்பற்றி வருகின்றனர். இவ்விளையாட்டுக்கள் மணமக்களுக்குக் குடும்பம் நடத்துவது பற்றிய அச்ச உணர்வு நீங்கி குடும்ப வாழ்க்கையைத் திறமையான முறையில் முன்னெடுத்துச் செல்லுவதற்கும், இருவரில் யார் திறமையில், அறிவில், கூர்மை உடையவர்களாக இருக்கிறார்கள் என்பதை அறிந்து கொள்வதற்கும் ஒரு வாய்ப்பாக அமையும் என்கின்றனர்.

### 6.1.5.12. மறுமுசி போதல்

விளையாட்டுச் சடங்கு முறைகள் நடந்து முடிந்தவுடன் மாப்பிள்ளை, பெண்ணைப், பெண்வீட்டிற்கு அழைக்கும் சடங்கே **'மறுமுசி போதல்'** எனப்படுகிறது. மலையாளிகள் திருமணம் முடிந்ததும் மணமக்கள் இருவரையும் பெண்வீட்டிற்கு அழைத்து வருகிறார்கள். பெண்வீட்டு உறவினர்கள் மணமக்களுக்கு ஆரத்தி எடுக்கின்றார்கள். ஆரத்தி எடுப்பவர்களுக்கு மாப்பிள்ளை வீட்டார் ஒன்று, இரண்டு ரூபாய் தட்டில் போடவேண்டும் என்பது மரபாகும். ஆனால், இன்று வசதிக்கு ஏற்றவாறு ரூ.10 முதல் ரூ.50 வரை போடுகின்றனர். பின்னர் மணமக்களுடன் வந்தவர்களுக்கு விருந்து பரிமாறப்படுகின்றது. முதலிரவு பெண்வீட்டில் நடைபெறுகிறது. மூன்று அல்லது ஐந்தாம் நாள் முடிந்தபிறகு மாப்பிள்ளை வீட்டார் வந்து மணமக்களை அழைத்துச் செல்கின்றனர்.

### 6.1.6. இறப்புச் சடங்கு

மனிதர்களின் வாழ்வில் இறப்பு ஒரு முக்கிய பங்கு வகிக்கிறது. இறப்பு இயற்கையாகவோ அல்லது செயற்கையாகவோ நிகழ்கிறது. இறப்பினை எக்குடும்பத்தாரும் ஏற்பதில்லை. இறப்பு நிகழ்ந்த குடும்பம் தீட்டுப்பட்டதாகவே கருதப்படுகிறது. "இறப்பு மனித வாழ்வின் இறுதிநிலை என்றாலும், அதற்குப் பின்னர் மீண்டும் இவ்வுலகில் பிறக்கின்றனர் என்ற நம்பிக்கை உலகம் முழுவதிலுமுள்ள மக்களிடையே பரவலாகக் காணப்படுகிறது. இதன் காரணமாகவே மற்ற நிலைகளில் கடைப்பிடிக்கும் சடங்குகளைக் காட்டிலும் இறந்தவர்களுக்குச் செய்யும் 'ஈமச்சடங்குகள்' முக்கியத்துவம் பெறுகிறது. இறப்பு என்பது ஒரு முடிந்த முடிவன்று, அது இவ்வுலகத்திலிருந்து வேறொரு உலகத்திற்குச் செல்லுதல் ஆகும்"[13] என்று வாழ்வியற் கலைக்களஞ்சியம் கூறுகிறது. இந்நிலை பழங்குடியினர் முதல்

தமக்கென ஒரு நாகரிகத்தைக் கொண்டிருக்கும் பல்வேறு சாதிக் குழுவினர் வரை அனைவரிடமும் காணக்கூடிய ஒன்றாகும்.

மலையாளிகளில் ஒருவர் இறந்தவுடன் இறப்புச் செய்தியை அனைவருக்கும் தெரிவிக்கும் வகையில் ஒரு ஒற்றைவெடி வெடிக்கின்றனர். அவ்வாறு வெடிக்கச் செய்யும் கருவிக்குப் **'பொட்லி'** என்று பெயர். வெடிச்சத்தம் கேட்டவுடன் சுமார் பத்துக் கி.மீ. தூரத்தில் உள்ளவர்களும் இறப்பு நிகழ்ந்த செய்தியை அறிவார்கள். குடும்பத்தில் இருக்கும் ஒருவர் முதலில் இறப்புச் செய்தியை ஊர்க்கவுண்டருக்குத் தெரிவிப்பார். ஊர்க்கவுண்டர், நாட்சேவரை (ஓடு பிள்ளை) அழைத்து ஊரிலுள்ள அனைவருக்கும் இறப்புச் செய்தியைச் அறிவிக்கும்படி கூறுவார். உடனே ஊரில் உள்ள அனைவரும் இழவு நடந்த வீட்டுக்கு வந்துவிடுகின்றனர். பிறகு பிற ஊர்களுக்கும் உறவினர்களுக்கும் செய்தி சொல்வதற்காக ஆள் அனுப்பப்படுகிறது. பிற ஊர்களுக்குச் செல்பவர்களிடம், எந்த ஊர்களில் யார் யாரிடம் சொல்லவேண்டும் என்பதையும், யார், எப்பொழுது இறந்தார், எப்பொழுது எங்கு, அடக்கம் செய்கின்றனர் என்பதையும் ஒரு வெள்ளைத் தாளில் எழுதி கொடுத்து அனுப்புகின்றனர்.

#### 6.1.6.1. பால் ஊற்றுதல்

இறக்கும் நிலையில் உள்ள ஒருவருக்கு வாயில் பால் அல்லது தண்ணீர் ஊற்றுகின்றனர். அவ்வாறு செய்வதால் அவருடைய உயிர் எளிதில் பிரிந்து விடுகிறது. இறக்கும் நிலையில் உள்ள ஒருவர் யார் மீது மிகுந்த பாசமும் அன்பும் வைத்துள்ளாரோ அவர் வந்து பால் ஊற்றினால் உயிர் விரைவாகப் பிரியும் என்றும் நம்புகின்றனர். சான்றாக ஒரு ஆணின் உயிர் அவ்வாறு பிரியவில்லை என்றால் **'இந்த மகராசன் யாருக்காக உயிரை பிடித்துக்கிட்டு இருக்கானோ'** என்றும் புலம்புகின்றனர். இறந்தவுடன், தேங்காய் உடைத்து, எண்ணெய்விளக்கு ஏற்றி வைக்கின்றனர். கால் பெருவிரல்கள் இரண்டையும் இணைத்துக் கட்டுகின்றனர். காது மற்றும் மூக்கில் சிறு துணிகொண்டு அடைத்து விடுகின்றனர். ஒரு வெள்ளைத் துணியைத் தாடையில் போட்டு இழுத்துத் தலையோடுச் சேர்த்துக் கட்டி அதன் நெற்றியில் காசு ஒன்றை ஒட்டி வைக்கின்றனர். பின்னர் வீட்டின் நடுவில் பிணத்தை வைத்து அருகே நாலுபடி மரக்காலிலும், ஒருபடி நாழியிலும் சிதற சிதற நெல்லை நிரப்பி வைக்கின்றனர். விளக்கு ஒன்றில் எண்ணெய் ஊற்றி திரியேற்றி வைக்கின்றனர். இதனை **'நிறைவிளக்கு'** என்று கூறுகின்றனர்.

### 6.1.6.2. சந்தைக்கு அனுப்புதல்

மலையாளிகளில் ஒருவர் இறந்துவிட்டால் அன்று யாரும் வேலைக்குச் செல்வதில்லை. அனைவரும் இறப்பு நிகழ்ந்த வீட்டிற்கு வந்துவிட வேண்டும். வீட்டிற்கு ரூ.100 என வசூல் செய்து பூமாலை, வெடி பொருட்கள், வாசனைப் பொருட்கள் போன்றவற்றை வாங்கிவர இருவரைச் சமவெளிப் பகுதியில் உள்ள சந்தைக்கு அனுப்புகின்றனர். மற்றவர்கள் பாடைகட்டுவதற்கான மூங்கில், கம்பு போன்றவற்றைக் காட்டிற்குச் சென்று வெட்டிவருகின்றனர். ஊர்க்கவுண்டர் இறப்பு நிகழ்ந்த வீட்டிலிருந்து என்னென்ன வேலைகளை செய்யவேண்டும் என்பதைக் கவனித்துக் கொண்டிருப்பார்.

### 6.1.6.3. ஒப்பாரி

பெண்கள் அனைவரும் பிணத்தைச் சுற்றிலும் இருந்து கொண்டு ஒப்பாரிப் பாடல் பாடி அழுகின்றனர். சிலர் தங்களுடைய நெஞ்சினை அடித்துக்கொண்டும் அழுகின்றனர். ஒப்பாரிப் பாடலைத் தங்களுடைய உறவு முறைகளுக்குகேற்ப பாடுகின்றனர். இப்பாடல் அவருடைய நற்பண்புகள், குணங்கள், செயல்கள், திறமைகள் போன்றவற்றைக் குறிப்பிடுபவையாக இருக்கும்.

### 6.1.6.4. பாடை

இறந்தவர் வயதில் குறைந்தவராக இருந்தால் 'பச்சை மூங்கில்' வெட்டிப் பாடை கட்டுகின்றனர். வயதில் முதிர்ந்தவர்களாக இருந்தால் **'தேர்'** கட்டிப் பூக்களால் அலங்கரித்துப் பிணத்தை எடுத்துச் செல்கின்றனர். 'தேர்' கட்டும்போது அவரவர் வயதிற்கு ஏற்றார் போல் கட்டுகின்றனர். செவ்வாய் அல்லது சனிக்கிழமை நாட்களில் இறந்தால் பாடையுடன் ஒரு கோழிக்குஞ்சையும் கட்டி எடுத்துச் செல்கின்றனர். இது 'சனிப் பிணம் தனியே போகாது' என்ற பழமொழியை உணர்த்தவதாகக் காணப்படுகிறது.

### 6.1.6.5. மேளம்

மலையாளிகள் இறப்பு, திருமணம் ஆகிய நிகழ்வுகளில் மேளம் அடிப்பதில்லை. இதற்குச் சமவெளிப் பகுதியில் உள்ள 'தோட்டிக்குச்' (ஊர்த் தோட்டி) சொல்லி அனுப்பி அவர்களை வரவழைக்கின்றனர். இது இவர்களுக்கிடையில் போடப்பட்ட ஒப்பந்தம் ஆகும். மேளம் அடிப்பதற்கு ஒரு குறிப்பிட்ட தொகையைக் கொடுக்கின்றனர். மேலும் தோட்டிகள் இறப்புக்கு வருபவர்களிடமும் ரூபாய் ஐந்தோ, பத்தோ வாங்குவதும் உண்டு. இவ்வாறு வாங்கும் பணம் இறப்பு வீட்டார் கொடுக்கும் தொகையைவிட அதிகமாக இருக்கும்.

தோட்டிகள் பிணத்தைப் புதைக்கும் வரை உடனிருந்து மேளம் அடித்தல் தொழிலைச் செய்கின்றனர்.

### 6.1.6.6. குளிப்பாட்டுதல்

பிணத்தைக் குளிப்பாட்ட அருகில் உள்ள குளம், கிணறு, ஆறு போன்றவற்றிலிருந்து நீர் எடுத்துவருகின்றனர். நல்லெண்ணெயையும், சிகைக்காயையும் சேர்த்து கலக்கி இறந்தவரின் மனைவி, மகன்கள், மகன் வழிப்பேரன்கள், பேத்திகள், சகோதரர்கள், அவர்களது மனைவிகள், மகன்கள், அவர்களது மகன் வழிப்பேரன், பேத்திகள் ஆகியோர் பிணத்தின் தலையில் புறங்கையில் எண்ணெய்யையும், அரப்பையும் மூன்று முறை பிணத்தின் தலை முதல் கால் வரையில் தடவுகின்றனர். அதன் பின்னர் இளநீர், பால், சந்தனம், மஞ்சள் போன்றவற்றைக் கரைத்துப் பிணத்தின் மேலிருந்து கால் வரை தடவுகின்றனர். கல் அடுப்பில் சுடுதண்ணீர் வைத்து எடுத்துத் தலைமுதல் கால்வரை குளிப்பாட்டுகின்றனர். இறந்தவர் ஆணாக இருந்தால் தாய்மாமன் கொண்டுவந்த கோடியையும், பெண்ணாக இருந்தால் அவளது சகோதரர்கள் கொண்டுவந்த கோடியையும், எடுத்து உடல் முழுவதும் சுற்றி, பின்னர் மற்றவர்கள் கொண்டுவந்த வேட்டிகளை அதன்மீது கட்டுகின்றனர். பெண்ணாக இருந்தால் அவளது உடன் பிறந்த சகோதரர்கள் கொண்டுவந்த பிறந்த வீட்டுக் கோடியை முதலில் உடல் முழுக்கச் சுற்றி, அதன் மேல் மற்ற சகோதரர்கள் கொண்டுவந்த சேலையைச் சுற்றிக் கட்டுகின்றனர். பின்னர் பன்னீர் தெளித்து பிணத்தைத் தூக்கி வீட்டின் உள்ளே படுக்கவைப்பர். நிறைநாழி நிறைமரக்காலை எடுத்துவந்து பிணத்தின் அருகில் வைக்கின்றனர். சிறிது நேரம் கழித்து வெளியில் எடுத்து வைக்கின்றனர்.

### 6.1.6.7. குழி தோண்டுதல்

இறந்தவர்களைப் புதைப்பதற்கு மூன்று முதல் ஐந்து பேர் வரை ‘சுடலி’ (இடுகாடு) க்கு குழி தோண்டச் செல்கின்றனர். இவர்கள் குழி தோண்டி முடித்து விட்டு, பிணத்தைப் புதைத்தபின்னர்தான் வீட்டிற்கு வர வேண்டும். அதுவரை ‘சுடலிலே’ இருக்க வேண்டும். குழி தோண்ட எடுத்துச் சென்ற மண்வெட்டி, கடப்பாறை, கொடுவாள், தட்டு போன்றவற்றை வீட்டிற்கு எடுத்துவரும்போது அப்பொருட்களை சுடுகாட்டைப் பார்த்தவாறு எடுத்துவர வேண்டும் என்பது வழக்கமாகும். வீட்டைப் பார்த்தவாறு எடுத்துவந்தால் சுடுகாடு சென்ற பிணம் இவர்களுடன் பின் தொடரும் என நம்புகின்றனர்.

### 6.1.6.8. பாடை தூக்குதல்

இறந்தவர்களின் உறவினர்கள் அனைவரும் வந்த பின்னர், பிணத்தைப் பாடையில் தூக்கி வைக்கின்றனர். இறந்தவர்களின் பிள்ளைகள், மருமகள் என மூன்று அல்லது ஐந்து பேர் ஒன்றுசேர்ந்து பாடையைச் சுற்றி மூன்றுமுறை விளக்கு எடுக்கின்றனர். விளக்கை அணையாமல் மீண்டும் வீட்டிலே வைத்து விடுகிறார்கள். இந்த விளக்கு முப்பது நாட்கள் வரை அணையாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். பின்னர் நெருங்கிய உறவினர்களும், பங்காளிகளும் பாடையை மேளத் தாளத்துடன் தூக்கிச் செல்கின்றனர். பிணத்தின் முகம் 'வாய்க்கரிசி' (வாய்க்கு அரிசி போடும் இடம்) வரை வீட்டைப் பார்த்தவாறு செல்லவேண்டும் என்பது மரபாகும். வழிநெடுகிலும் பூக்கள், சில்லரைக் காசுகள், சோளப்பொறி பேன்றவற்றை இறைத்துக்கொண்டும் வெடிவெடித்துக்கொண்டும் தேரினை எடுத்துச் செல்கின்றனர். இறைக்கும் சில்லரைக் காசுகளை மேளம் அடிக்கும் தோட்டி மட்டுமே எடுக்க வேண்டும். மற்றவர்கள் எடுக்கக்கூடாது. இறந்தவரின் வாரிசுகள் தீப்பந்தம் (கொள்ளி) பிடித்துக்கொண்டு தேருடன் நடந்து செல்வர்.

### 6.1.6.9. வாய்க்கு அரிசி போடுதல்

மலையாளிகள் பாடையை 'வாய்க்கரிசி' (வாய்க்கு அரிசி போடும் இடம்) என்ற இடத்தில் பிணத்தை இடுகாடு பார்த்த வண்ணம் இறக்கி வைக்கின்றனர். அதன் பின்னர் பாடையைச் சுற்றிலும் ஒன்பது அல்லது பதினொன்று இடங்களைத் தோட்டி குறிப்பிட அவ்விடத்தை அடையாளமிட்டு பூ, அதிரசம், ரொட்டி போன்றவற்றை வைக்கின்றனர். பின்னர்த் தோட்டி **'அரிசி வைக்கறவங்க வைக்கலாம்'** என்று கூவிச் சொல்வார். அப்பொழுது வாய்க்கு அரிசி வைக்கப்படுகிறது. இதனால் இவ்விடத்திற்கு 'வாய்க்கரிசி' என்ற பெயர் வந்திருக்கலாம் என்று கருதமுடிகிறது. அரிசி வைத்து முடிந்தவுடன் தோட்டி மீண்டும் **'பணம் வைக்கறவங்க வைக்கலாம்'** என்று சொல்வார். அதன் பின்னர் விருப்பம் உள்ளவர்கள் தோட்டி அடையாளமிட்ட இடத்தில் ரூபாய் ஐந்தோ, பத்தோ வைக்கின்றனர். இந்தப் பணம் தோட்டிக்கு உரியதாகும். எல்லாரும் வைத்து முடித்தவுடன் தோட்டியானவர் ஊர்க்கவுண்டரிடம் 'எடுக்கலாமா சாமி' என்று கேட்கின்றார். அவர்கள் 'எடுக்கலாம்' என்று சொன்னவுடன் தோட்டி அப்பணத்தை எடுத்துக் கொள்கிறார்.

'வாய்க்கு அரிசி' போடும் இடம் வரை பிணம் வீட்டைப் பார்த்தவாறு எடுத்துச் சென்றவர்கள், வாய்க்கு அரிசி போட்டுவிட்டுத் தேரை ஒருமுறை சுற்றி பிணத்தின் முகம் இடுகாட்டை நோக்கி இருக்கும்படி கொண்டு செல்கின்றனர். இவ்வாறு செய்தால் இறந்தவர்களின் ஆன்மா தனக்கு முன்பு இறந்த முன்னோர்களைப் பார்த்து

மகிழ்ச்சியடையும் என்று கூறுகின்றனர். பெண்கள் வாய்க்கரிசி வரை வந்து ஒப்பாரியிட்டு அழுவர். பின்பு திரும்பிப் பார்க்காமல் வீட்டிற்குச் சென்றுவிடுகின்றனர். வீட்டைச் சாணம் போட்டு மெழுகி, பின்னர் இடுகாடு சென்று திரும்பி வருபவர்களுக்கு நீர் எடுத்து வந்து **'மந்தை'** (ஊர்ப் பொது இடம்) யில் காத்திருக்கின்றனர்.

### 6.1.6.10. பிணத்தைப் புதைத்தல்

பிணம் இடுகாடு சென்றதும் பாடையைக் குழிக்கு அருகில் இறக்கி அலங்கரிக்கப்பட்ட தேரை அவிழ்த்து, வீட்டுப் பொருட்களை எடுத்துக் கொள்கின்றனர். பாடை கட்டப்பட்ட மூங்கிலை மூன்று முதல் ஐந்து துண்டாக வெட்டிவிடுகின்றனர். பின்னர், குழியில் நெல், உப்பு போன்றவற்றைக் கொட்டி சமப்படுத்துகின்றனர். அதன்பின் அதில் வெற்றிலை, பாக்கு, கற்பூரம் வைத்துக்கொழுத்துகின்றனர். பிணத்தின் கை, கால், அரைஞாண் கயிறு, மோதிரம், மெட்டி என அனைத்தையும் அறுத்து விடுகின்றனர். அவ்வாறு அறுக்கவில்லை என்றால் அவருடைய ஆவியை, ஆன்மாவைக் கட்டிப் போட்டதற்குச் சமமாகும் என்று கூறுகின்றனர். பிணத்தின் முகம் வடக்குப் பார்த்தவாறும் தலையைத் தெற்கு பக்கமாகவும், கால் வடக்குப் புறமாகவும் குழியில் இறக்கி வைத்துப் பிணத்தின் முகத்தை மூடி விடுகின்றனர்.

பிணம் குழியில் இறக்கப்பட்டதும் இரண்டு கைகளிலும் மண்ணை அள்ளி மூன்று முறை குழியில் போட்டவுடன் மண்வெட்டியை எடுத்து மூவர் மாறி மாறி மண்ணை வெட்டி குழியில் போடுவர். இவ்வாறு ஒவ்வொருவராக மண்ணைப் பிணத்தின் மேல் போட்டுக் குழியை மூடுகின்றனர். அவ்விடத்தில் சிறிய மண்மேடு அமைத்து, அம்மண்மேட்டின் மேல் மூன்று கல் வரிசையாக வைத்து, அதன்மேல் வெட்டப்பட்ட மூங்கில் துண்டுகளை அடுக்குகின்றனர். பின்னாத் தேங்காய், பழம் வைத்துக் கற்பூரம் ஏற்றி வணங்கிவிட்டு வீட்டிற்கு வருகின்றனர். மலையாளிகள் இனத்தில் கொடிய நோய், கொலை, தற்கொலை போன்றவற்றின் மூலமாக இறப்பவர்களை எரிப்பதும், இயற்கை மரணமடைந்தவர்களைப் புதைப்பதும் வழக்கமாகும்.

### 6.1.6.11. கொல்லி வைத்தல்

இறந்தவர்களை எரிக்கும்போது தீ வைப்பதை நாம் கொல்லி வைத்தல் என்கிறோம். ஆனால் மாறாக மலையாளி இன மக்களிடையே இறந்தவர்களைப் புதைக்கும்போதும் கொல்லி வைத்தல் போல் பாவனை செய்யும் சடங்கைச் செய்கின்றனர். இறந்தவர்களின் வாரிசுகள், பங்காளிகள் என ஐந்து அல்லது ஏழு பேரிடம் சிறு கம்பினைக் கொடுத்துப் பிணத்தைப் புதைத்த இடத்தில் ஒவ்வொரு திசையில் ஒவ்வொருவரை வைக்கச்

சொல்கின்றனர். இதனைக் கொல்லி வைத்தல் என்று கூறுகின்றனர். அதன் பின்னர் இறந்தவரின் வாரிசுகள் ஒருவா் மீது ஒரு புது மண் பானையில், மஞ்சள் நீர் கலந்து வைத்துப் பிணக்குழியை மூன்றுமுறை வலம் வரச் செய்கின்றனா். அவ்வாறு சுற்றி வலம் வரும்போது ஒவ்வொரு சுற்று முடிந்ததும் பானையில் ஒரு ஓட்டை போடுகின்றனர். மூன்று சுற்று முடிந்ததும் பிணக்குழியின் தலையிருக்கும் பக்கத்தில் பானையைப் போட்டு உடைத்து விட்டுத் திரும்பிப் பார்க்காமல் வீட்டிற்கு வந்துவிடுகின்றனர்.

பிணத்தைப் புதைக்கும் போது இறந்தவர் பயன்படுத்திய பொருட்கள் அனைத்தையும் குழியில் போட்டுப் புதைக்கும் வழக்கம் முன்பெல்லாம் இருந்தது என்கின்றனர். ஆனால் தற்போது இறந்தவர்கள் பயன்படுத்திய பொருட்களில் தேவையற்று இருப்பதை மட்டும் குழியில் போட்டுப் புதைத்து விடுகின்றனர். பயனுள்ளதை மட்டும் வைத்துக்கொள்கின்றனர். முன்னோர்கள் பயன்படுத்திய பொருட்களை வைத்திருப்பதைப் பெருமையாகவும் கருதுகின்றனர். பிணத்தைப் புதைத்துவிட்டு வீட்டிற்கு வரும் மலையாளிகள், அவ்வினப் பெண்கள் கொண்டுவந்த நீரில் குளித்துவிட்டு வீட்டிற்குள் வருகின்றனர்.

### 6.1.6.12. கருமாதி நாள் குறித்தல்

மலையாளிகள் குளித்து முடித்ததும் இறப்பு நிகழ்ந்த வீட்டிற்குச் சென்று ஊர்ப் பெரியோா்கள் அனைவரும் கூடி அமர்ந்து, உருமால் கட்டி கருமாதிக்கு நாள் குறிப்பர். அப்பொழுது தண்ணீரில் ஊற வைக்கப்பட்ட பச்சரிசி, வெள்ளம் அங்கு இருப்பவர்களுக்கு வழங்கப்படுகிறது. இறந்தவரின் பங்காளிகள், தாய்மாமன், உறவினர்கள் அனைவரையும் கேட்டு ஏதாவது ஒரு ஒற்றைப்படை நாளைத்தான் குறிக்கின்றனர். அதாவது 3ஆம் நாள், 5ஆம் நாள், 7ஆம் நாள், 9ஆம் நாள், 11ஆம் நாள் என ஏதாவது ஒரு நாளைக் குறிக்கின்றனர். பெரும்பாலும் 15 நாட்களுக்கு மேல் போகாமல் பார்த்துக்கொள்கின்றனர். காரியம் முடியும் வரை அக்குடும்பத்தார் வேறு எந்த நிகழ்விலும் கலந்துகொள்வதில்லை.

### 6.1.6.13. பால் ஊற்றுதல்

இறந்தவர்களின் ஆத்மா சாந்தியடையும் விதமாக இறப்பு நிகழ்ந்த மறுநாள் ‘பால் ஊற்றுதல்’ சடங்கு செய்யப்படுகிறது. மலையாளிகள் பச்சை அரிசி சாதம் வடித்து ஒரு இலையில் படையல் போட்டு, அதனுடன் பச்சை மூங்கிலில் இரு குச்சி வெட்டி, அதில் பால் ஊற்றி இடுகாட்டிற்கு எடுத்துச் செல்லுகின்றனர். அதனுடன் சந்தனம், மஞ்சள் கலந்த ஒரு உருண்டையையும் எடுத்துச் செல்வர். இறந்தவர்களின் வாரிசுகளே இதனை எடுத்துச் செல்கின்றனர். உடன் ஊர்மக்கள் மற்றும் உறவினர்களும் செல்கின்றனர். ‘வாய்க்கரிசி’

என்ற இடத்தில் படையலில் பாதியை வைத்துவிட்டு மீதியை இடுகாட்டுக்கு எடுத்துச் செல்கின்றனர்.

பிணத்தைப் புதைத்த இடத்தில் பாதிப் படையலை வைத்துவிட்டு, மஞ்சள் கலந்த சந்தனத்தை நீர்விட்டுக் கரைத்து, புதைத்த இடத்தில் மெழுகுகின்றனர். பின்னர் அதன் மீது பால் ஊற்றிவிட்டு மீண்டும் வந்த வழியே வீட்டிற்கு வருகின்றனர். இறந்தவர்களுக்குப் பால் ஊற்றவில்லை என்றால் இறந்தவர்களின் ஆவிகள் பல இன்னல்களைத் தரும் என இவர்கள் நம்புகின்றனர்.

### 6.1.6.14. கருமாதிச் சடங்கு

மலையாளிகள் கருமாதிக்கு முன்னர் வீடுகளைத் தூய்மை செய்து வெள்ளையடிக்கின்றனர். கருமாதிச் செய்தலை அவர்கள் 'காரியம்' செய்தல், 'தலைக் கட்டுதல்' என்று சொல்கின்றனர். இறந்தவர்களுக்குப் பிடித்தமான உணவுப் பண்டங்களைச் சமைத்து, நடுவீட்டில் வாழை இலையை விரித்து அதில் அவற்றையெல்லாம் வைத்துப் படைக்கின்றனர். மேலும், குடிப்பழக்கம் சுருட்டுப் பிடிக்கும் பழக்கம் இருந்தால் அதனையும் படையலில் வாங்கிவைத்துப் படைக்கின்றனர்.

கருமாதியன்று இறந்தவர்களின் வாரிசுகள், விரதம் இருக்கின்றனர் இதனை **'நோன்பு'** இருத்தல் என்கின்றனர். இறந்தவருக்குப் பிடித்தமான துணிகளையும், அணிகலன்களையும் வாங்கிவைத்து விளக்கினை ஏற்றி வெற்றிலை, பாக்கு வைத்துத் தேங்காய் உடைத்து வணங்குகின்றனர். அன்று மாலை இறந்தவரின் உறவினர்கள், மாமன், மச்சான் போன்ற அனைவரும் அங்கு ஒன்று கூடுகின்றனர். வரும்பொழுது இறந்தவர் ஆணாக இருந்தால் அவருடைய மனைவிக்குச் சேலையும், பெண்ணாக இருந்தால் கணவனுக்கு வேட்டி, சட்டையும் எடுத்து வருகின்ற மரபு இம்மக்களிடையே காணப்படுகிறது. இறந்தவரின் மகன்கள், மற்றும் பங்காளிகள் என மூன்று முதல் ஏழு பேர் வரை மொட்டையடித்துக் கொண்டு வரிசையாக நிற்கின்றனா். இவர்களுடைய தாய்மாமன் முறையுள்ளவா்கள் கொண்டுவந்த வேட்டியை எடுத்து அவர்களது தலையில் உருமால் கட்டி, நெற்றியில் திருநீா் பூசுகின்றனா். அவ்வாறே மற்றவர்கள் கொண்டுவந்த வேட்டியை எடுத்து நிற்கின்ற மற்றவர்களுக்கும் கட்டப்படுகிறது. இதனைத் 'தலைகட்டுதல்' என்று மலையாளிகள் கூறுகின்றனா். பின்னர் நீளமாகப் பாய் விரித்து அவர்களை அதில் உட்கார வைக்கின்றனர்.

இவர்களுக்கு உருமால் கட்டி முடிந்தது போக, மீதி இருப்பவர்கள் கொண்டு வந்த 'வரிசையைத்' தலை கட்டியிருப்பவர்கள் முன்னிலையில் கொண்டு வந்தவா் பெயர், ஊரைச் சொல்லி அங்கு வைக்கின்றனர். அனைவரும் வைத்துவிட்ட பின்னர் 'ஊர்க் கவுண்டர்'

எழுந்து இறந்தவரின் பெருமைகளை எடுத்துக்கூறி அவ்வாறு அவருடைய பிள்ளைகளாகிய நீங்கள், நடந்து கொள்ள வேண்டும், அவருடைய பெயரைச் சொல்லும்படியாக வாழ்ந்துகாட்ட வேண்டும். சண்டைச் சச்சரவுகள் இன்றி ஒற்றுமையாக வாழவேண்டும், வாழ்க்கையில் குடும்ப பெரியவர்களின் ஆலோசனைகளின்படி நடந்து கொள்ள வேண்டும் என்று அக்குடும்பத்தாருக்குப் புத்திமதி சொல்கிறார். பின்னர் அவர்கள் முன் வைக்கப்பட்ட வரிசையை எடுத்து இறந்தவரின் குடும்பத்தாரிடம் கொடுத்துவிடுகின்றனர்.

காரியத்திற்கு வந்த அனைவரும் வீட்டின் உள்ளே சென்று வழிபட்டபின் எல்லோருக்கும் விருந்து பரிமாறப்படுகிறது. வந்த அனைவரும் விருந்து உண்டே செல்கின்றனர். தூரத்து உறவினர்களாக இருந்தால் இரண்டு மூன்று நாள் அங்கேயே தங்கி அக்குடும்பத்தாருக்கு ஆறுதலாய் இருக்கின்றனர்.

### 6.1.6.15. முப்பது கும்பிடல்

இறந்த முப்பதாவது நாள் வரை தினமும் இரவு வீட்டில் விளக்கேற்றி ஒரு சொம்பில் தண்ணீர் வைக்கின்றனர். மறுநாள் காலையில் சொம்பில் வைக்கப்பட்ட நீர் குறைந்துள்ளதா எனப் பார்ப்பர். குறைந்திருந்தால் இறந்தவரின் ஆன்மா குடித்ததாக நம்புகின்றனர். இறந்தவர் நாம் கொடுக்கும் நீர் ஆதாரங்களை ஏற்றுக் கொண்டார் எனவே, அவர் வாழ்வில் என்றும் நமக்குத் துணையாக இருப்பார் என்றும் நம்புகின்றனர்.

முப்பதாம் நாள் மாலை, பச்சை அரிசியில் பொங்கல் பொங்கி ‘நடுவீட்டில்’ இலை விரித்து படையல் போட்டுத் தேங்காய் உடைத்து வணங்குகின்றனர். பிறகு அவர்களின் குல தெய்வ கோவிலுக்குச் சென்று மாலை வாங்கிப் போட்டு, தீபம் ஏற்றி வணங்கி வருவர். ஒரு சிலர் முப்பதாம் நாள் கோழிக்கறி சமைத்துப் படையல் போட்டு வணங்குவதையும் களப்பணியின் போது காணமுடிந்தது. இதன் பின்னரே அந்த குடும்பத்தார் பிற வழிபாடு சார்ந்த நிகழ்வுகளில் கலந்துகொள்கின்றனர். அதுவரை இவர்கள் இறப்பு நிகழ்வைத் தீட்டாகவே கருதுகின்றனர்.

### 6.1.6.16. முன்னோர் வழிபாடு

“இறந்தோரின் ஆற்றல் வாழ்வோரின் நலனில் பெரும்பங்கு வகிக்கிறது என்னும் கருத்தாக்கத்தால் ஏற்பட்டதே முன்னோர் வழிபாடாகும்”[14]. என்கிறார் பக்தவத்சல பாரதி. “இறந்தவரின் ஆசி வளமைப் பெருக்கத்திற்கு உதவி செய்வதாக எண்ணி ஆவி வழிப்பாட்டுச் சடங்குகள் நடத்தப்படுகின்றன. மக்களுக்கு நன்மைதரும் சக்திகளை மரத்தடியில் வைத்து வழிபடும் தன்மை சிந்து சமவெளி நாகரிக காலத்தில்

இருந்தமையைச் சிந்துசமவெளி முத்திரைகள் பலவற்றிலும் அரசமரம் இடம்பெற்றிருப்பதிலிருந்து அறியலாம்”[15] என்று நீலகண்டசாஸ்திரி கூறுவதாகப் பழனிச்சாமி அவர்கள் குறிப்பிடுகின்றார். “உலகத்தின் பல சமயங்கள் முன்னோர் வழிப்பாட்டை அடித்தளமாகக் கொண்டுள்ளன கிரேக்கம், ரோமாபுரி முதலிய நாடுகளிலும் இவ்வழிபாட்டின் கூறுகள் உள்ளன. கிரேக்கர்கள் கடவுளின் இருப்பிடங்களை வழிபடுவதற்கு முன்னால், முன்னோர்கள் அடக்கம் செய்யப்பட்ட கல்லறைகளை முதலில் வணங்குதல் வழக்கமாகும்”[16]. இவற்றின் வழிப் பண்டைய காலம்தொட்டே முன்னோர் வழிபாடு இருந்து வந்துள்ளமை புலனாகிறது.

மலையாளிகள் முன்னோரை வழிபட்ட பின்னரே சில தெய்வங்களை வழிபடுகின்றனர். முன்னோர்களின் ஆவிகளே தம்முடன் இருந்து தன்னையும், குடும்பத்தாரையும் காக்கின்றது என்று நம்புகின்றனர். அவர்களுக்குப் பிடித்தமான பழங்கள், காய்கறிகள், புதிய அறுவடையில் கிடைத்த உணவுப் பண்டங்கள் போன்றவற்றைச் சமைத்து வாரந்தோறும் சனிக்கிழமைகளில் வழிபடுகின்றனர். ஒவ்வொரு ஆண்டும் இறந்துபோனவர் புதைக்கப்பட்ட இடத்தில் பொங்கல் வைத்து கோழி அல்லது கடா வெட்டிப் படைத்து வழிபடுகின்ற மரபும் காணப்படுகின்றது.

முன்னோர்களை வழிபடவில்லையென்றால் நிம்மதியாக வாழ முடியாது. வாழ்க்கையில் துன்பங்கள் வரும், முன்னோர்கள் தீங்கினை உண்டுபண்ணுவார்கள். நிலங்களில் பயிர் செழிக்காது, வேளாண்மை சிறக்காது, ஆடு, மாடுகளை நோய்கள் தாக்கும் என்று கூறுகின்றனர். அவர்களுக்குப் பிடித்தமான பொருட்களையும், துணி, அணிகலன்கள் போன்றவற்றையும் வாங்கிவைத்து வழிபடுவதால், மேற்கண்ட தீங்கு நிகழாது என்று நம்புகின்றனர். முன்னோர்கள் ‘ஆத்மா’ (ஆவிகள்) தன்னுடனும் குடும்பத்தாருடனும், வீட்டிலும் வசிப்பதாகக் கருதுகிறார்கள். இதன் காரணமாகத்தான் தீட்டுக்காலத்தில் பெண்களைத் தனிமைப்படுத்துகின்றனர். தனிக்குடிசை கட்டித் தனியே விடுவதற்கு இதுவும் ஒரு காரணமாகும். முன்னோர்கள் எப்போதும் வீட்டிற்கு அருகிலேயே உறைந்துள்ளனர் என்றும் அவர்கள் உயிரோடு இருக்கும்போது பழமையை எவ்வாறு போற்றிக் காத்தனரோ அவ்வாறே மரபுவழி வாழ்வில் மாற்றங்கள் ஏற்படாதவாறு மலையாளிகளும் செயல்படுகின்றனர் என்று கருமுடிகிறது..

### 5.2. வழிபாடு - வரையறை

‘வழிபடு’ என்பதிலிருந்து பிறந்ததே வழிபாடு’ என்னும் சொல் ஆகும். வழிபாடு என்பதற்கு வணங்குதல், வழியில் செல்லுதல், பின்பற்றுதல், நெறிப்படுத்துதல், தாழ்மை,

பூசை முறை என்று அகராதிகள் பொருள் தருகின்றன. 'தெய்வங்களை மகிழ்விப்பதற்காக மேற்கொள்ளப்படும் பூசை முறைகள் வழிபாடு என்றும் இறைவனுடன் இரண்டறக் கலப்பதே வழிபாடு' என்றும் வழிபாடு குறித்துப் பல்வேறு விளக்கங்கள் கூறப்படுகின்றன. "உயிர்ப்பாற்றல் (பேராற்றல்)' ஒன்றை உள்ளத்தால் நெருங்கவும் உணரவும் மேற்கொள்ளப்படும் வழிமுறைகளே வழிபாடுகள்"[17]. பழங்குடியின மக்களின் வழிப்பாட்டு முறைகள் பிற இன மக்களின் வழிபாட்டு முறைகளிலிருந்து தனித்தன்மை வாய்ந்ததாக இருக்கின்றது.

### 5.2.1. குலம் மற்றும் தெய்வம்

"ஒரு இனத்தின் உட்பிரிவுதான் குலம். ஒரு பொது மூதாதையரின் வழியில் வந்த ஒரு குடும்பம், பல குடும்பங்களாகப் பெருகும் பொழுது அவை உறவு வழியில் இணைந்து ஒரு குலம் ஆகிறது. குலத்தின் தெய்வம் குலதெய்வமாகும். முதலில் குடும்ப தெய்வங்களாக இருந்து அக்குடும்பங்கள் ஒரு குலமாகப் பெருகும் பொழுது குல தெய்வங்களாகின்றன"[18]. இக்குலத்தை வைத்துதான் இன்னவன் நமக்கு திருமண உறவு அல்லது பங்காளி உறவு என்பதைத் தீர்மானிப்பார்கள். இக்குலதெய்வங்களை வழிபடுவதன் மூலம் தங்கள் குலம் பெருகுவதாகவும் தீயசக்திகளிடமிருந்து காக்கப்படுவதாகவும் மக்கள் நம்புகின்றனர். ஒரே குலத்தைச் சேர்ந்தவர்கள் திருமண உறவு வைத்துக்கொள்ள மாட்டார்கள்.

இவ்வாறு அமையும் ஒவ்வொரு குலத்திற்கும் தனித்தனித் தெய்வமும் கோயிலும் இருக்கும். இதனையே 'குலதெய்வம்' என்றும் 'குலதெய்வக் கோவில்' என்றும் குறிப்பிடுகின்றனர். **'குலதெய்வத்தை வணங்கினால் கோடி நன்மை உண்டு', 'குருவை மறந்தாலும் குலதெய்வத்தை மறக்கதே'** என்ற பழமொழிகளும் குலதெய்வ வழிபாட்டின் முக்கியத்துவத்தை உணர்த்துகிறது. சவ்வாதுமலை மலையாளியினப் பழங்குடி மக்களிடமும் பலவகையான குலதெய்வ வழிபாடுகள் காணப்படுகின்றன.

### 5.2.2. மலையாளிகளின் குலதெய்வங்கள்

மலையாளிகள் தெய்வங்களை ஆண்டவன், பகவான், தங்களைப் படைச்சவன், கடவுள் என்று குறிப்பிடுகின்றனர். தந்தைவழிக் குடும்ப அமைப்பைக் கொண்ட இவர்கள் குலதெய்வ வழிபாட்டில் தாய்த் தெய்வ வழிபாட்டினை அடிப்படையாகக் கொண்ட கால்வழி பிரிவினைத் தமக்குள் வைத்திருக்கின்றனர். இவர்கள் 'சேமியம்மன், நாச்சியம்மன், மாரியம்மன், பழனியம்மன், திக்கியம்மன், காளியம்மன், குள்ளியம்மன்' போன்ற பெண் தெய்வங்களையும் 'வேடியப்பன், வேந்தியப்பன்' போன்ற ஆண் தெய்வங்களையும்

குலதெய்வமாக வழிபடுகின்றனர். பிற இன மக்கள் தொடர்பின் காரணமாகச் சமவெளிப் பகுதியில் வழிபடும் பெருந்தெய்வங்களையும் வழிபடும் வழக்கம் தற்காலத்தில் இவ்வினத்தவரிடம் காணப்படுகிறது.

இவர்கள் வழிப்படும் தெய்வங்கள் பெரும்பாலும் பெண் தெய்வங்களாகவே இருக்கின்றன. ‘இத்தெய்வங்கள் அக்கிராமத்தின் நிலப்பரப்பையும், மக்களையும், விளைச்சல்களையும், கால்நடைகளையும் காக்கின்றது என்றும் தீயசக்திகளை அழிக்கும் வள்ளமையையும் பெற்றிருக்கின்றது என்றும் இவர்கள் நம்புகின்றனர். மலையாளிகள் ‘‘தம்முன்னோர்கள் வழிவழியாகக் கேட்டுக் காப்பாற்றி வந்ததைப் போலத் தத்தம் வழிபாட்டு மரபுகளையும், முன்னோர் வழி அறிந்து கடைபிடித்துத் தலைமுறை தலைமுறையாகக் காப்பாற்றி, வரும் சந்ததியினருக்குக் கடத்துபவர்களாகவும் இருக்கின்றனர்’’[19].

“எந்த ஒரு மரபிலும் ஒவ்வொரு குல தெய்வ வழிப்பாடும் அதன் சமூக, பண்பாட்டுச் சூழலில் காலம், இடம், மக்கள் ஆகிய மூன்றையும் ஒருங்கிணைத்துக் கொண்டே நிகழும்’’[20]. ‘‘மலையாளிகளின் குலதெய்வ வழிபாடானது கிராம மக்கள் அனைவரும் ஒன்றுபட்டு நிகழ்த்தும் ஒரு விழாவாக அமைகிறது.

குலதெய்வங்களுக்கு விழா எடுத்து வழிபடுவதனால் அக்கிராமத்தை அச்சுறுத்தும் தீயசக்திகளை வென்று நிற்கும், தெய்வத்தின் ஆற்றலைப் பொங்கலிடுதல், படையலிடுதல், பலியிடுதல் மூலம் சாந்தப்படுத்தவும், கடவுளின் பசியை நிவர்த்தி செய்யவும் முடியும் என்ற நம்பிக்கை இவர்களிடம் மலைபோல் காணப்படுகிறது. ‘‘பக்தர்கள் தங்கள் நலன் வேண்டியும், தாங்கள் செலுத்த வேண்டிய நேர்த்திகடன் செலுத்தியும் (தீமிதித்தல், காணிக்கைசெலுத்துதல், பலியிடல்) தெய்வங்கள் தங்கள் துன்பங்களைப் போக்கியமைக்கு நன்றி செலுத்தியும், தங்கள் அடுத்த கட்ட வாழ்வுக்கான ஆற்றலையும் அருளையும் வேண்டுகின்றனர்’’[21]. பெருந்தெய்வங்களின் வழிபாடு மேலோங்கிய இக்காலக் கட்டத்திலும் இம்மக்களிடம் குலதெய்வ வழிப்பாடுகள் மிகுதியாக இருப்பதை இன்று வரை காணமுடிகிறது.

### 5.2.3. விழா ஏற்பாடு

சவ்வாதுமலை மலையாளிகள் தங்களது குலதெய்வங்களுக்கு ஆண்டுக்கு ஒரு முறை மாசி, பங்குனி, சித்திரை போன்ற மாதங்களில் வரும் அமாவாசை மற்றும் செவ்வாய் அல்லது வெள்ளிக்கிழமைகளில் பெரும் செலவில் விழா எடுத்து வழிபடுவது வழக்கமாகும். இதற்குச் சுமார் ஒரு மாதத்திற்கு முன்பாகவே இவ்வூர் மக்கள் அனைவரும் மந்தையில் (ஊர்ப் பொது இடம்) ஒன்று கூடுகின்றனர். குலதெய்வத்திற்கு விழா எடுப்பதற்கு அந்த ஆண்டின் விளைச்சலை வைத்தே பேசி முடிவெடுக்கின்றனர். பின்னர் விழா எடுப்பதற்கு

எவ்வளவு செலவாகும் என்று தோராயமாக மதிப்பிடுகின்றனர். அதனடிப்படையில் ஒரு வீட்டிற்கு ரூ.300 வீதம் 'புறு' (வரி) போடப்படுகிறது. 'புறுவை' விழா நடக்கும் ஒரு வாரத்திற்கு முன்பாகவே ஊர்த் தலைவரிடம் கொடுத்துவிட வேண்டும். ஐந்து வருடங்களுக்கு முன்னர் வழிபாட்டிற்கு வேண்டிய பொருட்களை (பொறி, வெற்றிலைப் பாக்கு, பழங்கள், கற்பூரம், வத்தி, போன்றவைகள்) செங்கம், திருப்பத்தூர், சிங்காரப்பேட்டை ஆகிய இடங்களுக்குக் கால்நடையாகவே நடந்து சென்று வாங்கி தலைசுமையாகவே எடுத்து வந்தனர். இவ்விடங்களுக்கு அவர்கள் செல்ல வேண்டிய தொலைவு சுமார் 20 முதல் 30 கி.மீ. வரை இருக்கும்.

### 5.2.4. கோவில் அமைப்பு

கோவில் என்ற சொல் இறைவன் எழுந்தருளியிருக்கும் ஆலயத்தைக் குறிப்பதாகும். கோவில் என்றவுடன் உயர்ந்த கோபுரங்களும், பலவகையான வண்ணச் சிற்பங்களும், நீண்ட மதில்சுவர்களுமே நமது நினைவுக்கு வரும். மலையாளிகளின் கோவில்கள் பெரும்பாலும் மரத்தடியிலும், ஊரின் எல்லைப் பகுதிகளிலும், ஆறு போன்ற நீர்நிலைகளுக்கு அருகிலுமே அமைந்துள்ளன. இக்கோயில்கள் அனைத்தும் கிழக்கு நோக்கிப் பார்த்தவாறு வைக்கப்படுவது மரபாகக் காணப்படுகிறது.

மலையாளிகள் பத்து வருடங்களுக்குள்ளாகத்தான் கோவில் எழுப்பி வழிப்படும் பழக்கத்தை மேற்கொண்டு வருகின்றனர். அதற்கு முன் 'கல், வேல், சூலாயுதம், வால், சாட்டை, விளக்குமாடம் போன்றவற்றை மரத்தின் கீழும், திறந்த வெளியிலும் வைத்து நான்கு தூண்கள் நட்டு, சுற்றுப்புறம் அடைக்கப்படாத தற்காலிகமான கோயில்களை அமைத்து வழிபட்டு வந்துள்ளமைக்கான வழக்கம் பரவலாக உள்ளது'. இதற்கு அடுத்த நிலையில் 'காட்டுப்புல், மஞ்சம்புல் ஈச்சம்புல் போன்றவற்றைக்கொண்டு கூரை வேயப்பட்ட வட்ட, சதுர வடிவிலான கோவில்களும் சில இடங்களில் சிறு அளவிலான கட்டிடங்கள் கட்டப்பட்ட கோவில்களும், சிமெண்ட் ஓடுகள் பொருத்தப்பட கோவில்களும் இருக்கின்றன. இவர்களின் பெரும்பாலான தெய்வங்கள் கல்லுருவங்களாகவே காணப்படுகின்றன. பெரிய கோவில்கள் கட்டும் அளவிற்குப் பொருளாதார வசதி இல்லாத காரணத்தால் சில தெய்வங்கள் மரத்தடிகளிலும் வைக்கப்பட்டுள்ளன. கோவிலைச் சுற்றிலும் பல்வேறு வகையான மலர்களைத் தரக்கூடிய பூமரங்கள் வைக்கப்பட்டு அப்பகுதியே சோலை போல் காட்சி தருகின்றது.

### 5.2.5. கோவில் பூசாரி

"சாமிக்குப் பூசை செய்பவர் 'பூசாரி' எனப்படுவர். பூசை என்பது 'பூஜா' என்ற வடமொழிச் சொல்லின் திரிபே எனப் பெரும்பாலான அறிஞர்கள் கருதுகின்றனர். ஆனால் 'பூசெய்' என்பதே 'பூசை' என மருவியதாகத் தமிழ் அறிஞர்கள் கருதுகின்றனர். அதாவது

தெய்வங்களைப் பூக்களால் அலங்கரித்து வழிபாட்டை நடத்துபவர் என்ற பொருளிலேயே முதலில் ‘பூ செய்பவர்’ என்றும் அது ‘பூசாரி’ என்றும் மருவியது”[22] என்பர். மலையாளிகளின் குலதெய்வக் கோயில்களில் அவர்களே பூசாரிகளாக உள்ளனர். எல்லாக் கிராமங்களிலும் ஒவ்வொரு தெய்வத்திற்கும் தனித்தனியே பூசாரிகள் உண்டு. அந்தந்தத் தெய்வ வழிபாட்டின்போது அத்தெய்வத்திற்குரிய பூசாரிகள் தலைமையாகவும், மற்ற பூசாரிகள் துணையாகவும் செயல்படுகின்றனர். சில தவிர்க்க முடியாத நேரங்களில் ஒருவரே பூசாரியாகச் செயல்படுவதும் உண்டு.

கோவில் பூசாரிகள் பெரும்பாலும் வாரிசுதாரர் முறையிலேயே தேர்வு செய்யப்படுகின்றனர். பழைய பூசாரி இறந்துவிட்டாலோ அல்லது வயதாகிவிட்டாலோ அவருடைய பிள்ளைகளே பூசாரியாகத் தேர்வு செய்யப்படுகின்றனர். பிள்ளைகள் இல்லாத நிலையில் வாரிசுதாரர்களே தேர்வு செய்யப்படுகின்றனர்.

### 5.2.6. கரகம் எடுத்தல்

மலையாளிகள் புனிதநீர் நிரப்பிய கரகத்தினை அலங்காரம் செய்து, அதில் தெய்வத்தை உறையச்செய்து கோவிலில் கொண்டுவந்து வைக்கும் சடங்கே கரகம் எடுத்தல் என்று கூறுகின்றனர். இதன் பின்னரே வழிபாடுகளும் சடங்குகளும் தொடரும். இவர்களின் சிறு தெய்வங்களுக்குப் பெரும்பாலும் சிலைகளோ படிமங்களோ காணப்படவில்லை. கோவில் என்ற பெயரில் மேடை மட்டுமே இருக்கின்றன. பெரிய விழாக் காலத்தில் மட்டும் தெய்வங்களுக்குக் கரகம் எடுக்கப்படுகிறது. மற்ற நாட்களில் பூசைகள் மட்டுமே செய்யப்படுகின்றன. பூசைகள் செய்வதன் மூலம் கரகத்தில் தெய்வம் எழுந்தருளும். அதுவே தெய்வமாகவும் வணங்கப்படுகிறது. பழங்குடிமக்கள் தாம் அளிக்கும் படையல்களையும் சடங்குகளையும் குலதெய்வங்கள் ஏற்றுக்கொள்ளும் என்று நம்புகின்றனர்.

### 5.2.7. சாமிப்பெட்டி தூக்குதல்

நம்முடைய முன்னோர்கள் இறந்துவிட்டால் அவர்களது நினைவாக அவர்கள் பயன்படுத்திய பொருட்களை ஒரு பெட்டியினுள் வைத்துப் பாதுகாத்து, அதனை வருடத்திற்கு ஒருமுறை எடுத்து, அதற்குரிய மரியாதையைச் செலுத்தி வழிபடுகிறோம். அவ்வாறு ‘தெய்வத்திற்குரிய உடைகள், ஆபரணங்கள், பூசைமணிகள், பண்டாரப்பெட்டி போன்ற பொருட்களை வைத்துப் பாதுகாக்கும் ஒருபெட்டியே ‘சாமிப்பெட்டி’ என்று அழைக்கப்படுகிறது.

மலையாளிகளின் விழாக்களில் பெட்டி தூக்குதலும் ஒருபிரதான நிகழ்வாகக் கருதப்படுகின்றது. இது மரப்பெட்டியாகவோ அல்லது இரும்புப் பெட்டியாகவோ காணப்படுகிறது. இப்பெட்டியைத் தெய்வமாகவே மக்கள் வணங்கி வருகின்றனர். பெரிய

விழாக்களின்போது மட்டும் கோவிலுக்குப் பெட்டியை எடுத்துச்சென்று அதிலுள்ள பொருட்களைக் கொண்டு சாமியை அலங்கரித்துப் பூசைகள் செய்கின்றனர். பெட்டி தூக்கும் உரிமை மரபுவழியாகக் குறிப்பிட்ட ஒரு குடும்பத்திற்கே வழங்கப்படுகிறது.

### 5.2.8. படையல் போடுதல்

குலதெய்வத்திற்கு உணவுப் பண்டங்கள், பழங்கள், பொறி போன்றவற்றை இலையில் வைக்கும் வழக்கத்தினையே 'படையல் போடுதல்' என்று கூறுகின்றனர். படையல் போடும்பொழுது தனது எச்சிலாலும் சுவாசத்தினாலும் பூசைக்குப் படைக்கப்படும் பொருட்கள் அசுத்தப்பட்டு விடக்கூடாது என்பதற்காக மலையாளிகளின் பூசாரிகள் தனது வாயையும், மூக்கையும் மறைத்துத் துண்டால் கட்டிக்கொள்கிறார்கள்.

'படையலில் பச்சரிசி சாதம், தயிர், நெய், வெள்ளம், வாழைப்பழம், 'அவுசிகம்' (பல வகை பழங்களின் கூட்டு) சமைத்த காய் கூட்டுக்கள், அதிரசம், அப்பளம், தேன்' போன்றவற்றை இலையில் வைத்துப் படைக்கின்றனர். பின்னர்க் கற்பூரம், ஊதுவர்த்தி கொழுத்தி தேங்காய் உடைத்துத் தீபாராதனை செய்கின்றனர். குலதெய்வத்தை வழிபட வருபவர்களும் தெய்வத்திற்குப் பிடித்த பண்டங்களையும் பொருட்களையும் செய்து எடுத்து வருகின்றனர். அவர்கள் தெய்வத்திற்குக் காணிக்கையும் கொடுப்பதுண்டு. குலதெய்வத்தை வழிபட்டு செல்பவர்களுக்குச் சாமியின் 'பண்டாரம்' (திருநீரு) இடப்படுகிறது. குலதெய்வ வழிபாட்டில் தெய்வத்திற்குப் படைக்கப்படும் படையல், பலி, காணிக்கை ஆகியவை அவற்றைத் திருப்திப்படுத்தவே கொடுக்கப்படுகிறது.

### 5.2.9. பலியிடுதல்

குலதெய்வ வழிபாட்டில் பலியிடுதல் முக்கிய இடம் வகிக்கின்றது. மலையாளிகளின் ஊரில் எத்தனை வீடுகள் இருக்கின்றதோ அத்தனை வீடுகளிலும் கோவிலுக்குப் பொங்கல் வைத்துக் 'கிடாய்' வெட்டுகிறார்கள். தவிர்க்கமுடியாத ஒருசிலர் மட்டும் கிடாய் வெட்டாமல் சேவல் அறுக்கின்றனர். ஒருசிலர் ஒன்றுக்கு மேற்பட்ட கிடாயும் வெட்டுவதுண்டு. கிடாய் வெட்டைத் தமது எல்லைக்குட்பட்ட நாடுகளின் பெரியோர்கள் (நாட்டாமை) அனுமதியைப் பெற்று, அவர்களில் தலைமை நாட்டார் அருள் வந்த பூசாரியிடம் வாள் எடுத்துக்கொடுத்த பின்னரே கிடாய்வெட்டு நிகழ்கிறது.

குலதெய்வத்திற்கு வெட்டப்படும் ஆட்டுக் கிடாவை நன்கு குளிப்பாட்டி, பொட்டிட்டு, கொம்புகளுக்கு வண்ணம்தீட்டி, கழுத்தில் பூமாலை அணிவித்துக் கொண்டுவரப்படுகிறது. கிடாவைக் குலதெய்வத்தின் முன் நிறுத்தி மஞ்சள் கலந்த நீரினை எடுத்துத் தலையிலிருந்து முதுகுவரை ஊற்றுகின்றனர். ஆட்டுக்கிடாய் முதலில் முதுகினை ஆட்டி பின்னர்த் தலையினை ஆட்ட வேண்டும். அவ்வாறு செய்தால் மட்டுமே குலதெய்வம்

இவர்களின் காணிக்கையை மகிழ்வுடன் ஏற்றுக்கொண்டது என்று நம்புகின்றனர். அவ்வாறு செய்யவில்லை என்றால் காணிக்கையைத் தெய்வம் ஏற்கவில்லை என்று கருதுகின்றனர். அப்படி ‘ஆட்டாத’ கிடாயின் உரிமையாளர் கோவிலில் சாமி சிலையின் முன் தன்னுடைய குற்றங்களை மண்டியிட்டு, வேண்டுதலை அடுத்த ஆண்டு நிறைவேற்றுகிறேன் என்று சத்தியம் செய்த பின்னர்தான் கிடாய் தலையை ஆட்டும்.

ஆட்டுக்கிடாய் தலையை ஆட்டியப் பின்னர் பூசாரியானவர் கழுத்தில் மாலை அணிந்து அருளுடன் நிற்பார். தலைமை நாட்டார் பூசாரியிடம் வாள் எடுத்துக்கொடுக்க அருளுடன் கிடாயினை வெட்டி அதன் இரத்தத்தைக் குடிப்பார். இவ்வாறு எத்தனை கிடாய் வெட்டப்பட்டாலும் அத்தனை கிடாயின் இரத்தத்தையும் பூசாரி குடிக்கின்றார். ஒவ்வொரு கிடாயின் இரத்தத்தைக் குடித்து முடித்தவுடன் அவருக்கு எலுமிச்சைச்சாறு கொடுக்கப்படுகிறது. ஆட்டுக்கிடாய் வெட்டப்பட்டதும் அதன் கழுத்திலிருந்து வெளியேறும் இரத்தத்தை ஒரு இலையில் வைத்திருக்கும் பச்சரிசியால் செய்யப்பட்ட சோற்றில் விடுகின்றனர். இதனை மலையாளிகள் **‘பலிச்சோறு’** என்று கூறுகின்றனர். ஆடு பலியிடப்பட்டவுடன் பொங்கல் வைக்கப்பட்ட பானைகள் வரிசையாக வீட்டிற்கு எடுத்துச் செல்லப்படுகிறது. பலியிடுதலின்போது மலையாளிகளின் சிறு குழந்தைகளும், பெண்களும் அனுமதிக்கப்படுவதில்லை. அவ்வாறு குழந்தைகள், பெண்கள் இருந்தால் இரத்தத்தைக் குடிக்க வரும் தெய்வங்கள், காட்டேரிகள், பேய்கள் அவர்களைப் பிடித்துக்கொள்ளும் என்று நம்புகின்றனர். இரத்தம் விடப்பட்ட பலிச்சோறு, கிடாய் வெட்டப் பயன்பட்ட வாள் ஆகியவற்றை மேளங்கள் இசைக்க சாமியிருக்கும் நான்கு திசைகளுக்கும் எடுத்துச் செல்வர். சான்றாக

**“மாதம் மும்மாரி மழை பேயவேணும்**
**எங்கள் கஷ்ட நஷ்டங்களை நீக்கவேணும்**
**எதிரிகளிடமிருந்து எல்லைகளைக் காக்கவேணும்**
**எங்கள் கஷ்ட நஷ்டம் நீக்கப் போராடி**
**நாங்கள் பிரமனோட வாதாடி**
**பிரமனிடத்தில் பள்ளி கொண்டோம்**
**எமனோட வாதாடி ஒரு**
**ஆட்டுக்கடா பலிகொண்டோம்”**[23]

என்று கோம்பைக் கிராமம் தகவலாளி சண்முகம் அவர்கள் பாடுகின்ற பாடல் உறுதி செய்கிறது. மேலும்,

**“இரத்தம் வருது, இரனபலி வருது**

**உதரம் வருது, உதரபலி வருது**

**காவு வருது, காவுபலி வருது, வருது பிடி…………”**

என்று மூன்றுமுறை கூவி பலிச்சோற்றை நான்கு திசைகளிலும் வீசி இறைக்கின்றனர். மேற்கண்ட பாடல் மலையாளிகளின் வாழ்வில் ஏற்படும் இன்னல்களிலிருந்து அவர்களைக் காக்கவேண்டி இத்தகைய பலிகள் குலதெய்வங்களுக்குக் கொடுக்கப்படுவதாக அறியமுடிகிறது. இவ்வாறு பலியிடலின் வாயிலாக இயற்கையையும் தெய்வங்களையும் வசப்படுத்த முடியும் என்று இம்மக்கள் நம்புகின்றனர்.

சிறுதெய்வங்களுக்கு ஆடு, கோழி, பன்றி போன்றவை பலியிடப்படுகின்றன. ‘பலியிடப்படும் பொருட்களெல்லாம் ஆண் இனத்தைச் சார்ந்தவைகளாகவே இருக்கின்றன. பெண்ணினம் உற்பத்திப் பெருக்கத்திற்கு அவசியம்’ என்பதால் அவை பலியிடப்படுவதில்லை என்று கூறுகின்றனர்.

### 5.2.10. மாவிளக்கு எடுத்தல்

மலையாளிகள் மாவிளக்கை இரவு நேரங்களில் எடுக்கின்றனர். மாவிளக்கு என்பது பச்சரிசியை ஊறவைத்து நன்கு இடித்து மாவாக்கிக் கொள்வார்கள். சர்க்கரை அல்லது வெல்லத்தை அடுப்பில் காய்ச்சிப் பாகாக்கி அதில் பச்சரிசி மாவினைக் கலந்து பிசைந்து உருண்டையாகவும் செவ்வக வடிவிலும் பிடித்து வைப்பர். பிறகு அந்த மாவினை எடுத்து வெங்கலக் கிண்ணத்தில் வைத்து அதனுடன் தேங்காய், வாழைப்பழம், வத்தி, சூடம் போன்ற பொருட்களை ஒன்றுசேர்த்து எடுத்துச் செல்கின்றனர். இதனையே **‘மாவிளக்கு’** எடுத்தல் என்பர்.

மாவிளக்கு எடுத்துச் செல்லும் பெண்கள் புத்தாடை, அணிகலன்கள் அணிந்து பூச்சூடி மிக்க மகிழ்வுடன் எடுத்துச் செல்கிறார்கள். கிண்ணத்தில் இருக்கும் மாவின் மேல் பகுதியில் ஒரு நுனிவிரல் பதியும் அளவிற்குப் பள்ளம் செய்து அதில் எண்ணெய் சிறிது ஊற்றி திரி வைத்து விளக்கேற்றுகின்றனர். மலையாளிகளின் பெண்கள் வீட்டிற்கு ஒரு மாவிளக்கைத் தலையில் வைத்துக்கொண்டு வீட்டு வாசலில் நிற்பர். மேளக்காரர்கள் மேளம், தாளத்துடன் இசைக்கருவிகள் ஒலிக்க ஒவ்வொரு தெருக்களிலும் சென்று அவர்களை அழைத்து வருகின்றனர். பிறகு ஒன்றுகூடி மந்தையிலுள்ள கோவிலைச் சென்றடைகிறார்கள். கோவிலின் முன் வரிசையாக மாவுக் கிண்ணத்தை வைப்பர். பூசாரி ஒவ்வொரு கிண்ணத்திலுள்ள தேங்காயை எடுத்து உடைத்துச் சூடம், பத்தி ஏற்றி பூசை செய்வார். பிறகு தீபாராதனை நடைபெறும். தீபாராதனை அனைத்து மாவிளக்கிற்கும் காட்டப்படுகிறது. அதனையடுத்து மாவிளக்கை எடுத்துக்கொண்டு கோயிலை மூன்றுமுறை

சுற்றிவந்து சாமியுடன் மருளாடிச் (அருள்) செல்கின்றனர். அன்றிரவு அவ்வின கூத்துக் கலைஞர்களால் தெருக்கூத்து நடத்தப்படுகிறது.

### 5.2.11. குல உணர்வு

குலதெய்வம் என்பது ஒருவருக்கு மட்டும் உரித்தானது அல்ல. பலருக்கும் உரியது என்ற கருத்து மறைந்திருக்கிறது. தனிப்பட்ட ஒரு குடும்பமாக ஆண்டுக்குப் பலமுறை குலதெய்வத்தை வழிபடலாம். ஆனால், அக்குலத்தைச் சார்ந்த பங்காளிகள் அனைவரும் ஆண்டுக்கு ஒரு முறை ஒன்றுகூடி வழிபடுகின்றனர். இப்பங்காளிகள் சிலர் ஒரே கிராமத்தில் இருந்தாலும் அல்லது பல கிராமத்தில் சிதறிக் கிடந்தாலும் ஆண்டிற்கு ஒருமுறை ஒன்று கூடுகின்றனர். குடும்ப பிரச்சினை காரணமாகப் பிரிந்திருப்பவர்கள் கூட குலதெய்வ வழிபாடு சமயத்தில் தவறாமல் ஒன்று சேர்கின்றனர். வழிபடுவதற்கான திட்டங்களை வகுத்து **'புறு'** (வரி) போடுகின்றனர். இந்த 'புறு' அனைவருக்கும் சமமானதாக இருக்கிறது. இதன் பின்னரே குலதெய்வத்தை வழிபடுகின்றனர். இக்குலதெய்வ வழிபாடனது பங்காளிகள் அனைவரையும் ஒன்று சேர்க்கிறது. அவர்களின் பகையை மறக்கச் செய்கிறது. சமாதானத்தை வளர்க்கிறது; சமத்துவத்தைப் பாதுகாக்கிறது; குழு உறவை வழியுறுத்துகிறது; பாரம்பரியத்தைப் பாதுகாக்கிறது என்கின்றனர்.

### 5.2.12. பறிபோகும் பழங்குடி தெய்வங்கள்

மலையாளிகளின் நிலங்களை ஆதிக்கச் சக்திகள் பறித்துக்கொள்வது போலவே இவர்களது தெய்வங்களையும் பறித்துக்கொள்கிறார்கள். தற்காலத்தில் அரசியல் அமைப்புகளை பெரிய அரசியல் கட்சிகள் விழுங்கி, தங்களது பாரம்பரியமாகக் காட்டிக் கொள்வதுபோல நாட்டில் உள்ள சமயங்கள் (மதங்கள்) பழங்குடியினரின் தெய்வங்களைத் தமதாக்கி ஜீரணித்து விடுகின்றன. சிறுதெய்வங்களைச் சக்தியாக, சிவனாக, விஷ்ணுவாக மாற்றி ஐக்கியப்படுத்திக் கொள்கின்றன.

இவ்வாறு கல்வராயன் மலை மலையாளிகள் வழிபடும் 'கரிராயன்' (கல்ராயன்) கரிராமனாக்கப்பட்டதும் இத்தகைய முறையிலேயே ஆகும். பழங்குடிகளின் சிறு தெய்வங்கள் பெருந்தெய்வங்களால் ஐக்கியப்படுத்தப்படுகின்றன. மேலும், இத்தகைய நிகழ்வுகள் நடந்து, பழங்குடிகளின் சிறு தெய்வங்களுக்கு சக்தி அதிகமாக இருப்பதாக கருதி, பிற இன மக்கள் வழிபாட்டிற்குப் படை எடுத்து வரும்போது பழங்குடியினர் விரட்டப்பட்டுகின்றனர். பழங்குடியினரின் தெய்வங்களையும் கூட அவர்களிடமிருந்து பறித்துத் தனதாக்கிக் கொள்கின்றனர்.

## 5.3. பொங்கல் பண்டிகை

தமிழரின் அடையாளமாகப் பொங்கல் திருநாள் கொண்டாடப்படுகிறது. 'தை பிறந்தால் வழி பிறக்கும் வாழ்க்கை சிறக்கும்' என்பது தமிழரது நம்பிக்கையாகும். மக்கள் தம் விளைநிலங்களில் நல்ல விளைச்சல் தந்த இயற்கைக்கும் பூமி பகவானுக்கும், சூரியனுக்கும், கால்நடைகளுக்கும் மற்றும் பிற தெய்வங்களுக்கும் நன்றியைத் தெரிவிக்கும் விதமாக, புது விளைச்சலில் கிடைத்த அரிசியை மேற்கண்ட தெய்வங்களுக்கு பொங்கல் வைத்து வழிபட்டு, நன்றியைப் பறைசாற்றும் விழாவாகப் இப்பொங்கல் பண்டிகை கொண்டாடப்பட்டு வருகிறது.

மலையாளிகள் பொங்கல் பண்டிகையை தொடங்குவதற்குப் பத்து நாட்களுக்கு முன்பாகவே விழா தொடர்பான நிகழ்வுகளைச் செய்ய தொடங்கிவிடுகின்றனர். தங்களுடைய வீடுகளைப் புதுப்பித்தல், வீட்டிற்குச் சுண்ணாம்பு பூசுதல், புத்தாடை எடுக்கச் சந்தைக்குச் செல்லுதல், பொங்கல் வைக்க விறகுச் சேகரித்தல், ஊரினைத் தூய்மையாக்கி அழகுபடுத்துதல் என வீட்டு வேலைகளை அவ்வினப் பெண்களும், காட்டுவேளை, ஊர்வேளைகளில் மலையாளி இன ஆண்களும் ஒற்றுமை உணர்வுடன் செயல்படுகின்றனர். இவ்விழாவானது ஏழுநாட்கள் நடைபெறுகிறது.

### 5.3.1. போகிப் பண்டிகை (காப்புக் கட்டு)

'பழையன கழிதலும் புதியன புகுதலும்' என்பதற்கேற்ப வீடுகளைப் புதுப்பொலிவு பெறச் செய்வது போகிப் பண்டிகையின் நோக்கமாகும். மலையாளிகள் இவ்விழாவினை **'காப்புக்கட்டு'** என்றே கூறுகின்றனர். போகிப் பண்டிகையின் காலையில் ஆட்டம் ஆடும் களமான மந்தையில் இலைதளைகள் கொண்டு ஆடவர்கள் பெரியவர்கள் அனைவரும் கூடிப் பந்தல் அமைக்கின்றனர். மாலை 3 மணியளவில் சாமி வீட்டில் இருந்து, குல தெய்வக் கோவிலுக்கு எடுத்துச் செல்லப்படுகிறது. அந்த நேரத்தில் மலையாளிகள் வீடுகள், கோவில், மாட்டுப்பட்டி, மரங்கள் போன்றவற்றிற்கு 'மாவிலை, வேப்ப இலை, பண்ணப்பூ, ஆவாரம்பூ, பூலாப்பூ' போன்றவற்றை ஒன்று சேர்த்துக் காப்பு (வளையம்) கட்டுகின்றனர். அதனால் இவ்விழா 'காப்புக்கட்டு' என்று அழைக்கப்படுகிறது. இவ்வாறு காப்பு வளையம் அமைத்து கட்டப்படுவதால் தீய சக்திகள் உள்ளே வராமல் காக்கப்படுவதாகவும், நோய்நொடிகள் நீங்குவதாகவும் மலையாளிகள் நம்புகின்றனர். மலையாளிகள் பொங்கல் தொடக்க நாள் முதல் இறுதி நாள் வரை இரவு நேரங்களில் மந்தையில் கட்டப்பட்ட 'பட்டியில்' மாடுகளை அடைத்துப் பந்தலுக்குள் தீயை மூட்டி இரவு முழுவதும் காவல் காக்கின்றனர்.

### 5.3.2. பெரும் பொங்கல்

தாவரங்கள் மற்றும் உயிரினங்கள் அனைத்திற்கும் வளமையைத் தந்து காக்கும் சக்திகளான மின்சக்தி, காந்த சக்தி போன்றவற்றிற்கு ஆதாரமாய் விளங்கும் சூரிய பகவானுக்கு நன்றியைத் தெரிவிக்கும் பொருட்டுக் கொண்டாடப்படுவது 'பெரும் பொங்கல்' (அ) சூரியப் பொங்கல் என்று கூறுவர்.

இப்பொங்கல் அன்று மலையாளி இனப் பெண்கள் காலை நான்கு மணிக்கே எழுந்து வீட்டைச் சாணத்தால் மெழுகி, வாசலில் கோலம் போட்டுப் பொங்கல் வைக்கத் தொடங்கிவிடுகின்றனர். அரிசியுடன் பால், பசுநெய், வெல்லம் போன்றவற்றைக் கலந்து பானையில் போடப் பானைப் பொங்கி வழிய 'பொங்கலோ பொங்கல்' என்று உற்சாகக் குரல்கள் எழுப்பி மகிழ்ச்சியை வெளிப்படுத்துகின்றனர். பொங்கல் சூரியனுக்குப் படைத்து வழிபட்டவுடன், மலையாளி இன ஆண்கள் தங்களுடைய குலதெய்வங்களின் கோவிலுக்குச் சென்று சாமி சிலைகளை அலங்கரித்து வீடு வீடாக எடுத்துச் சென்று ஊர் ஆடுகின்றனர்.

ஊராடியபின் தெய்வங்கள் மந்தையில் உள்ள பந்தலில் வைக்கப்படுகிறது. அந்தந்த ஊர்த் தெருக்கூத்துக் கலைஞர்களால் அன்று இரவு முழுவதும் கூத்து நடத்தப்படுகிறது. இவ்வாறு கூத்தாடுவதன் மூலம் தெய்வங்களை மகிழ்ச்சிப்படுத்த முடியும் என்று மலையாளிகள் நம்புகின்றனர்.

### 5.3.3. பட்டிப் பொங்கல் (மாட்டுப் பொங்கல்)

தோளோடு தோள் நின்று தன்னோடு உழைத்த கால்நடைகளுக்கு நன்றி செலுத்தும் திருவிழாவாக மாட்டுப்பொங்கல் கொண்டாடப்படுகிறது. இதனை மலையாளிகள் 'பட்டிப்பொங்கல்' என்று அழைக்கின்றனர். மலையாளிகள் மாடுகளைக் கழுவி கொம்புகளுக்கு வர்ணம் தீட்டி, கழுத்தில் வெண்கல மணிகள் ஒலிக்க மாடுகள் அலங்கரிக்கப்பட்டு மந்தையில் உள்ள 'பட்டியில்' அடைக்கின்றனர். சாமி வீட்டில் இருந்து பொங்கல் பானையும், சாமியும் மேளத் தாளத்துடன் மந்தைக்கு எடுத்துவரப்படுகிறது. மந்தையில் ஒரு இடத்தைத் தூய்மை செய்து சாணத்தால் மெழுகி கோலம்போட்டு அந்த இடத்தில் சாமி சிலைகள் அலங்கரிக்கப்படுகின்றன.

ஊர் மக்கள் அனைவரும் வீட்டிற்கொரு பானை பொங்கல் வைத்து சாமிக்குப் படையல்போட்டு வழிபடுகின்றனர். இதனை மலையாளிகள் **'பலவான்'** கும்பிடுதல் என்றும் கூறுகின்றனர். மந்தையில் அடைக்கப்பட்டுள்ள மாடுகள், வீடுகள், கோவில்கள், மரங்கள் என எல்லாவற்றிற்கும் **'பலவான் நீர்' 'பொலியோ பொலி', 'பொலியோ பொலி'** என்று மூன்றுமுறை கூவி இறைக்கப்படுகிறது. இங்குப் **'பொலியோ பொலி'** என்பது கால்நடைகளைப் பிடித்திருக்கும் நோய்கள் நீங்கி அவற்றின் உற்பத்தி பெருக வேண்டும்

என்பதையும், வீடுகளில் இனம் விருத்தியாக வேண்டும் என்பதையும் மரங்கள் நோய் இன்றி காய்கனிகளை அதிகமாகத் தரவேண்டும் என்பதையும் ஆண்டு முழுவதும் மழை பொழிந்து மண்வளமும் பயிர் வளமும் செழிக்க வேண்டும் என்பதையும் அடிப்படையாகக் கொண்டு **'பலவான் நீர்'** இறைக்கப்படுகிறது. பொங்கல்வைத்துச் சாமிக்குப் படைக்கப்பட்டு ஊர்மக்கள் அனைவருக்கும் தவறாமல் கொடுக்கப்படுகிறது. மலையாளிகள் 'பலவான் நீர்' இறைக்கப்படுவதாலும், 'பலவான் சோறு' உண்பதாலும் நோய்நொடி இன்றி வாழலாம் என்று நம்புகின்றனர்.

### 5.3.4. எருது பிடித்தல்

மலையாளிகள் எருதாட்டம் ஆடுவதற்குக் காளையினைத் தேர்வு செய்கின்றனர். இந்த எருதாட்டம் என்பது மலையாளி இனப் பழங்குடி மக்களிடையே பெரும் வழக்காக உள்ளது. எருதாட்டத்தினைப் பார்ப்பதற்கு ஆண்கள், பெண்கள், சிறுவர்கள் எனப் பார்வையாளர்களின் கூட்டம் மந்தையில் நிறைந்து காணப்படும். எருதாடுவதற்கான காளை முன்பாகவே தேர்வு செய்யப்பட்டு இருந்தால் அந்தக் காளையைப் பிடித்து எருதாட்டம் ஆடுவர். காளை தேர்வு செய்யப்படவில்லை என்றால் புதியதாகக் காளையை **'மருள்'** (அருள்) அழைத்துத் தேர்வு செய்கின்றனர். அவ்வாறு தேர்வு செய்யப்பட்ட காளையைக் **'கணிக்கோல்'** (காளையைப் பிடிக்க உதவும் கோல்) உதவியின் மூலமே பிடிக்க வேண்டும். பிடிக்கப்பட்ட காளையின் கழுத்தில் இரண்டு பக்கமும் சம அளவுள்ள ஒரு வடம் மாட்டப்பட்டு அக்காளைக்குச் சாமியார் பூசை செய்து ஆரத்தி எடுத்து வணங்குகிறார்.

அதன் பின்னர் அக்காளையை ஊர் பட்டியில் இருந்து மந்தைக்குப் பிடித்து வருகின்றனர். கயிற்றின் ஒரு பக்கத்திற்குப் பத்து பேர் வீதம் இரண்டு பக்கமும் பிடித்து இருப்பர். இவ்வாறு பிடிப்பதால் காளைக்கு முன்னால் இருப்பவர்களை முட்ட வாய்ப்புக் கிடைப்பதில்லை. காளையின் முன்னால் இருப்பவர்கள் மூங்கில் தடியின் முனையில் துணியைக் கட்டி சீண்டி காளையைக் கோபம் உரச் செய்வர். காளை சோர்ந்துவிட்டு அமைதியாக இருக்குமானால் பின்னால் இருப்பவர்கள் தடியினால் காளையை உசுப்பி விடுவர். இந்த இரண்டு முறைகளில் காளையினை ஆத்திரமுரச் செய்ய முடியவில்லை என்றால் வெறுமனே அதனை முன்னும் பின்னுமாக இழுத்து அதன் கோபத்தைத் தூண்டுவர். காளை சோர்வடைந்ததும் அதனை அவிழ்த்து விடுவர். இவ்வாறு சுமார், பன்னிரண்டு பதின்மூன்று காளைகளைக் கொண்டு இவ்வாட்டம் நடைபெறுகிறது. மந்தை சரிவாக அமைந்து இருந்தால் அந்த இடத்தில் காளையினை மலையாளிகளால் கட்டுப்படுத்த முடியாமல் போகும். அத்தகைய இடங்களில் காளை இழுத்துச் சென்று சிலரைத் தாக்கிக் காயப்படுத்தியும் விடுவது உண்டு. இவ்வாறு ஆய்வாளர் களப்பணி மேற்கொண்டபோது எருதாட்டத்தின் போது காளைச் சிலரைக் காயப்படுத்தியதையும் களப்பணியின்போது காணாமுடிந்தது.

### 5.3.5. இடுகாட்டில் வழிபடுதல்

இறந்த மூதாதையர்களின் நினைவாக அவர்கள் புதைக்கப்பட்ட இடத்திற்குத் தங்கள் இன மக்கள் அனைவரும் சென்று பொங்கல் வைத்து வழிபடுவது **'முன்னோர் வழிபாடு'** ஆகும். மலையாளி இனப் பழங்குடிகள் ஒருநாள் முழுவதும் விரதம் (அ) நோன்பு இருந்து மூதாதையர்கள் புதைக்கப்பட்ட இடத்திற்குப் பொங்கல் வைத்து, அவர்களுக்குப் பிடித்தமான பொருட்களான **'பீடி, சுருட்டு, சாராயம், சட்டை, வெட்டி, ரவுக்கை, புடவை, பொடி, புகையிலை'** போன்றவற்றைப் படையலுடன் வைக்கின்றனர். பின்னர் அவர்களுக்குக் கோழி, ஆடு பலிகொடுத்துப் பின் சமைத்துப் படையலில் வைத்து வணங்குகின்றனர். இவ்விழாவினை அனைத்துப் பழங்குடி இன மலையாளிகளும் ஒரேநாளின்போது கொண்டாடுகின்றனர். இவ்வாறு வழிபடுவதால் இறந்தவர்களின் ஆவிகளைத் திருப்திபடுத்துவதாகவும், அவர்களின் ஆற்றல்களும் அனுபவங்களும் தங்கள் குடும்பங்களைத் தீய சக்திகளிடம் இருந்து காக்கும் என்றும் நம்புகின்றனர்.

இவற்றுள் மலையாளிகள் பிற தெய்வங்களுக்கு வெவ்வேறு தினங்களில் விழா எடுக்கின்றனர். ஆனால் முன்னோர் வழிபாட்டை மட்டும் ஒரே நாளில் அனைத்து மலையாளி இனப் பழங்குடி மக்களும் கொண்டாடப்படுவது இங்கு கவனிக்கத்தக்கதாகும். இங்கு குழும நிலைத்தன்மை பொதுவிழாவிலும், குலதெய்வ விழாவிலும் அமைவது கவனிக்கத்தக்க ஒன்றாகும்.

### 5.3.6. ஆட்டங்கள்

மலையாளி இனப் பழங்குடிகளின் வாழ்க்கைக்குப் பல்வகையில் உதவியாக இருந்த தெய்வங்களை மகிழ்விப்பதற்காக பல்வேறு வகையான இசையை இசைத்து பல ஒப்பனைகளுடன் இறவில் ஆட்டம் அடுகின்றனர். அந்த வகையில் மலையாளிகள் இரவு நேரங்களில் மந்தையில் அமைக்கப்பட்டுள்ள களங்களில் தங்களுடைய பாரம்பரிய நடனங்களை ஆடி வருகின்றனர். இவ்வாட்டத்திற்கு உருமி, மேளம், குழல் என்ற இசைக் கருவியைக் கொண்டு இசைக் கலைஞர்கள் பலவகையான இசையை இசைப்பர். இந்த இசைக் கருவிகளின் ஒலிக்கு ஏற்ப மலையாளிகள் வட்டமாகவும், வரிசையாகவும் நின்று 'விசில்' அடித்து தங்கள் ஆட்டத்தை வெளிப்படுத்துகின்றனர்.

இவ்வாட்டத்தைக் காண பெண்கள் பார்வையாளர் என அவ்வின மக்கள் திரளாக அமர்ந்து இருப்பர். ஆப்போது ஆடவர்களில் ஒருசிலர் **'புலி, நரி, கரடி, கோமாளி, கிழவி வேடம்'** புனைந்து தீ பந்தம் கையில் பிடித்து இசைக்கு ஏற்ப ஆடுகின்றனர். இடையில் வேடம்போட்டு வந்திருப்பவர்களிடம் இங்குள்ள ஒருவர் வேடிக்கையாக நீங்கள் எந்த ஊர், உங்கள் பெயர் என்ன என்று கேட்பர். அதற்கு அவர்கள் கேலி வார்த்தைகளில் தங்கள் பெயரையும், ஊரையும் சொல்லுவார்கள் அதைக் கேட்டு பார்வையாளர்கள் வேடிக்கையாகச்

சிரிப்பதாக ஆட்டம் நடைபெறுகிறது. இவ்வாட்டம் மூன்று நாட்கள் இரவு நேரங்களில் மட்டும் ஆடப்படுகிறது.

### 5.3.7. கதராணிக்கட்டு

'கதராணிக்கட்டு' என்பது பொங்கல் விழாவின்போது தெய்வங்களுக்கு அலங்கரிக்கப்பட்ட ஆடை அணிகலன்களைக் களைத்து சாமிகூடையில் வைத்துக் கட்டப்படுவது ஆகும். இவ்விழாவே பொங்கலின் இறுதி நாள் விழாவாகும். அன்று மலையாளி இன ஆண்களும் பெண்களும் புத்தாடைகள் உடுத்தியும் பெண்கள் நகைகள் அணிந்தும் காணப்படுவர். ஊரில் உள்ள சிறியவர் பெரியவர்கள் என அனைவரும் மந்தையில் ஒன்றாகக் கூடுகின்றனர்.

மலையாளிகளின் எல்லா விழாக்களிலும் இடம்பெறக்கூடிய ஒரு பாத்திரமாகக் கோமாளி, கிழவி பாத்திரம் இருக்கின்றது. இவர்கள் சேவாட்டம் ஆடும் கலைஞர்களை வழிநடத்துபர்களாக இடம்பெறுகின்றனர். மலையாளி இனப் பெண்கள் அனைவரும் வீட்டிற்கு ஒரு ஆராத்தி எடுத்து கோமாளி, கிழவி முன் செல்ல அவர்களுடன் பின் தொடர்ந்து மந்தையை மூன்று சுற்றுச் சுற்றுகின்றனர். ஆராத்தினை எருதாட்டம் பிடிப்பதற்குப் பயன்பட்ட வடம், கணிக்கோல், கோல் ஆகியவற்றிற்குப் பொட்டு வைத்து ஆலம் சுற்றுகின்றனர். இச்சடங்கு தெய்வங்கள், எருதுகள் பிடிக்க உதவிய கயிறு மற்றும் அவ்வின ஆண்கள் அனைவருக்கும் திஷ்டி கழிக்கும் ஒரு சடங்காக நிகழ்த்தப்படுகிறது. இக்கயிற்றுச் சுருளின் இரு பக்கங்களிலும் கோமாளி வேடம் போட்டவரும், கிழவியும் நின்றிறுப்பர். பெண்கள் ஆராத்தி சுற்றும் போது கோமாளி தன் கையில் ஒரு வாழைப்பழம் வைத்துக் கொண்டு ஆராத்தி எடுக்கும் பெண்களுக்குத் தருவதுபோல் ஏமாற்றி தலையில் ஓர் அடி அடிக்கிறார்.

கிழவி வேடம் போட்டு இருப்பவர்கள் ஈர்க்கொல்லிக் கொண்டு பெண்களின் தலையில் ஈத்துகிறாள். எல்லாப் பெண்களுக்கும் இத்தகைய ஏமாற்றம் நடைபெறுகிறது. கோமாளி தலையில் அடிப்பதும் கிழவி ஈர்க்கொல்லிக் கொண்டு ஈத்துவதும் தீட்டுக் கழிப்பதாகவே மலையாளிகள் நம்புகின்றனர். ஆராத்தி எடுத்த பெண்களுக்கு ஊர்க் கவுண்டர் ஆராத்தி தட்டில் வெற்றிலைப் பாக்கு வைத்துக் கொடுக்கின்றார். அதன்பின் ஆராத்தி எடுத்த பெண்கள் மலையாளி இன ஆண்கள் வரிசையாக நிற்க அவர்களின் காலில் விழுந்து வணங்கி ஆசிபெறுகின்றனர்.

இறுதியாக குலதெய்வங்களுக்கு அணிவிக்கப்பட்ட அணிகலண்கள், சாமிசிலைகள் போன்றவற்றை சாமி வீட்டிற்கு மேளத் தாளத்துடன் எடுத்துச் செல்லப்படுகிறது. மலையாளி இனப் பெண்கள் சாமிப்போகும் பாதையில் வரிசையாக நின்று தண்ணீர் ஊற்றிச் செல்வது மரபாகும். ஆண்கள் மேளம் அடித்து சேவாட்டம், கோலாட்டம் ஆடிக்கொண்டு சாமிக்கு முன்பு செல்கின்றனர். சாமிசிலைகள் அருள் ஆடியவாரே சாமிவீட்டை நோக்கிச் சென்று

கொண்டே இருக்கும். ஊர்த்தெருக்களின் இடையிடையில் பெண்கள் சாமிக்கு ஆராத்தி எடுத்து வழிபடுகின்றனர். இவ்வாறு அந்தப் பகுதி ஆட்டம் பாட்டத்துடன் மக்கள் கூட்டம் நிறைந்ததாகக் காணப்படும். தெய்வங்கள் சாமி வீட்டிற்குச் சென்றவுடன் அருள் அழைத்து தாலாட்டுப்பாடித் தெய்வங்களைச் சாமி வீட்டில் இறக்கி வைக்கின்றனர். அதன் பின்னர் மலையாளி இனச் சிறுவர்கள் ஆண்கள் என அனைவரும் கைகளை மேலே உயர்த்தி ஒருவரை ஒருவர் பிடித்துகொள்வர். கோவில் பூசாரி அவர்களின் கையில் சாட்டையால் ஓங்கி அடிக்கின்றார். இவ்வாறு அடிப்பதால் அவர்களைப் பிடித்த தீய சக்திகள் நீங்கி விடும் (அ) ஓடிவிடும் என்று நம்புகின்றனர்.

## 5.4. மந்திரச் சடங்குகள்

சவ்வாது மலை மலையாளிகள் மருந்தைவிட மந்திரத்தை அதிகமாக நம்புகின்றனர். “மந்திரம் என்பது, ஒரு மாயையை நாம் உண்டாக்கி அதனால் இயற்கையை நாம் கட்டுப்படுத்துவதாக எண்ணி, அவ்வாறு கட்டுப்படுதுவதன் மூலம் உண்மையாகவே இயற்கையைக் கட்டுப்படுத்துவதாக நம்புகின்றனர்”[24]. மந்திரங்கள் “இயற்கையின் இயக்க விதிகளைப் புரிந்து கொள்ள இயலாத ஆதி மனிதன், இயற்கையைக் கட்டுப்படுத்தவும் அதனிடமிருந்து சில பயன்களைப் பெற்றுக்கொள்ளவும் உருவாக்கிய ஒன்றே என்பது கருத்தாகும் என்கின்றனர் மானிடவியலார்”[25]. “மந்திரம் என்பது போலச் செய்தல் என்ற கொள்கையை அடிப்படையாகக் கொண்டது. நாம் செயல்புரிந்து அதுபோல செயல்புரிய இயற்கையினைத் தூண்டுவதே அதன் செயல்பாடாகும்”[26] என்கிறார் கைலாசபதி.

கள ஆய்வின்போது மலையாளி இனமக்கள் பல்வேறு வகையான நோய்களுக்கு மந்திரத்தைப் பயன்படுத்தி வருவதைக் காணமுடிந்தது. அவர்களிடமிருந்து சேகரிக்கப்பட்ட மந்திரம் தொடர்பான நம்பிக்கைகளைப் பின்வருமாறு வகைப்படுத்தலாம்.

1. ஒத்த மந்திரம்
2. தொற்று மந்திரம்
3. தூய மந்திரம்
4. தீய மந்திரம்

### 5.4.1. ஒத்த மந்திரம்

ஒத்த மந்திரம் என்பது ஒத்தது ஒத்ததை உருவாக்கும் என்பதாகும். இதன்படி ஒருவருக்கு நாம் ஏற்படுத்த வேண்டிய விளைவும், அதனை அடையச் செய்யப்படுகின்ற செயலும் ஒத்திருக்கும். மலையாளிகள் ஒருவனிடத்தில் குணப்படுத்த முடியாத கொடிய கட்டிகளையும், கொப்பளங்களையும் ஏற்படுத்த வேண்டும் என்றால், மந்திரவாதியை நாடி,

மந்தரித்து வாங்கிவந்து நோய் உண்டாக்கக் கூடியவரின் வீட்டின் அருகில் உள்ள ஒரு புற்றில் கொண்டுபோய் வைத்துவிடுகின்றனர். இவ்வாறு செய்வதற்குக் காரணம் புற்றுப்போல் கொப்புளம், கட்டி முதலியன வந்து இறந்துப் போவான் என்று நம்புகின்றனர். மேலும், ஒருவருக்குக் கொடிய நோய்வந்து இறப்பை ஏற்படுத்த வேண்டுமென்றாலும், துயரை விளைவிக்க வேண்டுமென்றாலும் எதிராளி பயன்படுத்தக்கூடிய பொருட்கள் (துணிமணிகள், காலடிமண்) போன்றவைகளில் ஏதேனும் ஒன்றை எடுத்து மந்திரவாதிகளிடம் கொடுத்து, மந்தரித்து அவனுடைய பெயரைத் தகடுகளில் எழுதிப் பூசைசெய்து எதிராளியின் வீட்டிலோ, நிலங்களிலோ வைக்கின்றனர். அவ்வாறு செய்தால் எதிரியின் உடலில், சொறி, கட்டி போன்ற கொடிய நோய்கள் ஏற்பட்டுக் குறிப்பிட்டக் காலத்திற்குள் இறந்து போவான் என்று நம்புகிறார்கள்.

### 5.4.2. தொற்று மந்திரம்

மலையாளிகள் தொற்று மந்திரம் மீது மிகுந்த நம்பிக்கை வைத்திருக்கின்றனர். மந்திரம் செய்பவர் நோய் இருப்பவரின் உடம்பினைத் தொட்டு, மந்திரம் செய்தால் நோய்கள் தீரும் என்கின்றனர். இதனைத் தொற்று மந்திரம் என்கின்றனர். மலையாளிகள் ஒருவருக்கு உடல்நிலை சரியில்லை என்றால் அருகில் இருக்கும் மந்திரவாதியை நாடுகின்றனர். மந்திரவாதி நோய் நீக்குவதற்குச் சில சடங்குகளைச் செய்ய வேண்டும் என்று, சடங்குக்கு வேண்டிய பொருளை வாங்கிவரச் சொல்கின்றார். மந்திரவாதி வீட்டின் அருகே ஆள் நடமாட்டம் இல்லாத காட்டுப்பகுதிக்கு நோய் ஏற்பட்டவரை அழைத்துச் செல்கிறார். மந்திரவாதியின் உதவியாளர், நோய்பட்டவரின் உறவினர் ஒருவர் உடன் செல்கின்றனர். பெண்கள் செல்வதில்லை.

காட்டுப்பகுதியில் ஒரு இடத்தைத் தேர்வு செய்து அவ்விடத்தைச் சாணத்தால் மெழுகி ‘கோட்டம்’ (கோலம்) போட்டு அதில் நோய்பட்டவரை உட்கார வைக்கின்றனர். வாங்கிவந்த சடங்குப் பொருட்களை இலையில் படைத்து மந்திரவாதி மந்திரம் போடுகின்றார். மந்திரவாதி பாடலைப் பாடும்போது அவருடைய உதவியாளரும் சேர்ந்து பாடுகின்றனர். பின்னர் மந்திரவாதி ஒரு கைப்பிடி இலையை ஒடித்து நோய்பட்டவரின் தலை முதல் கால் வரை மூன்றுமுறை தொட்டு இழுக்கின்றார். அவ்வாறு செய்தால் நோய் நீங்கிவிடும் என நம்புகின்றனர். பின்னர் நோயாளின் தலையை மூன்று முறை சுற்றிவிட்டு ஒரு தேங்காயை எடுத்து வேகமாக உடைக்கிறார். நோயாளின் கையில் காப்புக்கட்டி ஒரு கோழியைப் பலி கொடுக்கின்றனர். பலிகொடுத்துவிட்டு நோயாளியும் மற்றவர்களும் திரும்பி பார்க்காமல் வீட்டிற்கு வருகின்றனர். திரும்பிப் பார்த்தால் நம்மைப் பிடித்திருந்த நோய் (அ) தீய சக்தி

பின் தொடர்ந்து விடும் என நம்புகிறார்கள். பின்னர் நோயாளியை வெந்நீரில் குளிக்க வைத்து ஆரத்தி எடுத்து வீட்டிற்கு உள்ளே அழைக்கின்றனர்.

ஒரு சிலர் மிளகு வத்தல், உப்பு, கடுகு போன்றவற்றை ஒன்றாகச் சேர்த்து வறுத்து சிறு பொட்டலமாகக் கட்டி அப்பொட்டலத்தை நோயாளின் உடல் முழுவதும் தடவிப் பின்னர் நெருப்பில் போட்டு எரித்துவிடுகின்றனர். இங்கு நோய் இருப்பவரின் உடம்பில் உப்பு, மிளகு, கடுகு முதலிய பொருட்கள் படும்போது நோயானது அப்பொருட்களினுள் புகுந்து நெருப்பில் அழிந்து போகும் என்பது இவர்களின் நம்பிக்கை.

திருமணப்பந்தல் அமைக்கும்போது பச்சை மூங்கிலை வெட்டிவந்து தூண்களாகப் பயன்படுத்தும் பழக்கம் இம்மக்களிடம் உள்ளது. வீட்டு விலங்குகளான ஆடோ, பசுவோ, கன்று ஈனும்போது அதன் நச்சுக் கொடியைப் பாலுள்ள மரத்தில் கட்டுகின்றனர். ‘நச்சுக்கொடியை அப்புறப்படுத்தாமல் விட்டுவிட்டால் ஈன்ற விலங்கோ அல்லது பிறவிலங்குகளோ அதனைத் தின்றுவிடும். அவ்வாறு தின்றுவிட்டால் ஈன்ற பசுவுக்குப் பால்சுரக்காது என்று கருதி பசு கன்று ஈனும் வரை காத்திருந்து நச்சுக்கொடியை ஒரு சாக்குப்பையில் போட்டு, பாலுள்ள மரத்தில் கட்டுகின்றனர். அதனால் ஈன்ற பசுவும், ஆடும் அதிகமான பாலைத் தருவதாக நம்புகின்றனர்.

தாய்மைப்பேற்றில் குழந்தை பிறந்தவுடன் அதன் தொப்பூழ்கொடியை அறுத்தெடுத்துப் புதைத்து விடுகின்றனர். தாயின் நச்சுக் கொடியை விலங்குகள் தின்றால் தாய்ப்பால் குறைந்து விடும் என்றும், குழந்தையின் தொப்பூழ் கொடியை விலங்குகள் தின்றால் குழந்தைக்கு ஆகாது என்றும் மக்கள் நம்புகின்றனர். இத்தகைய செயல்பாடுகள் அனைத்தும் தொற்று மந்திரத்தின் மேல் கொண்ட நம்பிக்கையின் வழியே நிகழ்கிறது எனலாம்.

### 5.4.3. தூய மந்திரம்

தூய மந்திரம் என்பது ஒருவருக்கோ அல்லது ஒரு சமுதாயத்துக்கோ நன்மை பயப்பதாக இருக்கும். “மந்திரச் சடங்குகளும், மந்திரச் சொற்களும் ஒரு மனிதனின் நலனுக்கோ ஒரு குழு அல்லது சமுதாயம் முழுவதன் நலனுக்கோ பயன்படுத்துவது தூய மந்திரம் ஆகும்”[27]. மலையாளிகள் தீய ஆவிகளினால் ஏற்படும் பல்வேறு நோய்களை நீக்குவதற்கு மந்திரவாதியை நாடுகின்றனர். மந்திரவாதி நோயினைக் கண்டறிந்து, நோய் நீக்குவதற்கான ஏற்பாடுகளைச் செய்கிறார்.

மலையாளிகள் காடுகள், மலைகள், குன்றுகள் எனத் தங்களுடைய வாழ்க்கையை அமைத்துக் கொண்டு வாழ்ந்து வருபவர்கள் காட்டுப் பொருட்களைச் சேகரிப்பதற்கும், விறகு வெட்டுவதற்கும், ஆடுமாடுகள் மேய்ப்பதற்கும் காடுகளையே நாடுகின்றனர். அப்பொழுது காடுகளில் உறைந்திருக்கும் தீயசக்திகள், 'பேய்கள்', 'முனி' போன்ற ஆவிகள் அவர்களைப் பிடித்துக்கொள்கின்றன. அழகிய பெண்களிடத்திலும் கன்னிகளிடத்திலும், ஆவிகள் விருப்பத்துடன் உறையுமென்றும், மோகினி என்கிற பெண் பேய் ஆண்களைப் பிடித்துக்கொள்ளும் என்றும் நம்புகின்றனர். "பெண்கள் பூப்புக்கு வந்த காலந்தொடங்கி, அவர்களுடலில் அணங்காகிய புனித சக்தி புகுந்து கொள்வதாகவும் அது பெரும்பாலும், அவர்களின் மார்பகங்களிலும், சிறுபான்மை அல்குலிலும் தங்குவதாகவும்"[28] ஜியார்ஜ் ஹார்ட் குறிப்பிட்டுள்ளதாகத் தே.ஞானசேகரன் குறிப்பிடுகின்றார்.

கொலை செய்யப்பட்டவர்கள், தற்கொலை செய்துகொண்டவர்கள், விலங்குகளால் தாக்கப்பட்டவர்கள், அல்லது கொடிய நோயினால் மரணம் அடைந்தவர்களின் ஆவிகள் இவர்களைப் பிடித்துக்கொள்வதாக நம்புகின்றனர். இது பெரும்பாலும் பல்வேறு இனப் பழங்குடி மக்களிடத்திலும் காணக்கூடிய ஒன்றாகும். இந்நம்பிக்கை மலசர், காணிகாரர், ஊராளி, முதுவர் போன்ற பழங்குடி மக்களிடத்திலும் இருப்பதாகக் கூறுகின்றனர்.

### 5.4.3.1. மலையாளிகள் பேய் ஓட்டும் முறை

சவ்வாது மலை தென்மலை நாட்டிற்கு உட்பட்ட சின்னக்கீழ்ப்பட்டு கிராமத்தில் இருக்கும் மந்திரவாதி கோவிந்தராஜ் என்பவர் அப்பகுதி மக்களுக்கு பேய் ஓட்டும் சடங்கைச் செய்து வருகிறார். பேய் பிடித்த குடும்பத்தினர் பேயை விரட்டும்படி இவரை நாடுகின்றனர். இவர் வெள்ளி, அல்லது செவ்வாய்க்கிழமைகளில் விரட்டுவதாகக் கூறி அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யச் சொல்லுகிறார். அந்த நாள் வந்ததும் பேய் பிடித்தவர்களை ஒரு வட்டம் போட்டு, நான்கு திசைகளிலும் எலுமிச்சைப் பழத்தை அறுத்து குங்குமம் தடவிவைத்து அதில் உட்கார வைக்கின்றார். அவருக்கு அருகில் பச்சரிசி, பழம், தேங்காய், வெற்றிலை, பாக்கு, பொறி போன்றவற்றைச் சாமிக்குப் படைத்துக் கற்பூரம் ஏற்றி பேயோட்டும் வேளையில் மந்திரவாதி ஈடுபடுகிறார். முதலில் தங்களுடைய குல தெய்வத்தையும், பேய்பிடித்தவர் குலதெய்வத்தையும் வேண்டிப் பாடல்பாடுகிறார். பேயோட்டும் போது பின்வரும் அமைப்பில் பாடல்கள் பாடி பேயை அழைக்கின்றார்.

1. குலதெய்வத்தை வேண்டுதல்
2. பிற தெய்வங்களை வேண்டுதல்
3. பேய் பற்றிய செய்திகள் அறிதல்

4. விவரம் கேட்டல்
5. பேய்ப்பாட்டு
6. வேண்டுதல்
7. கட்டளையிடுதல்

### 5.4.3.1.1. குலதெய்வம்

மந்திரவாதி மலையாளிகளின் குலதெய்வமாக விளங்குகின்ற சேமியம்மன், திக்கியம்மன், நாச்சியம்மன், வேடியப்பன் போன்ற தெய்வங்களை அழைத்து வேண்டுகிறார். அந்த மலைப் பகுதிகளில் இருக்கும் சிறு தெய்வங்களையும் மந்திரவாதி அழைத்துப் பாடுகிறார். மேலும் வனங்களிலே இருக்கும் காளியம்மன், நாச்சியம்மன், பேச்சியம்மன், பழனியம்மன், குள்ளியம்மன் போன்ற தெய்வங்களையும் அழைக்கிறார். தான் ஒருவன் மட்டும் நின்று இந்தப் பேயை ஓட்ட முடியாது என்னுடைய தெய்வங்களாகிய நீங்களும் வந்து எனக்குத் துணை நிற்க வேண்டும் என்று பாடி அழைக்கிறார்.

### 5.4.3.1.2. பிற தெய்வங்களை அழைத்தல்

மந்திரவாதி குலதெய்வங்களை அழைத்துப் பாடிவிட்டுப் பிநகு பிற தெய்வங்களான மாரியம்மன், தூரோபதியம்மன், மதுரை மீனாட்சி, காஞ்சி காமாட்சி, காசி விசாலாட்சி, பரமேஸ்வரி, துர்கேஸ்வரி முதலான தெய்வங்களையும் துணைக்கு அழைக்கிறார். நீங்கள் துணைக்கு வராவிட்டால் இந்தப் பேயை விரட்டமுடியாது. பேயை விரட்டாவிட்டால் என் மக்கள் என்னை மன்னிக்கமாட்டார்கள் என்று பாடல்களின் நடுவே புலப்படுத்துகின்றார். இவ்வாறு பல்வேறு தெய்வங்களைத் அழைத்து பாடும்போது பேய் பிடித்தவர் தலை ஆடியபடி வருகிறது.

### 5.4.3.1.3. பேய் பற்றிய செய்தியை அறிதல்

பேய் ஆடிவருவதைக் கண்ட அவ்வின மக்கள் அச்சம் கொள்கின்றனர். மந்திரவாதி துணிச்சலாக நின்று நீ எந்த ஊர் பேய் என்று கேட்க பேய் தனது ஊரின் பெயரைச் சொல்கிறது. சில பேய்கள் ஊர் பெயரை மாற்றி மாற்றி சொல்வதும் உண்டு. உனது பெயர் என்ன? எந்த இடத்தில் இதற்கு முன்பு தங்கியிருந்தாய்? எதற்காக இந்தப் பெண்ணைப் பிடித்தாய்? என்றெல்லாம் மந்திரவாதி பேயிடம் கேட்கிறார். பேய் பிடித்த நபர் ஊர்பெயர், இருந்த இடம் முதலியவற்றைச் சொல்லி, சந்தைக்குப் போய் வரும்போதோ, அல்லது காட்டிற்கு வரும்போதோ வெல்லம், மாமிசம், இனிப்பு பலகாரங்கள், போன்றவற்றை வாங்கி வரும்போதோ (அல்லது) எடுத்துச் செல்லும்போதோ அவற்றிற்கு ஆசைப்பட்டுப் பிடித்ததாக அந்தப் பேய் கூறுகின்றது.

### 5.4.3.1.4. விவரம் கேட்டல்

மந்திரவாதி மலையாளிகளிடம் பேய்க்குக் கொடுக்க என்ன இருக்கிறது? என்று மறைமுகமாக கேட்பார். அவர்களும் கோழி, அல்லது பன்றி, ஆடு இருக்கிறது என்று சைகையிலே காட்டுகின்றனர். பின்னர் மந்திரவாதி பேய் பிடித்த நபரிடம் உனக்கு என்ன வேண்டும்? என்று கேட்கிறார், அதற்குப் பேய் பிடித்த நபர் உயிர் பலி வேண்டும் என்று கேட்பதுமுண்டு. பேய் பிடித்தவர் பேராசைக்காரனாக இருந்தால் எனக்கு கருப்பு ஜீவன் (பன்றி, ஆடு) வேண்டும் என்று கேட்பர். கொடுத்தால் போய்விடுவாயா! என்று மந்திரவாதி கேட்க, பேயும் போய் விடுகிறேன் என்று கூறும். அதன் பின்னர் ‘நீ’ எப்படி இறந்தாய் என்றெல்லாம் பேயிடம் விவரம் கேட்கின்றனர். ஒரு சிலரை ஒன்றுக்கு மேற்பட்ட பேய்களும் பிடித்துக் கொள்வதுண்டு. அவ்வாறு பிடித்திருந்தால் பேய்பற்றிய விவரம் கேட்கும் பொழுது அதன் பெயர், ஊர் ஆகியவற்றை மாற்றி மாற்றி சொல்லும் என்கின்றனர்.

### 5.4.3.1.5. வேண்டுதல்

பேய் போய்விடுவதாகக் கூறியதும் மந்திரவாதி பேயிடம் ‘நான் போறன்’ என்று பேயிடம் உன் தலைமுடியைக் கொஞ்சம் எடுத்துக்கொடு என்று கேட்கிறார். பேய் எனக்கு கொடுக்க வேண்டிய பொருளைக் காட்டு அப்பொழுதுதான் முடி எடுத்துக் கொடுப்பேன் என்று சொல்கிறது. பலி கொடுக்கக்கூடிய பொருளைப் பேய் பிடித்த நபரிடம் கொண்டுவந்து காண்பித்ததும், பேய் பிடித்த நபர் முடியினை எடுத்துக் கொடுக்கிறார். சில பேய்கள் நான் போகமாட்டேன் என்று அடம்பிடிப்பதும் உண்டு, அப்பொழுது மந்திரவாதி பேய் பிடித்த நபரைத் தீயினால் சுட்டு விடுவேன் சூடு வைத்து விடுவேன் காதை அறுத்துடுவேன் என்றெல்லாம் விரட்டுவதும் உண்டு. அதன் பின்னர் பேய் முடியினை எடுத்துக் கொடுக்கும்.

### 5.4.3.1.6. கட்டளையிடுதல்

பேய் முடி எடுத்துக் கொடுத்தவுடன் மந்திரவாதி ஒரு சிறு கயிறினை எடுத்து அந்த முடியைக் கட்டுகிறார். மேலும், பேயிடம் நீ எந்தத் திசை நோக்கி போக விரும்புகிறாய். ‘எந்த இடம் பிடித்திருக்கிறது’ என்று மந்திரவாதி கேட்டு, பேய் பிடித்தவரை அந்தத் திசையை நோக்கி திருப்பிவிடுகிறார். மந்திரவாதி பேய் எடுத்துக் கொடுத்த தலைமுடியை அறுத்து மரத்தில் வைத்து ஆணி அடிக்கின்றார். பின்னர்ப் பேய் பிடித்தவர் மயக்கமடைகிறார். ஆவரைத் திரும்பி பார்க்கவிடமால் உடன் சென்றவர்களும் மந்திரவாதியும் வீட்டிற்கு அழைத்து வருகின்றனர். திரும்பி பார்த்தால் பேய் மீண்டும் பின்தொடர்ந்து வந்துவிடும் என மலையாளிகள் நம்புகின்றனர். சவ்வாது மலைப்பகுதியில்

மந்திரவாதிகள் பேயோட்டுவதுடன் விஷக் கடிக்கும் மருந்து கொடுக்கிறார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

### 5.4.3. தீய மந்திரம்

தீய ஆவிகளை, தீங்கு விளைவிக்கும் சக்திகளை எதிரியின் மேல் ஏவிவிடுதல், பெண்களை வசியம் செய்தல் போன்ற செயலுக்குப் பயன்படுத்துவது தீய மந்திரமாகும். பில்லிசூனியம், ஏவல் போன்றவைகளைத் தீய மந்திரச் சடங்குகளில் அடக்கலாம். மலையாளிகள் இவ்வகையான மந்திரச் செயல்பாடுகளில் அதிகம் ஈடுபடுவதில்லை. ஆனால் ஒருவருக்குக் கெடுதல் செய்ய வேண்டுமென்றால் சமவெளிப்பகுதி மந்திரவாதியை அணுகின்றனர். அவர் வெற்றிலை, எலுமிச்சை, முட்டை ஆகியவற்றில் மந்திரம் சொல்லி வீட்டின் முற்றத்திலோ, வீட்டின் சுவர்களிலோ மறைத்து விடுவார். அந்தக் குறிப்பிட்ட நபர் இப்பொருட்களைத் தாண்டினாலோ அல்லது தொட நேர்ந்தாலோ பலவித இன்னல்களுக்கு உள்ளாக நேரிடும். எனவே மலையின மக்கள் தீயச் சடங்குகளைச் செய்ய முன்வருவதில்லை. தம் இனத்தில் இருக்கும் ஒருவருக்குத் தீங்கு செய்ய அவர்கள் நினைக்கமாட்டார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

## 5.5. நம்பிக்கைகள்

மனித வாழ்வில் நம்பிக்கைகள் என்று தோன்றின என்று திட்டவட்டமாகக் கூற முடியாது. மனித மனமானது இயற்கைக்கு அப்பாற்பட்ட செயல்களுக்குத் தீர்வு காண இயலாத பொழுதும், வாழ்க்கையில் ஏற்படும் சில நிகழ்ச்சிகளுக்குக் காரணம் கற்பிக்க இயலாதபொழுதும் சிலவற்றைப் படைத்துக் காரணம் கற்பித்துக் கொள்கிறது. இக்காரணங்கள் வழிவழியாகப் பின்பற்றப்பட்டு மக்களிடம் நிலவிவருவதைக் காண முடிகிறது. பொதுவாக, மனிதன் வாழ்க்கையில் பின்பற்றிவரும் நம்பிக்கைகளை ஆராய்ந்த அறிஞர்கள் பல்வேறு கருத்துக்களை முன் வைக்கின்றனர். அவற்றில் சில:

“நம்பிக்கைகள் மக்களால் உருவாக்கப்பட்டு மக்கள் சமுதாயத்தால் பாதுகாக்கப்படுகின்றன. மனிதனின் தன்னல உணர்வும், சமுதாய உணர்வுமே நம்பிக்கைகளை வளர்த்து வருகின்றன”[29] என்றும், “தன்னுடைய சொந்தக் குணத்தை ஒரு சமூகம் மாற்றும்போது அல்லது இலக்கும்போது அவற்றிற்கு முன்பே அமைந்திருந்த நடைமுறைகள் நம்பிக்கைகளாக எஞ்சுகின்றன”[30] என்றும் தமிழவன் குறிப்பிடுகிறார்.

இயற்கையின் புதிரான செயல்களை அறிவு கொண்டு உணர இயலாத நிலையிலும் மனிதமனம் சிலவற்றைப் படைத்துக் காரணம் கற்பித்துக் கொள்கிறது. அந்நிலையில் அவை நம்பிக்கைகளாக உருபெற்று அவ்வவ்க்கால இலக்கியங்களில் சமுதாய

செல்வாக்கின் காரணமாக இடம்பெற்று விடுகின்றன”[31] என்பர் காந்தி. மேலும், “நம்பிக்கைக்கும் மனிதனின் ஆழ்மனத்திற்கும் மிக நெருங்கிய தொடர்பு உண்டு. காரண காரியங்களுக்கு அப்பாற்பட்ட சில உண்மைகளை உள்மனம் திடீரென்று மூளைக்கு உணர்த்துகின்றது. மூளையில் பதியும் அந்த எண்ணங்கள் உண்மையாக உறுதிப்படும்போது நம்பிக்கையாகிவிடுகிறது. எனவே, நம்பிக்கையின் ஊற்றுக்கண் மனிதர்களின் ஆழ்மனம் ஆகும்”[32]. என்று க.வெங்கடேசன் கூறுவதாக த.கவிதா குறிப்பிடுகின்றார். மனித வாழ்வில் நம்பிக்கைகள் என்று தோன்றின என்று திட்டவட்டமாகக் கூறமுடியாது. எனினும் மக்களின் நடைமுறை வாழ்வில் இந்நம்பிக்கைகள் தொடர்ந்து வருவதைக் கூர்ந்து நோக்கினால் இதனைச் சமுதாயப் பண்பாட்டின் உணர்ச்சிக் கூறுகளின் தொகுதி எனக் கூறலாம். காரணகாரியத் தொடர்புகளுக்கு உட்பட்டுச் சான்றுகளின் வாயிலாக நிறுவ முடிவதை நம்பிக்கை என்றும், சான்றுகளின் அடிப்படையிலோ, காரணகாரியத் தொடர்பின் வாயிலாகவோ விளக்க முடியாதவற்றை மூடநம்பிக்கை என்றும் வகைப்படுத்துவர்.

**‘யானையின் பலம் தும்பிக்கையிலே**

**மனிதனின் பலம் நம்பிக்கையிலே’**

என்ற முதுமொழியும் நம்பிக்கையின் முக்கியத்துவத்தை உணர்த்துவதைக் காணமுடிகிறது. இயற்கையோடு இணைந்து வாழும் பழங்குடி மக்கள் முதல் இன்றைய அறிவியல் உலகோடு ஒட்டி வாழும் நவீன மக்கள் வரை பல நம்பிக்கைகள் காணப்படுகின்றன. பழங்குடி இனமான மலையாளிகளிடமும் ஏராளமான நம்பிக்கை அவர்களின் வாழ்வோடு ஒன்றிக் காணப்படுகின்றன. இவர்களுடைய நம்பிக்கைகளைப் பற்றித் தனி ஒரு ஆய்வே மேற்கொள்ளலாம். இருப்பினும் ஒரு சில நம்பிக்கைகளைப் மட்டும் இங்கு வகைப்படுத்தி ஆராயலாம். அவை,

1. பிள்ளைப்பேறு பற்றிய நம்பிக்கைகள்
2. குழந்தைப் பற்றிய நம்பிக்கைகள்
3. கண்ணேறு கழித்தல் பற்றிய நம்பிக்கைகள்
4. பருவமடைதல் பற்றிய நம்பிக்கைகள்
5. திருமணம் பற்றிய நம்பிக்கைகள்
6. இறப்புப் பற்றிய நம்பிக்கைகள்
7. வேளாண்மை பற்றிய நம்பிக்கைகள்
8. சகுனம் தொடர்பன நம்பிக்கைகள்
9. பல்லிப் பற்றிய நம்பிக்கைகள்

10. உணவுப் பற்றிய நம்பிக்கைகள்

11. மழைப் பற்றிய நம்பிக்கைகள்

12. திசைகள் பற்றிய நம்பிக்கைகள்

13. தெய்வ விழாக்கல் பற்றிய நம்பிக்கைகள்

### 5.5.1. பிள்ளைப்பேறு பற்றிய நம்பிக்கைகள்

சவ்வாது மலை மக்களிடம் பிள்ளைகள் தேவை என்ற எண்ணம் அதிகமாக இருக்கிறது. அதிகமான பிள்ளைகளைப் பெற்றெடுக்க விரும்புகிறார்கள். தங்கள் நிலங்களில் வேலை செய்வதற்கும், கால்நடைகளை மேய்ப்பதற்க்கும் காடுகளில் வனப்பொருட்களைச் சேகரிப்பதற்கும் பிள்ளைகள் வேண்டும் என்று கருதுகின்றனர். ஒவ்வொரு குடும்பத்திலும் நான்கு பிள்ளைகளுக்குக் குறையாமல் பத்துப் பிள்ளைகளுக்கு மிகாமலும் இருக்கின்றனர். மலையாளி இனப் பழங்குடி மக்களிடம் குழந்தை பற்றிய பல நம்பிக்கைகள் இருக்கின்றன. குழந்தை உள்ளவர்களே இவ்வுலகில் மதிக்கத்தக்கவர், போற்றுதலுக்குரியவர். குழந்தை இல்லாதவர்களை சமூகம் விரும்புவதில்லை. அவர்களை ஒரு தீட்டாகவே கருதுகின்றனர்.

குடும்ப நிகழ்வுகளில் கலந்துகொள்வதையும் நல்ல நிகழ்வுக்காகச் செல்லும்போது எதிரில் வருவதையும், ஒரு சகுனமாக நினைக்கிறார்கள். ‘இவள் ஏன் இங்கு வந்தா, இவள பார்த்துட்டுப் போனா! போற காரியம் உருப்பட்டமாறிதான்’, என்று குழந்தை இல்லாத பெண்கள் சிலரால் பழிக்கப்படுகின்றனர். எனவே, குழந்தையில்லாத பெண்கள் ஒரு குழந்தையைப் பெற்று தாயாகிவிட வேண்டும் என்று விரும்புகின்றனா். ஊா் பழிச்சொல் குழந்தை இல்லாததால் இவ்வின ஆண்கள் வேறு பெண்ணைத் திருமணம் செய்து கொள்ள விரும்புகின்றனர். இதற்காக குழந்தை வேண்டி தெய்வத்திடம் விரதம் (நோன்பு) இருக்கின்றார்கள். தெய்வத்தின் அருளால் குழந்தை பெற்றால் குல தெய்வத்திற்குச் சடங்கு வேண்டுதலின்படி செய்கிறார்கள்.

மலையாளிகள் ஆண் குழந்தை பெறவே அதிகம் விரும்புகின்றனர். ஆண் பிள்ளைதான் சாகும்வரை தங்களைப் பார்த்துக் கொள்வான் என்றும், பெண் பிள்ளைகள் புகுந்த வீட்டிற்குப் போய்விடுவாள் என்றும் கூறுகின்றனர். ஆண் பிள்ளைகளே தனது சொத்துக்கு வாரிசு, அவர்கள்தான் கொல்லி வைப்பர் என்று நினைக்கின்றனர். தனக்குக் கொல்லி வைக்க பிள்ளைகள் இல்லை என்றால், தனக்கு ‘நரகம் கிடைக்கும் என்றும் நம்புகின்றனர். எனவே, குழந்தைக்கு தாயாகிவிட்டால் திருமணம் நிகழ்வு, நலங்குவைத்தல், ஆரத்தி எடுத்தல் போன்ற குடும்பத்தின் எல்லா நிகழ்வுகளிலும் முதன்மைப் பெற முடியும் என்று நம்புகின்றனர்.

பிள்ளை பெறாதவர்களை ‘மலடி’ என்று கூறுவர். மலடியாய் இருப்பவர்களை எந்த சுபச் நிகழ்ச்சிகளிலும் சேர்த்துக்கொள்ள விரும்புவதில்லை, வெறுக்கிறார்கள். எனவே, குழந்தை இல்லாத பெண்கள் பிள்ளை வேண்டி தெய்வத்திற்குப் பூசை செய்து, காணிக்கை செலுத்துகின்றனர். பிள்ளை பிறக்க வேண்டிச் செய்யும் எந்த ஒரு வேண்டுதலிலும் கணவனும் கலந்துகொள்வார். குழந்தை இல்லாதவர்கள் குழந்தையின் தொப்புள்கொடியை உணவில் கலந்து உண்டால் குழந்தைப் பேறு கிடைக்கும் என்பது மலையாளிகளின் நம்பிக்கையாகும்.

### 5.5.2. குழந்தை பற்றிய நம்பிக்கைகள்

குழந்தை பிறந்தவுடன் அதன் வாயில் விளக்கெண்ணெய் வைக்கும் பழக்கம் இவர்களிடம் உள்ளது. இவ்வெண்ணெயைப் பெரும்பாலும் நல்ல குணமுடைய குடும்ப நபர்கள் அல்லது உறவினர்கள் கொடுத்தால் குழந்தையும் அவர்களைப் போலவே வளரும். குணமும் அவர்களைப் போலவே இருக்கும். மேலும், குழந்தை பிறந்த மூன்றாம் நாள் அல்லது ஏழாம் நாள் குழந்தையின் உடலில் கருப்பு கயிறு, வளையம், வெள்ளெருக்கில் அரைஞாண் கயிறு போன்றவற்றைக் கட்டினால் தீய ஆவிகள் குழந்தையை நெருங்காது என்றும் நம்பிக்கை வைத்துள்ளனர்.

குழந்தைகளை மாலை ஆறு மணிக்குமேல் வீட்டிற்கு வெளியே எடுத்துச் செல்லக் கூடாது என்றும், குழந்தையின் துணிமணிகளை வீட்டிற்கு வெளியே விடக்கூடாது என்றும் மலையாளிகள் நம்புகின்றனர். குழந்தைக்கு விக்கல் வந்தால் குழந்தை உடுத்திருக்கும் ஆடையில் சிறிய நூலை எடுத்து குழந்தையின் நாவில் தொட்டு, தலையை மூன்று சுற்றுச் சுற்றி எச்சில்துப்பி குழந்தையின் தலையில் வைத்தால் விக்கல் நின்றுவிடும் என்பது நம்பிக்கை.

### 5.5.3. கண்ணேறு கழித்தல் பற்றிய நம்பிக்கைகள்

குழந்தைகளைப் பெற்ற ஒவ்வொரு குடும்பத்தாரும் தன்னுடைய குழந்தைகளின் மீது மற்றவர்களின் கண்படக்கூடாது என்று கருதுவது உண்டு. அவ்வாறு கண்பட்டுவிட்டால் குழந்தை சோர்வாக இருக்கும், நோய்கள் வரும் என நம்புகின்றனர். இதற்கு மலையாளிகள் அருகில் இருக்கும் மூன்று வீட்டின் கூரையைப் பிடியளவு கொண்டுவந்து அதனுடன் உப்பு, மிளகாய் சேர்த்துக் குழந்தையின் தலையை மூன்று சுற்றுச் சுற்றி கூரை, உப்பு, மிளகாய் போன்றவற்றை நெருப்பில் எரித்து விடுகின்றனர். அவ்வாறு சுற்றும் பொழுது ‘தாய்க்கண்ணு, தந்தைக் கண்ணு, உற்றார்க் கண்ணு, ஊர்க்கண்ணு, பாம்புக் கண்ணு, பல்லிக் கண்ணு கண்ணுப்புடுங்கி கடையடுப்பில் போட, முழியைப் புடுங்கி மூலையில போட எனச் சொல்லி

குழந்தையின் எச்சிலைத் துப்பச் சொல்லி அதனை அடுப்பில் போட்டு எரித்து விடுகின்றனர். இதனைக் 'கண்ணேறு கழித்தல்' என்றும் குழந்தைக்குக் கண்திருஷ்டி கழித்தல் என்றும் கூறுகின்றனர்.

திருமணமான புது தம்பதிகளுக்கு ஆரத்தி எடுத்தல், புது வீடு கட்டும்போது பூசணிக்காயில் மனிதனின் உருவம் வரைந்து கரும்புள்ளி இட்டு, வீட்டின் முன் அனைவரின் பார்வையில்படுமாறு கட்டுதல், விளை நிலங்களில் வைக்கோல், துணி முதலியவற்றால் உருவம் செய்து கரும்புள்ளி, செம்புள்ளி குத்தி நிலத்தில் கட்டுதல் போன்றவைகளும் கண்ணேறு கழித்தலில் அடங்கும். குழந்தை பிறக்கும் பொழுது 'தொப்புள் கொடி சுற்றிப் பிறந்தால் குலத்திற்கும் கோத்திரத்திற்கும் ஆகாது, என்றும் நம்புகிறார்கள். 'மாலை சுற்றிப் பிறந்தால் மாமனுக்கு ஆகாது' என்ற பழமொழியும் இந்த நம்பிக்கையின் அடிப்படையிலே வழங்கப்படுகின்றது.

மலையாளிகள் மூன்று வயதுக்கும் மேற்பட்ட குழந்தைகளுக்குக் காது குத்துதலை வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர். ஆண், பெண் ஆகிய இருவருக்கும் காதுகுத்தும் மரபு காணப்படுகிறது. காது குத்துவதால் நோய்களிலிருந்து காக்கப்படுவதாகவும், இறப்பிற்கு பின் மறுஉலகம் அல்லது மறுபிறவி கிடைக்கும் என்றும் நம்புகிறார்கள். அவ்வாறு குத்தவில்லையென்றால் நரகம்தான் கிடைக்குமென நம்புகின்றனர். முதல் குழந்தை (தலைச்சன் பிள்ளை) பெண்ணாகப் பிறந்தால் செல்வம் கொழிக்கும், குடும்பம் வளரும் என்று நம்புகின்றனர். குழந்தைக்குக் கழுதைப்பால் கொடுத்தால் நோய்கள் விலகிப்போகும் என்றும், கழுதையைப் போல் குடும்பத்தைச் சுமந்து வாழ்ந்துகாட்டுவான் என்றும் நம்புகின்றனர்.

குழந்தை இருக்கும் வீடுகளில் மாமிசம் உண்டால் காத்துக்கருப்பு குழந்தையைப் பிடித்துக்கொள்ளும் என்றும் குழந்தை பெற்ற தாய்மார்கள் மாமிசம் உண்டு காட்டுவழிப் பாதைகளில் நடந்துச் சென்றால் பேய், பிசாசு, காத்துக் கருப்பு பிடித்துக் கொள்ளும் என்றும் நம்பப்படுகிறது. இதற்குச் சாம்பல்நீறு, திருநீறு நெற்றியில் பூசி, ஆவாரங்கொத்து, வேப்பிலைக் கொத்து, எருக்கங் கொத்து, துடப்பக் குச்சி, சிறு கரித்துண்டு போன்றவற்றைக் உடன் எடுத்துச் செல்வார்கள். இவ்வாறு எடுத்துச் செல்வதால் காத்துக் கருப்பு நெருங்காது என்பது அவர்களின் நம்பிக்கை ஆகும்.

### 5.5.4. பருவமடைதல் பற்றிய நம்பிக்கைகள்

திங்கள், புதன், வெள்ளி ஆகிய நாட்களில் பூப்படைந்தால் நல்லது என்றும், செவ்வாய் கிழமை நாட்களில் பூப்படையும் பெண்களுக்கு நல்ல கணவன்

கிடைக்கமாட்டான் என்றும் ஞாயிற்றுக் கிழமைகளில் பருவமடைந்தால் குழந்தைப்பேறு கிட்டாது என நம்புகின்றனர். மேலும் சித்திரை, ஆனி, புரட்டாசி ஆகிய மாதங்களில் பருவமடைந்தால், குடும்பத்தாருக்கும் கணவனுக்கும் ஆகாது என்கின்றனர். வைகாசி, ஆடி, ஐப்பசி, தை மாதங்களில் பூப்படைந்தால் செல்வம் செழிக்கும், பிள்ளைப்பேறு நிறைய கிடைக்கும் என்றும், கார்த்திகை மாதங்களில் பருவமடைந்தால் புண்ணியவதியாகவும் பயபக்தியுள்ளவளாகவும் இருப்பார்கள் என்றும் மலையாளிகள் நம்புகின்றனர்.

### 5.5.5. திருமணம் பற்றிய நம்பிக்கைகள்

ஒரே குடும்பத்தில் இரண்டு திருமணங்கள் ஒரே நேரத்தில் நடத்தக்கூடாது. அவ்வாறு நடந்தால் ஒருகுடும்பம் பிழைக்கும், மற்றொரு குடும்பம் இறக்கும். திருமணம் செய்து கொள்ளும் ஆண், பெண் இருவரும் ‘தலைசன்’ (முதல்) பிள்ளையாக இருக்கக்கூடாது. ஆடி மாதத்தில் பெண் பார்க்கவோ, திருமணம் செய்யவோ கூடாது, என்றும், அவ்வாறு செய்தால் கணவன் மனைவி இல்லற வாழ்வில் ஈடுபடக்கூடாது என்றும் நம்புகிறார்கள். இதற்குக் காரணம் கோடை காலமான சித்திரை மாத வெயிலில் குழந்தை பிறக்கும். சித்திரை வெயில் தாய்க்கும், சேய்க்கும் கெடுதலைத் தரும் என்று நம்புகிறார்கள். புதிதாகத் திருமணம் செய்தவர்கள் புதுவீட்டில் குடியேறக் கூடாது என திருமணம் பற்றிய பல நம்பிக்கைகளை மலையாளிகள் கொண்டிருக்கின்றனர்.

### 5.5.6. இறப்பு பற்றிய நம்பிக்கை

சனிக்கிழமையன்று ஒருவர் இறந்தால் மற்றொரு சாவு விரைவில் நடைபெறும் என்று நம்புகின்றனர். அதனால் அந்தப் பிணத்துடன் கோழியையும் சேர்த்துப் பாடையில் கட்டி இடுகாட்டிற்கு எடுத்துச்சென்று புதைக்கின்றனர். இறக்கும் முன்னர் ஒருவருக்கு விருப்பமான பொருளை அளித்தால் அவருடைய உயிர் எளிதில் பிரியும் என்கின்றனர். இறந்தவர்களோடு அவர்கள் விரும்பிய பொருட்களையும் படைத்தால் அவருடைய ஆத்மா சாந்தியடையும் இல்லையென்றால் அவருடைய ஆவி அப்பொருளுக்காக அலைந்து கொண்டிருக்கும் என்றும் நம்புகின்றனர்.

மரணம் நடந்த வீட்டிற்குச் செல்பவர்கள் ‘போய் வருகிறேன்’ என்று பயணம் போகும்போது கூறக்கூடாது. அப்படிக்கூறினால் அந்த வீட்டில் அடுத்து ஒரு சாவு நிகழும் என்று நம்புகின்றனர். இறந்தவர்களுக்குப் பிடித்தமான பொருட்களை வைத்து வழிபடுவதன் மூலம் அவர்கள் தங்களுடைய வாழ்க்கைக்கு எந்த ஒரு தீங்கும் நேராமல் பார்த்துக் கொள்வார்கள். மேலும் இறந்தவர்களுக்குத் தேங்காய் உடைக்கும்போது, தேங்காய் நேராக

உடைந்தால் இயற்கை மரணம் என்றும், குறுகலாக உடைந்தால் செய்வினையாலோ அல்லது நஞ்சருந்தியோ இறந்திருக்கலாம் என்று நம்புகின்றனர்.

### 5.5.7. வேளாண்மை பற்றிய நம்பிக்கைகள்

மலையாளிகள் உழுது விட்டு ஏர்க் கலப்பையைத் தெற்கு நோக்கி இருக்கும் வகையில் வயலில் நிறுத்தி வைக்கக் கூடாது என்றும், ஏரிலிருந்து எருதுகளைப் பூட்டு அவிழ்த்து விடும்போது அவற்றின் தலைகள் வடக்கு அல்லது மேற்குத் திசையை நோக்கியிருக்க வேண்டும் என்றும் நம்புகிறார்கள், அவ்வாறுவிட்டால் வேளாண்மை அதிக தானிய விளைச்சலைக் கொடுக்கும் என்று நம்புகின்றனர்.

'காய்' (கசை) அடிக்கப்படாத எருதுகளைக் கொண்டு நிலத்தை உழுதால் அதில் விளையும் பயிர்கள் உறுதியாகவும் செழுமையாகவும் இருக்குமென்று நம்புகிறார்கள். விதைப்பதற்காக வைக்கப்பட்டு இருக்கும் தானியத்தை மிதிக்கவோ, தாண்டிச் செல்லவோ கூடாது. அதை மீறினால் விதை முளைக்காது, பஞ்சம் ஏற்படும் என்றும், விதைக்காக வைக்கப்பட்டு இருக்கும் தானியத்தை உண்டால் நோயும், வறுமையும் ஏற்படும் என்றும் நம்புகின்றனர்.

விதை தானியத்தைக் களஞ்சியத்திலிருந்து எடுக்கும்போது சிறிதளவு தானியத்தைக் களஞ்சியத்தினுள் போட்டுவிட வேண்டும். அவ்வாறு செய்வதால் தானியத்தின் கையிருப்பு குறையாமல் இருக்கும். குழந்தைப் பேறு இல்லாது இருக்கும் பெண்களை விதைக்க அனுமதிப்பது இல்லை. பல குழந்தைகளைப் பெற்ற பெண்களுக்கே முன்னுரிமை அளிக்கிறார்கள். விதைப்பவர் வெறும் வயிற்றுடன் இருந்தால் தானியக் கதிர்கள் செழித்து வளராது என்றும், உணவு உண்டபின் விதைப்பது பயிர்களின் நற்பலன்களை அழிக்கும் என்றும் இவர்கள் நம்புகிறார்கள். முதன் முதலாக விதைப்பதை ஒரு நல்ல முகூர்த்த நாளிலேயே விதைக்கின்றனர்.

முதல் அறுவடையைத் தொடங்கும் முன் தெய்வங்களுக்கு அரிசி, பொறி வெற்றிலை, பாக்கு போன்றவற்றை வைத்துப் படைத்தப் பின்னரே அறுவடையைத் தொடங்குகின்றனர். இவ்வாறு செய்வதால் அறுவடைக் காலம் முடியும் வரை யாருக்கும் எந்தத் தீங்கும் நேராது. அறுவடையின் இறுதிநாளில் புதுச் சாமை, நெல் அரிசியை பொங்கல் வைத்து எருதுகளுக்கும் நிலத்திற்கும் படைத்து அறுவடையை நிறைவு செய்வதும் இவர்களின் வழக்கமாகக் காணப்படுகிறது.

தானியங்களை அள்ளும்போது புறங்கையில் அள்ளக்கூடாது. தானியங்களைத் தூற்றிவிட்டு கூடையைத் தலைகீழாகத் தரையில் வைக்கக்கூடாது என்றும் நம்புகின்றனர்.

மேலும் தானியங்களை அளக்க திங்கள், புதன், வியாழன் ஆகிய நாட்களையே உகந்த நாட்களாகக் கருதுகின்றனர். தானியங்களை அளப்பவர்கள் தலையில் உருமால் கட்டி, சூரியனைக் கும்பிட்டு வடக்குத் திசையைப் பார்த்து பின்னர் தான் அளக்க வேண்டும் என்றும் நம்பிக்கை வைத்துள்ளனர்.

### 5.5.8. சகுனம் தொடர்பான நம்பிக்கைகள்

மலையாளிகள் வாழ்வில் பின்பற்றும் சகுனத்தை நல்ல சகுனங்கள், கெட்ட சகுனங்கள் என்று இருவகையில் பார்க்கிறார்கள். நல்ல சகுனங்களை நன்மையின் குறியீடாகவும், கெட்டசகுனத்தைத் தீமையின் குறியீடாகவும் வைத்துள்ளனர். இவை பெரும்பாலும் நம்பிக்கையின் அடியொற்றியே அமைந்திருக்கிறது.

#### 5.5.8.1. நல்ல சகுனங்கள்

- ❖ காகம் வீட்டின் முற்றத்திலே வந்து கத்தினால் நல்ல செய்தி வரும், அல்லது உறவினர்கள் வருவார்கள்.
- ❖ ஒரு ஆணின் வலது கண்ணும், பெண்ணின் இடது கண்ணும் துடித்தால் நல்ல நிகழ்வுகள் ஏற்படும்.
- ❖ உள்ளங்கையில் அரிப்பு ஏற்பட்டால் வரும் காலங்களில் பணம் அதிகமாக வரும்.
- ❖ ஒருவர் உணவருந்தும்போது தும்மல் வந்தால் நண்பர்களோ அல்லது உறவினர்களோ நினைப்பதாகக் கருதுவர்.
- ❖ ஒருவர் வீட்டிலிருந்து புறப்படும்போது சுமங்கலிப்பெண் தண்ணீர்க் குடத்துடன் வந்தால் நல்லது நடக்கும்.

#### 5.5.8.2. கெட்ட சகுணங்கள்

- ❖ நாய்கள் ஊளையிட்டால் இயற்கை அழிவுகளோ அல்லது யாரேனும் இறக்கவோ நேரிடும்.
- ❖ வேளியில் புறப்படும்போது விதவைப் பெண்ணைக் கண்டால் கெட்ட சகுணமாகக் கருதுகின்றனர்.
- ❖ விறகு எடுத்து வருபவரைக் கண்டால் கெட்ட சகுணம் என்கின்றனர்.
- ❖ நீண்ட தூர பயணத்தின் போது கோடரி, கத்தி, கடப்பாரை, வீட்டிற்குத் தூரமான பெண்கள், பாம்பு, கழுதை, நெருப்பு, நோயாளி, ஏணி முதலியவற்றைக் கண்டால் கெட்ட சகுணமாகக் கருதுகிறார்கள்.
- ❖ பூனை குறுக்கே போனாலும், கண்ணுக்குப்பட்டாலும் கெட்ட சகுணம் ஆகும்

### 5.5.9. பல்லி பற்றிய நம்பிக்கை

மனிதர்கள் பார்க்கும் சகுணங்களில் மிக முக்கியமானது பல்லி சகுணம் ஆகும். இதனைச் சொல்லும் பலன், விழும் பலன் என்று இரண்டாகப் பிரிக்கலாம். மலையாளிகளும் இவற்றை முக்கியமானதாக கருதுகிறார்கள்.

#### 5.5.9.1. பல்லி சொல்லும் பலன்

மலையாளிகள் ஏதேனும் ஒரு நிகழ்வைப் பற்றி பேசும் பொழுது காலை நேரமாக இருந்தால் பல்லி கிழக்கே கத்த வேண்டும். மாலை நேரமாக இருந்தால் மேற்கே கத்த வேண்டும். அவ்வாறு கத்தினால் நல்ல சகுனம் என்றும், எதிர்மாறாக கத்தினால் தீய சகுனம் என்றும் நம்புகிறார்கள்.

#### 5.5.9.2. பல்லி விழும் பலன்

பல்லி உடம்பின்மேல் விழுந்தால் தீயசகுனம் என்று கருதி தலைக்குத் தண்ணீர் ஊற்றி குளித்துவிட்டு வீட்டிற்குள் வருகின்றனர் மேலும், உடம்பில் புண் அல்லது நோய்கள் வரும் என்றும் கருதுகின்றனர்.

### 5.5.10. உணவு பற்றிய நம்பிக்கைகள்

மனிதன் உயிர் வாழ்வதற்கு மிக முக்கியமானது உணவு, அதை இவ்வாறு உண்டால் ஆயுள் நீடிக்கும் என்றும், நன்மை உண்டாகும் என்றும் நம்புகிறார்கள்.

உணவை உருட்டிச் சாப்பிடக்கூடாது, வீட்டின் வாயிற்படி மீது உட்கார்ந்து சாப்பிடக்கூடாது, அடுப்பின் அடியில் உட்கார்ந்து சாப்பிடக் கூடாது என்று மலையாளிகள் நம்புகின்றனர். சாப்பிடும்போது கையைத் தரையில் ஊன்றிக்கொண்டு சாப்பிடக்கூடாது, அவ்வாறு சாப்பிட்டால் உணவுப் பஞ்சம் ஏற்பட்டுவிடும் என்று நம்புகின்றனர்.

விருந்து சாப்பிடும்போது இலையைச் சாப்பிட்ட பக்கம் மடித்து விடவேண்டும். அமங்கல நிகழ்வுகளில் சாப்பிட்டு முடித்தவுடன் இலைகளை எதிர்புறம் மடித்து விடவேண்டும், விருந்து உண்ணும்போது உணவில் தலைமுடி வந்தால் உறவுகள் நீடிக்கும் என்று இவ்வின மக்கள் நம்புகின்றனர்.

### 5.5.11. மழை பற்றிய நம்பிக்கை

தட்டான் தாளப் பறந்தாலும், புற்றீசல் வந்தாலும், கோழி இறக்கையினைச் சிலித்து உதறினாலும், எறும்பு முட்டையை எடுத்துக் கொண்டு ‘திட்டை’ ஏறினாலும், செம்மறி

ஆடுகள் ஒன்றையொன்று இடித்தவாறு உரசிச் சென்றாலும் மழைவரும் என மலையாளிகள் நம்புகிறார்கள். மேலும் வானத்தில் வானவில் தோன்றினால், காரிருள் சூழ்ந்தால், எருதுகள் ‘எக்காலாம்’ செய்தால் (துள்ளிக் குதித்து ஓடினால்) தவளைகள் கத்தினால், மழைவரும் என்று நம்புகிறார்கள். திருமணப் பெண் சிறு வயதில் அரிசி தின்றிருந்தால் அவளது திருமணத்தன்று மழை பெய்யும் என்றும் மலையாளிகள் நம்புகின்றனர்.

ஆடி, கோடைக்காலங்களில் அதிகமாகக் காற்றடித்தால் ஐப்பசி, கார்த்திகை மாதங்களில் மழை பெய்யும் என்றும், நிலவைச் சுற்றிலும் பெரிய வட்டமாக மேகக் கூட்டங்கள் இருந்தால் மழை பெய்யும் என்றும், சிறிய வட்டமாக இருந்தால் சில நாட்கள் ஆகும் என்றும் நம்புகின்றனர். மேலும், பாரதக் கதையில் ‘விராடப் பருவம்’ நாடகத்தைப் படித்தாலோ அல்லது நடித்தாலோ மழை வரும் என்றும் இவர்கள் நம்புகிறார்கள்.

மழை, புயல், பூகம்பம் போன்ற இயற்கை நிகழ்வுகளை முன்னதாகவே உணரும் ஆற்றல் விலங்குகளிடம் உண்டு என்பதன் அடிப்படையிலும், இவ்விலங்கினங்களை உற்றுணர்ந்து வாழ்ந்த அனுபவ அறிவின் அடிப்படையிலும் மழை பெய்யும் என்று நம்பிக்கையைக் கொண்டிருக்கிறார்கள்.

### 5.5.12. திசைகள் பற்றிய நம்பிக்கைகள்

இறந்தவர்களை வடக்கு தெற்காக வைத்துப் புதைப்பதால் இவற்றை எமன்திசை என்று கூறுவர். இதனால் உறங்கும்போது வடக்குப்பக்கம் தலைவைத்து உறங்கினாலும், தெற்குப்பக்கம் தலையை வைத்து உறங்கினாலும் எமன் வந்து பிடித்துக்கொள்வான் என்று நம்புகின்றனர். எனவே, கிழக்கு மற்றும் மேற்குத் திசைகளில் தலைவைத்து உரங்கவேண்டும் என்கின்றனர். தென்கிழக்குத் திசையை அக்னி திசையாகக் கருதுவதால் தென்கிழக்கு மூளையில் கிழக்குப் பார்த்து அடுப்பு வைத்திருக்கின்றனர். பிற மூலைகளில் அடுப்பு வைத்து எரித்தால் குடும்பத்திற்கு ஆகாது, குலம் சிறக்காது என்று நம்புகின்றனர்.

### 5.5.13. தெய்வ விழாக்கள் பற்றிய நம்பிக்கை.

தங்களுடைய குலதெய்வங்களுக்கு வருடத்திற்கு ஒரு முறை விழா எடுக்காவிட்டால் ஊருக்கும், நாட்டிற்கும் பல தீங்குகள் வரும். விழாச் சமயங்களில் ஆடு, கோழிப் போன்றவற்றையும் பலியிட்டு இரத்தக் குறிக் காட்டினால் மட்டுமே தெய்வங்கள் மகிழ்ச்சிடையும் என்றும் நம்புகின்றனர். இதனை,

“சிறுதிணை மலரொடு விரை இமறி அறுத்து
வாரணக் கொடியொடு வயிற்படரீஇ”

(திருமுருகாற்றுப்படை, அடிகள் 218-19)

என்ற பாடல் வரிகள் பழங்காலத்தில் தமிழரின் பலியிடும் வழக்கத்தை உணர்த்துகிறது.

மேலும், பிற தெய்வங்களுக்கும் விழா எடுத்து வழிபட்டு வந்தால் நோய்நொடி இன்றி, தீயசக்திகளிடமிருந்து விலகி பாதுகாப்பாய் வாழலாம் என்றும் மலையாளிகள் நம்புகின்றனர்.

## 5.6. கலைகள்

மனிதன் இயற்கையோடு இயைந்து வாழ்ந்து கொண்டிருந்த காலத்தில் பல கலைகளை உருவாக்கி மகிழ்ந்தான். அக்கலைகளை அழகிய உணர்வுகளுடன் வெளிப்படுத்தி ஏனையோரையும் மகிழ்வடையச் செய்தான். மனமகிழ்ச்சி ஒன்றே இதன் முக்கிய நோக்கமாக இருந்தது. மனித உணர்வுகளுக்கும், உணர்ச்சிகளின் வெளிப்பாட்டிற்கும் கலைகள் வடிகாலாயிருப்பதால் இவை காலவெள்ளத்தைக் கடந்து நிற்கின்றன எனலாம். கலைகள் மக்களின் வாழ்வோடு பின்னிப் பிணைந்திருக்கும் ஒன்றாகும்.

“மானிடரின் அழகிய படைப்புகளைக் ‘கலை’ என்கிறோம். ‘படைப்பு’ என்பது எழுத்து வடிவிலானதாகவோ, வரைதலாகவோ, பொருளாகவோ, செயலாகவோ நிகழ்த்துதலாகவோ இருக்கலாம்”[33] என்கிறார் ஆறு.இராமநாதன். இவை நாளடைவில் பல்வேறு பரிமாணங்களைப் பெற்று இன்று நாட்டுப்புற மக்களின் அழகியல் உணர்வுகளின் மையமாகக் கலைகள் விளங்குகின்றன. மேலும், காண்பவர்களின் ஐம்புலன்களையும் ஈர்த்து மக்களின் கவலையைப் போக்கி நாட்டின் அசைக்கமுடியாத செல்வமாகவும் கலை இருந்து வருகின்றது. ‘இந்தியா கிராமங்களில் தான் வாழ்கிறது’ என காந்தியடிகள் கூறியது போல, கலைகளும் நாட்டுப்புறங்களில்தான் வாழ்கின்றன என்று சொன்னால் மிகையாகாது.

சவ்வாதுமலை பழங்குடி இன மக்களின் திருவிழாக்களில் ஆடல், பாடல், கூத்து போன்றவை இடம் பெறுகின்றன. இக்கலையைப் பலதரப்பட்ட மக்கள் பார்த்துக் கண்டுகளிக்கின்றனர். கோவில் வளாகம், திறந்த வெளி இடங்கள், மந்தை போன்ற பகுதிகளில் அரங்குகளை அமைத்து இக்கலைகளை நிகழ்த்தி வருகின்றனர்.

### 5.6.1. மலையாளிகளின் கலைகள்

மலையாளிகள் தங்கள் வாழ்வில் பின்பற்றி வரும் கலைகளை இரண்டாகப் பிரிக்கலாம். அவை

1. நிகழ்த்துக் கலைகள்
2. கைவினைக் கலைகள்

என்பனவாகும்.

### 5.6.2. நிகழ்த்துக் கலைகள்

“நிகழ்த்துக் கலைகள் என்றால் ஒருவரோ ஒரு குழுவினரோ பிறருக்குப் பாடுவதையும், ஆடுவதையும், இசைப்பதையும், நடிப்பதையும், சொல்வதையும் நாம் ‘நிகழ்த்துதல்’ என்கிறோம். அதாவது பிறருக்கு நிகழ்த்திக் காட்டப்படுவதை நிகழ்த்துதல் எனலாம்”[34]. மலையாளிகளும் பரம்பரைப் பரம்பரையாக அவர்களின் குலதெய்வ விழாக்களின்போது பல்வேறு நிகழ்த்துக் கலைகளை நடத்தி வருகின்றனர். அவை வருமாறு:

1. சேவாட்டம்
2. கோலாட்டம்
3. கும்மியாட்டம்
4. புலியாட்டம்
5. கூத்து

போன்றவை ஆகும்.

#### 5.6.2.1. சேவாட்டம்

மலையாளிகள் மிகவும் வெகுவிமர்சையாகக் கொண்டாடும் திருவிழாக்களில் சித்திரைத் திருவிழாவும் ஒன்று. இந்தத் திருவிழாவின்போது மலையாளிகள் அனைவரும் ஒன்றுகூடி தங்களுடைய குலதெய்வங்களுக்குப் பொங்கல் வைத்து, வழிபட்டு ஆட்டம், பாட்டம் எனக் கொண்டாடி மகிழ்வது வழக்கம். அவ்விழாவின்போது ஆடப்படும் ஆட்டம் ‘சேவாட்டம்’ எனப்படுகிறது. இவ்வாட்டத்தில் ஆண்கள் மட்டும் கலந்து கொள்கின்றனர். பெண்கள் கலந்து கொள்வதில்லை.

மலையாளிகளின் தெய்வம் தம்பிரான் வீட்டிலிருந்து வெளியே வந்தவுடன் ‘தீர்த்தம்’ (புனித நீர்) போட்டு ‘மருள்’ (அருள்) அழைத்து, ஆட்டத்தைத் தொடங்கி வைக்கின்றார். இவர்களுடன் இவ்வின ஆண்கள் சிறியவர் முதல் பெரியவர் வரை அனைவரும் கலந்துகொள்வர். இவர்களுடன் இருவர் ‘கோணாங்கி’ (கோமாளி) வேடம் அணிந்து ஆடி நகையூட்டுவார். ‘கோணாங்கி’ ஆண், பெண் என இரு வேடங்களில் அமைகின்றனர். இந்த

ஆட்டத்திற்கு இரண்டு உருமி மேளங்களும் மூன்று பெரிய மேளங்களும் பயன்படுத்தப்படுகின்றன. சேவாட்டத்தில் பாடல் ஏதும் பாடப்படுவதில்லை. இசைக்கு ஏற்ப ஆட்டம் ஆடப்படுகிறது. இவை வழிபாட்டுச் சடங்கு கலையாக இருப்பதால் ஆட்டக் கலைஞர்கள் ஆட்டக் காலங்களில் புலால் உண்பதில்லை. ஒப்பனைக்குப் பயன்படும் பொருட்கள் அனைத்தும் பயபக்தியுடன் கோயிலில் வைத்தே பாதுகாக்கின்றனர்.

மலையாளிகளிடம் காணப்படும் சேவாட்டத்தில் ஆண் கோணங்கிகளின் ஒப்பனைகள் மலையில் கிடைக்கும் பொருட்களைக் கொண்டே அமைகின்றன. கோழி இறகுகளில் தலைப்பாகையும் அதன் உச்சியில் ஒரு கொண்டையும் வைத்து அமைத்துள்ளனர். வண்ணவண்ண ஆடைகளையும், காலில் சலங்கையும், முகத்தில் மலைகளில் கிடைக்கும் 'ஆத்தி' என்கிற ஒரு மரத்தின் நாரினைக் கிழித்து அதில் மீசை, தாடி போன்று செய்து கட்டுகின்றனர். பெண் 'கோடாங்கிகள்' வேடமணியும்போது பெண்கள்போல் உடையணிந்து ஆண்களே காலில் சலங்கைக் கட்டி, பெண் போன்ற படம் வரைந்த முகமூடியை மாட்டிக்கொள்கின்றனர். இரு கோடாங்கிகளும் கழுத்தில் மாலை அணிந்து கையில் ஒரு தடியுடன் ஆட்டக் கலைஞர்களோடு ஆடி, கேலி செய்து வருகின்றனர்.

சேவை ஆட்டத்தில் பன்னிரண்டு 'அடவு' (ஸ்டெப்) உள்ளதாகக் கூறப்படுகிறது. இசை மாற்றத்திற்கு ஏற்ப ஆட்டம் மாறுப்படுகின்றன. முதலில் வட்டமாக நின்று ஆடத் தொடங்கி, இடையில் இரண்டு, மூன்று வரிசையாக நின்று ஆடி, நிறைவாக வட்டமாக ஆடி முடிக்கின்றனர், கையில் பிரம்புகளை வைத்து ஒருவருக்கொருவர் தட்டிக் கொள்வதும் இவ்வாட்டத்தின் தனிச் சிறப்பாகும். முதலில் இசையை மெதுவாகவும், பின்னர் வேகமாகவும் ஆட்டக் கலைஞர்கள் கோலாட்டம் நிகழ்ச்சி நடத்துவது உண்டு. சேவாட்டம் சவ்வாது மலைப் பகுதியில் சிறப்பிடம் பெறுகிறது. இவை போன்றே கிருஷ்ணகிரி, தர்மபுரி போன்ற மாவட்ட பழங்குடியின மக்களிடத்திலும் ஆடப்படுவதாக ஆறு. இராமநாதன் அவர்கள் குறிப்பிடுகின்றார்.

### 5.6.2.2. கோலாட்டம்

நாட்டுப்புறக் கலைகளுள் மிகவும் செல்வாக்குப் பெற்றிருக்கும் கலைகளில் கோலாட்டமும் ஒன்றாகும். மலையாளிகள் கைகளில் சிறிய கோல்களை வைத்துக் கொண்டு இசைக்கு ஏற்ப ஆடிப் பாடும் ஆட்டமே கோலாட்டம் எனப்படுகிறது. இவ்வாட்டத்தில் பாடப்படும் பாடல்களின் ஓசைக்கு ஏற்பவும், இசைக்கு ஏற்பவும், ஆடிய வண்ணம் தங்கள் இரு கைகளிலுள்ள கோல்களை ஒன்றோடொன்று தட்டி ஒலியெழுப்புகின்றனர். இவ்வாறு மாறிமாறி ஆடும்போது ஒருவர் கையில் உள்ள கோலானது

மற்றவரின் கையில் உள்ள கோலைத்தட்டி ஒலியெழுப்பி ஆடலை ஏற்படுத்துவது மற்றொரு சிறப்பம்சமாகும். இவ்வகை ஆட்டத்தைத் தமிழகத்தில் 'கோலாட்டம்' என்றும், ஆந்திராவில் 'கோலாமூ' என்றும் குறிப்பிடுகின்றனர். கேரளத்தில் கோல்களிக்கு 'கம்படிகளி' 'கம்புகளி' 'கோலடி' எனவும் 'கோல்களி' என்றும் கூறுகின்றனர்.

### 5.6.2.3. கும்மியாட்டம்

கைகளைக் கொட்டியவாறு பெண்கள் வட்டமாக நின்று ஆடும் ஆட்டம் கும்மியாட்டமாகும். இவ்வாட்டத்தை மலையாளிகள் 'கொட்டம் அடித்தல்' என்கின்றனர். குல தெய்வ வழிபாட்டின் போதும், பிற தெய்வ வழிபாட்டின் போதும் மலையாளியினப் பெண்கள் ஒன்று கூடி கொட்டம் அடித்துப் பாட்டுப் பாடுகின்றனர். மலையாளி இன ஆண்களும் கும்மிப் பாடல்களைப் பாடியவாறே பாடலின் தாள அமைப்புக்கேற்றவாறு கைகளைக் கொட்டி, கால்களை முன்னும் பின்னும் எடுத்து வைத்து ஆடுகின்றனர்.

### 5.6.2.4. புலியாட்டம்

புலியாட்டம், வேட்டையாடுதல் போன்ற ஆட்டங்கள் நாட்டுப்புறக் கலைகளோடு தொடர்புடையதாக இருக்கிறது. இந்த ஆட்டத்தில் இளைஞர்கள் தங்கள் உடலில் புலி போன்ற வண்ணம் தீட்டி, உடல் முழுதும் மஞ்சல் பூசிக் கொண்டு ஆடுகின்றனர். தலையில் பூக்களைக் கோர்த்து அணிந்து கொண்டு வாலும், புலிப்போன்ற கோரைப்பற்களையும் வைத்து பார்ப்பவர்களைப் பயங்கொள்ளத்தக்க வகையில், புலி உருவத்தை ஏற்படுத்திக் கொள்கின்றனர். புலிவேடம் புனைந்து இருப்பவர்கள் இசைக்கலைஞர்கள் எழுப்பும் இசைக்கு ஏற்ப ஆடி வருவர். புலியுடன் சிலர் மாடு போன்று ஒப்பனை செய்து ஓர் இடத்தில் மேய்வது போல் பாவனை செய்வர், புலி வேடம் போட்டிருப்பவர்கள் மாடுகளைப் போன்று இருப்பவர்களைத் தாக்கி அவற்றைக் கொன்று விட்டதாக பாவனை செய்கின்றனர். அதன் பின்னர் அவ்வின ஆண்கள் நான்கு ஐந்து பேர் ஒன்றுகூடி மாடுகளைக் கொன்ற புலியை வேட்டையாடப் புறப்படுகின்றனர்.

மலையாளி இனத்தவர் புலியை வேட்டையாடுபவர்களுக்கு அவ்வினப் பெண்ணைத் திருமணம் செய்து வைப்பதாகக் கூறுகின்றனர். எனவே, வேட்டைக்குச் செல்பவர்கள் எப்படியாவது புலியை வேட்டையாடிவிட வேண்டும் என்ற குறிக்கோளுடன் செல்கின்றனர். புலிபோன்று வேடம் புனைந்திருப்பவர்களை நெருங்கியதும் புலி தாவித் தப்பித்துக் கொள்வதுபோல் ஓடுகிறது. வேட்டையாடச் சென்றவர்கள் தன் கையில் வைத்துள்ள ஒரு துணி உருண்டையை அதன் மீது குறிப்பார்த்து எரிகின்றனர். புலியின் மேல் பட்டவுடன் புலி கீழே விழுந்து விடுகிறது. யார் எரிந்தது புலியின் மேல் விழுந்ததோ அவரே புலியை

வேட்டையாடியவராகக் கருதி அவருக்கு மாலையணிவித்து மாப்பிளையாகக் ஊர்வலமாக அழைத்துச் செல்கின்றனர். இந்தப் புலியாட்டத்தை சவ்வாது மலை மலையாளிகள் பொங்கல் பண்டிகையின் போது மட்டுமே நிகழ்த்துகின்றனர்.

### 5.6.2.5. கூத்து

தமிழ் இலக்கியம் முத்தமிழ் என்று வழங்கப்பெறும், முத்தமிழின் கூறுகள் இயல், இசை, கூத்து என்பன. வரிவடிவத்தில் இதயத்திற்கு இன்பம் பயப்பது 'இயல்' என்றும் ஒலிநயத்துடன் பாடப்பெறும் பொழுது இசையுடன் இயைந்தது 'இசை' என்றும் மெய்ப்பாடுகளினால் வெளிப்படுத்தப்பெறுவது 'கூத்து' என்றும் வழங்கப்பெறும். சங்ககால மக்களின் வாழ்வில் வழிபாடு என்பது இன்றியமையாத இடத்தினைப் பெற்றிருந்தது. இறைவனை வழிபடுகையில் மக்கள் ஆடியும் பாடியும் வழிபட்டும் வந்துள்ளனர். இத்தகைய ஆடலையும் பாடலையும் 'கூத்து' என்னும் சொல் விளக்கி நிற்கின்றது.

'கூத்து' என்னும் சொல்லைக் "கந்த முதலாகப் பிரபந்தமீறாக இருபத்தெட்டு உருக்களும் அகத்திற்கும், தேவபாணி முதல் அரங்கொழிக்கச் செய்யும் ஈறாகக் கொண்ட செந்துளை விகற்பங்களும் கொண்ட பாட்டுடையனவாய்க் கூத்தின் விகற்பத்திற்கேற்ப வாத்தியங்களாகிய கீதாங்கம், நிருத்தாங்கம், பெற்றனவாய் அவ்வங்கங்களுக்குரிய ஆடல்களாகிய கீற்று முதலிய வடுகிற்குரிய கால்களும், உடற்நூக்கு முதலிய உடலாவர்த்தனையும் அகக்கூத்திற்கும், பெருநடை, சாரியை, பிரமரி முதலிய புறக்கூத்திற்குரிய ஆடல்களையும் பெற்று இன்பம், தெளிவு, நிறை, ஒளி, வன்சொல், இறுதி, மந்தம், உச்சங்கொண்ட பாடல்களைப் பெற்று பலவகைத் தாளத்துடன் கண்டாரை மகிழ்விப்பது கூத்து"[35] என அபிதான சிந்தாமணி விளக்கமளிக்கிறது.

சங்க இலக்கியம் வழிபாட்டு நிலையில் மட்டுமன்றிப் பொழுதுபோக்கு நிலையிலும், தொழில் அடிப்படையிலும் கூத்துகள் நிகழ்த்தப்பெற்றன என்று குறிப்பிடுகின்றது. சங்ககால மக்களிடையே குரவைக் கூத்து, துணங்கைக் கூத்து, வெறியாட்டு ஆகியன பெருவழக்கில் இருந்தமையை அறியமுடிகின்றது. மேலும், அக்கால மக்களிடையே ஆரியக்கூத்து, பாவைக்கூத்து, கொடுகொட்டிக் கூத்து, பாண்டரங்கக் கூத்து, கபாலக் கூத்து, வள்ளிக் கூத்து போன்ற கூத்துகளும் நடைபெற்றன என்று குறிப்பர். கூத்தர், பொருநர் போன்ற சொற்கள் தொழில் அடிப்படையில் கூத்துக்கள் நடைபெற்றன என்பதனைக் குறிக்கும்.

#### 5.6.2.5.1. மலையாளிகளின் கூத்து

சவ்வாதுமலைப் பகுதிகளில் காணப்படுகின்ற நிகழ்த்துக் கலைகளில் கூத்து குறிப்பிடத்தக்கது. இங்கு நடைபெறுகின்ற கூத்துகளை மட்டுமே ஒரு தனி ஆய்வாகச் செய்யுமளவிற்குத் தரவுகள் உள்ளன. ஆய்வின் விரிவு அஞ்சி அவற்றில் சில மட்டும் இங்கு எடுத்துக்காட்டப்படுகிறது. பொங்கல், குலதெய்வ வழிபாடு, சிவராத்திரி மற்றும் பிற தெய்வ வழிபாட்டு நாட்களிலும், திருமணத்திற்கு முந்தைய நாளிலும், இறந்தவர்களின் மூன்றாம் நாள் சடங்கிலும் கூத்து நடத்தப்படுகிறது. மாலை நேரம் தொடங்கி அதிகாலை வரை இவர்களின் கூத்து நடக்கிறது. இதனைப் பல தரப்பட்ட மக்களும் கண்டுகளிக்கின்றனர். கோவில் வளாகங்கள், திறந்த வெளி இடங்களில் அரங்குகளை அமைத்து நடிக்கின்றனர்.

இதற்கான கதைகள் இராமாயணம், மகாபாரதம் போன்ற புராண இதிகாசங்களிலிருந்தும் வாழ்க்கை முறைகளிலிருந்தும் இடம் பெறுகின்றன. மழையை வேண்டுவோர் 'விராடப் பருவத்தையும்', திருமணம் வேண்டுவோர் 'மீனாட்சி கல்யாணத்தையும்', பிள்ளைப் பேற்றை விரும்புவோர் 'சராசந்திரன்' நாடகத்தையும், இடி விழுந்தால் 'அர்ஜீனன் தபசு' நாடகத்தையும் நடத்துகின்றனர். இக்கூத்தில் சில மரபுகள் பின்பற்றப்பட்டு வருகின்றன. இசை, கொழு, கட்டியக்காரன் வரவு, கதாப்பாத்திரங்கள் திரைக்குப் பின்னிருந்து பாடும் பாடல், முன்னிருந்து பாடுதல், அறிமுகப்படுத்திக் கொள்ளல், கதைகூறல், பிற கதாப் பாத்திரங்களை அழைத்தல், வசனம், பெயரை வாழ்த்துதல், மங்களம் பாடுதல் முதலான மரபுகள் பின்பற்றப்பட்டு வருகிறது.

இவர்களின் கூத்தில் முழுக்க முழுக்க ஆண்களே ஒப்பனை செய்துகொண்டு நடிக்கின்றனர். இவர்களுடன் வயது முதிர்ந்த கலைஞர்களும் கலந்துகொள்வதுண்டு. இவ்வின மக்களும் கூத்து என்றாலோ சிறியவர் முதல் பெரியவர் வரை கூத்து நடைபெறுவதற்கு முன்பே, கூத்து நடைபெறும் இடத்தில் பாய் விரித்து படுக்கையைப் போட்டு விடுகின்றனர். இவை அவர்கள் எந்த அளவிற்கு கூத்தின் மேல் ஆர்வம் செலுத்துகின்றனர் என்பதை வெளிக்காட்டுகிறது. மேலும் பல்வேறு கிராமங்களிலிருந்தும் இக்கலையைக் கண்டு ரசிக்க பலா் வருவதுண்டு.

#### 5.6.2.5.2. கூத்து நடைபெறும் இடம்

கூத்து நடைபெறும் இடமானது ஊரின் பொது இடத்திலோ, கோவில்களின் இடத்திலோ, அல்லது தெருக்களின் நடுவிலோ அமைந்திருக்கும். கூத்து நடைபெறும் இடத்தைத் தூய்மைபடுத்தி இரண்டு மூங்கில் கம்பு நட்டு, அதில் திரை கட்டுகின்றனர்.

நான்கு உரல்கள் வைத்து அதன் மேல் மரப்பலகையை வைத்து மேடை அமைக்கின்னர். அதன்மீது இசைக் கருவிகள் வாசிப்பவர்கள், பின்பாட்டுக்காரர்கள் அமர்ந்திருக்கின்றனர். பின்புறமாகத் தேன்னங்கீற்றினால் அறைபோல் அமைத்து அதில் கூத்து நடிகர்கள் ஒப்பனை செய்து கொள்கின்றனர். மக்கள் கூட்டம் திரையைச் சுற்றிலும் காணப்படும்.

### 5.6.2.5.3. பின்பாட்டுக்காரர்கள்

கூத்திற்கு மிக முக்கியமானது ‘பின்பாட்டு’ ஆகும். ஆடலும் பாடலும் இணைந்து நடிக்கும் கூத்தே தெருக்கூத்தாகும். கூத்தில் பின்பாட்டுப் பாடுவர்களும் இவர்களே. பின் கதாபாத்திரங்களை ஏற்று நடிக்கும் கலைஞர்கள் முன் நடிக்கும் கலைஞர்களுக்குப் பின்பாட்டுக்காரர்களாகவும், முன் கதாபாத்திரங்களை ஏற்று நடிக்கும் கலைஞர்கள், பின் நடிக்கும் கலைஞர்களுக்குப் பின்பாட்டுப் பாடுபவர்களாகவும் இருக்கின்றனர். பாட்டின் இடையிடையே வசனம் பேசுவதிலும், இசைக்கருவிகளை வாசிப்பதிலும் திறமையுடன் இருக்கின்றனர். மரப்பலகையின் மீது இசைக்கருவிகளை வைத்துக்கொண்டு வாசிக்கின்றனர். இவர்களே கூத்தினை முன்னின்று நடத்துபவர்களாகவும் இருக்கின்றனர்.

### 5.6.2.5.4. இசைக் கருவிகள்

மலையாளிகள் தெருக்கூத்தில் 1. தாளம், 2. மத்தளம், 3. ஆர்மோனியம், 4. நாதஸ்வரம் போன்ற இசைக் கருவிகளைத் தெருக்கூத்தில் பயன்படுத்துகின்றனர். தமிழர் இசைக்கருவிகளை அவற்றின் தயாரிப்பு மற்றும் இசைக்கும் தன்மை அடிப்படையில் தோல்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி என்று நான்காக வகைப்படுத்துவர். விலங்குகளின் தோலைக்கொண்டு தயாரிக்கப்படுபவைத் தோல்கருவிகள். காற்றை வாங்கி நாதம் எழுப்புவன துளைக் கருவிகள். சுருதிக்கு அடிப்படையாக விளங்குபவை நரம்புக் கருவிகள். உலோகங்களால் வார்க்கப்படுபவை ‘கஞ்சக் கருவிகள்’ ஆகும். மலையாளிகளின் தெருக்கூத்திலும் இசைக்கருவிகள் இன்றியமையாத இடத்தைப் பெற்றுள்ளன.

### 5.6.2.5.5. தாளம்

தாளம் சிங்கி, மணி, ஜால்ரா எனப் பல பெயர்களால் அழைக்கப்படுகின்றன். ஜால்ரா, கஞ்சக் கருவிகள் வகையைச் சேர்ந்தது. இவை உலோகங்களால் வார்க்கப்படுபவை. இவை இசையின் கால அளவுகளைச் சீர்படுத்தி ஒரு நேர்க்கோட்டில் பயணிக்கச் செய்ய உதவுகிறது. இசையும் தாளமும், உடலும் உயிரும் போன்றவை. பிரிந்தால் இரண்டுமே இறந்து போகும், நாதஸ்வரம், மிருதங்கம், கடம், கஞ்சிரா, கொன்னைக்கோல் உள்ளிட்ட எல்லா வாத்தியங்களையும் தாளம் தன் கட்டுப்பாட்டிற்குள்

கொண்டுவருகிறது. இசையில் பிசிறு தட்டாமல் இருக்க வாய்பாட்டுக்காரர்களும், வாத்தியக்காரர்களும் தங்கள் தொடைகளைக் கைகளால் தட்டி கைத்தாளம் காட்டுவார்கள், தாளக்காரர் கணநொடி தவறு செய்தாலும் இசை வேறொரு திசைக்கு இழுத்துக்கொண்டு போய்விடும்.

#### 5.6.2.5.5.1. மிருதங்கம்

பலவகையான இசைக் கருவிகளுள் மிருதங்கம் தனித்துவமும் சிறப்பும் வாய்ந்தது. மத்தளத்தின் வடிவத்தை ஒத்திருக்கும் இக்கருவி, அதைவிட சிறிதாகவும், குட்டையானதாகவும் இருக்கும். இவை தபேலாவைப் போல் இல்லாமல் அகலம் குறைந்த வெட்டுத்தட்டுப் பகுதியையும், மத்தளத்தை விடச் சிறிதான வலத்தளைப் பகுதியையும் கொண்டதாக இருக்கிறது. இந்தத் தோற்கருவியின் நாதம் இன்பமயமானது. அதிர்வு சிதறாத இதன் இசை நெடுந்தொலைவு கேட்கவல்லது. ஒரு காலத்தில் தமிழர்களின் சுக துக்கங்களிலும், வழிபாட்டுச் சடங்குகளிலும் நீங்கா இடம்பிடித்திருந்த இந்த இசைக்கருவி, இன்றும் இம்மக்களிடத்தில் காணமுடிகிறது. இவர்களிடத்திலும் கூட அடுத்த தலைமுறைக்கான, இலக்கணம் நயம் அறிந்து இசைப்பவர்கள் இல்லையென்றுதான் சொல்ல வேண்டும். இக்கருவி தெருக்கூத்தில் நடன அடவுகளை வெளிப்படுத்தும் கருவியாக இருக்கின்றது. மிகப் பழமை வாய்ந்த இந்த இசைக்கருவிகளைப் பயன்படுத்துவது அறிதாக இருப்பதால் இன்று சில இடங்களில் வெறும் காட்சிப்பொருளாக மட்டுமே இருந்து வருகிறது. முறைப்படியான இசை இசைப்பவர்களும் அருகிவருகிறார்கள்.

மிருதங்கங்கள் யாவும் மரம், தோல், வடிவம், வார்ப்பில் சிற்சில வேறுபாடுகள் கொண்டவை. ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதமாகச் சத்தத்தை உருவாக்குபவை. இசையை, சிதைக்காமல் குவிக்கும் மரங்களையும், அடியைத் தாங்கி ஒலியை எழுப்பும் விலங்குகளின் தோலையும் இனம் கண்டு அவற்றை வடிவப்படுத்தி வார்த்து இசைத்த நம் மூதாதையரின் அறிவு நம்மை வியக்க வைக்கிறது,

#### 5.6.2.5.5.2. ஆர்மோனியம்

தெருக்கூத்தில் ஆர்மோனியம் முக்கியத்துவம் பெறுகிறது. இது நரம்புக்கருவி வகையைச் சார்ந்ததாகும். மிருதங்கத்தில் வாசிக்கப்படும் அத்தனைச் சொற்கட்டுகளையும் இவ்வாத்தியத்தில் பிசிறின்றி வாசிக்க முடியும். சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே பயன்படுத்தப்பட்டு வருகிறது. இவை முப்பத்திரண்டு வகையான இசை ஒலியை எழுப்பக் கூடியவை. மரக்கட்டைகளால் உருவாக்கப்பட்டு சிறு, சிறு கம்பிகள் மூலம் முப்பத்திரண்டு பொத்தான்கள் அமைப்பில் பொருத்தப்பட்டு இருக்கின்றது. அதன்மேல் கம்பிகள்

பொருத்தப்பட்டு உள்ளது. கூத்தில் மிருதங்கம் இசைக்கு ஏற்ப இசையைக் கூட்ட, குறைக்க இக்கருவி பயன்படுகிறது. மேலும், பொருத்தப்பட்டிருக்கும் நரம்புகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு இசையைத் தருவனவாக அமைத்திருக்கின்றன.

**5.6.2.5.4.4. நாதஸ்வரம்**

ஆதி இசைக்கருவியான இந்த நாதஸ்வரம் தெருக்கூத்தில் மிக முக்கிய கருவியாகும். இருக்கிறது. பாடல்களின் தன்மைக்கு ஏற்ப இசையைத்து தரவல்லது. இதனை இசைக்க இரண்டு கலைஞர்களை வரவழைக்கின்றனர். இவர்கள் ஒருவரை ஒருவர் மாற்றி இரவு முழுவதும் வாசிக்கின்றனர். இதனை வாசிக்க முழுமையாகவும், அடர்த்தியாகவும் மூச்சை உள்ளே செலுத்தினால் மட்டுமே இசை வெளியேறும். ஆனால் வெளியேறும் இசை மிகக் கனமாக இருக்கும். நல்ல பயிற்சி இருந்தால் மட்டுமே இந்தக் கருவியை வாசிக்க முடியும்.

**5.6.2.5.6. கட்டியங்காரன்**

கட்டியங்காரன் என்பவர் கூத்தில் முக்கிய பங்கு வகிப்பவர் ஆவார். இவருக்குப் 'பப்பன்', 'அகடவிகட பப்பன்', 'கோமாளி', 'நாகரிக கோமாளி' 'காவல்காரன்', 'கட்டியங்காரன்' எனப் பல்வேறு பெயர்கள் உண்டு. இவர் கூத்தினைத் தொடங்கி வைத்தல், கதாபாத்திரங்களை அறிமுகம் செய்தல், கூத்தின் கதையை விளக்குதல், இடையிடையே மக்களை மகிழ்விக்கும் விதமாகக் கோமாளிபோல நகைச்சுவையைக் கையாளுதல், கூத்தினை முடிக்கும் பணி என பல பணிகளுக்கு ஊரிமைக் கொண்டவர்கள் ஆவர்.

கடவுள் துதி பாடியவுடன் கட்டியங்காரன் வேடமிட்டவர் தோன்றி சபைக்கு வந்தனம் கூறிப் பாடுவார். பின்னர் அன்று நடக்கவிருக்கும் கதையைக் கூறி முக்கிய பாத்திரங்களை அறிமுகப்படுத்துவார். அதைத் தொடர்ந்து கதைப் பாத்திரங்கள் திரைக்கு உள்ளேயிருந்து பாடி, பார்வையாளர்களுக்கு ஆர்வத்தை ஏற்படுத்திப் பின்னர் வெளியே வந்து பாடல் பாடி ஆடுவர். கதையை உரையாடல் வாயிலாக விளக்கி நடிப்பார்கள். ஒரு பாத்திரம் வந்து சென்றபிறகு அடுத்த பாத்திரம் வரும்முன் அல்லது வரத் தாமதம் ஆகும் சூழலில் கட்டியங்காரன் நகைச்சுவைக் கதைகளைக் கூறி, பார்வையாளர்களை மகிழ வைப்பார். இவ்வாறு கட்டியங்காரன் பாத்திரங்களை ஏற்று நடிப்பவர்கள் கூத்துத் தொடக்கம் முதல், கூத்து முடியும் வரை இருந்து பார்வையாளர்களை மகிழ்விப்பது மட்டுமல்லாமல் நாடகத்தின் கதையைப் பார்வையாளர்களுக்குக் கொண்டு சேர்ப்பவராகவும் இருக்கிறார்.

### 5.6.2.5.7. மலையாளிகள் நிகழ்த்தும் கூத்துக்கள்

மலையாளிகள் நிகழ்த்தும் தெருக்கூத்துக்களைப் பொறுத்தவரை பாரத கதைகளே மிகுதியாக இடம்பெறுகின்றன. பாரதக் கதைகளே மக்களால் மிகவும் விரும்பப்படுவதாகத் தெருக்கூத்து கலைஞர்கள் பலர் கூறுகின்றனர். பாரதக் கதையைத் தெருக்கூத்தாக ஆடுவதையே கலைஞர்களும் விரும்புகின்றனர். மகாபாரதத்தின் கதைகளான 'பதினெட்டு நாள் சண்டைகள்', 'கிருஷ்ணன் தூது', 'விராடப் பருவம்', 'கீசகன் சம்பாரம்', (கீசகன் வதை) 'சுபத்ரா கல்யாணம்', 'அர்ச்சுனன் தபசு', போன்ற தெருக்கூத்துக்கள் நிகழ்த்தப்படுகின்றன.

புராணங்கள் தொடர்பில்லாத, 'வன்னியன் பிறப்பு', 'ஐயப்பன', 'நல்லதங்காள்', 'குறவஞ்சி', 'மார்கண்டேயன் நாடகம்' முதலியனவும் நிகழ்த்தப்படுகின்றன. இவைகளைக் கற்றுத் தருவதற்கு என்று ஒவ்வொரு கிராமத்திலும் நாடக வாத்தியார் ஒருவர் இருக்கின்றார். இவர்களின் பயிற்சியின் மூலமாகவே இத்தகைய கூத்துக்கள் நிகழ்ததப்படுகின்றன. ஒரு சில நாடகங்களுக்கு நாடக புத்தகத்தினைப் படித்து அதன்படி கதாபாத்திரங்களை உருவாக்கி நடிப்பதும் காணமுடிகிறது.

### 5.6.2.5.8. கொழு பாடுதல்

கூத்து தொடங்கும் முன் கூத்து ஆரம்பிக்கும் அறிகுறியாக இசைக் கலைஞர்கள் இசைத்துப் பாடல்கள் பாடி இசைக்கருவிகளை இசைக்கின்றனர். இவ்வாறு செய்தலைக் 'கொழு பாடுதல்' 'களறி கட்டுதல்' என்று கூறுகின்றனர். இவை தெருக்கூத்தில் முதல் முதலாக நிகழும் நிகழ்வாகும். இதன் பிறகு கடவுள் துதியாக விநாயகர், சரஸ்வதி, கலைவாணி போன்ற கடவுள்களை வாழ்த்திப் பாடி, தங்களுடைய கூத்து நிகழ்வினை எந்த இடையூறுமின்றி சிறப்பாக நடத்திக் கொடுக்குமாறு வேண்டுகின்றனர். அதன் பின்னரே கூத்து தொடங்கும்.

### 5.6.2.5.8.1. கதாப்பாத்திரங்கள் திரைக்கு உள்ளிருந்து பாடுதல்

தெருக்கூத்தில் கதாப்பாத்திரங்கள் ஒப்பனை செய்துகொண்டு திரையில் தோன்றுவதற்கு முன் உள்ளிருந்தே ஒரு பாடலைப் பாடுகின்றனர். இதனை மலையாளிகள் 'கீர்த்தனை' பாடுதல் என்பர். இவை திரையில் தோன்றுவதற்கு முன் அவருடைய குரல்வளம் எவ்வாறு உள்ளது என்பதை அறிந்துகொள்ளப் பாடப்படுவதாகக் கூறுகின்றனர். இதனைப் பாடி முடித்தவுடன், பாத்திரம் ஏற்று நடிப்பவர், தன்னுடைய பலம், திறமை, தான்

ஆட்சிபுரியும் நாடு, கதாப்பாத்திரத்தின் பெயர் போன்றவற்றைச் சொல்லி, நான் சபைக்கு வருகிறேன் என்று கூறுகின்றனர்.

சான்றாக 'பீமன்' பாத்திரம் ஏற்றவர் கவிப்பாடுதல் பின்வருமாறு அமைகிறது.

**'பரிசுடன் பாராய் ஈட்டி பலபனி அலங்கரித்து**
**இட்டதோர் இச்சைக் கட்டி விருந்துப் பூண்டு**
**இடிபோல் அலங்கரித்து இலஞ்சிங்கம் போலத் தாண்டி**
**கட்டலகு பதகமும் மார்பில் அசைந்திட**
**கதம்தனை கையில் பிடித்த மதகிரி பீமன்**
**சபைக்கு கொழுவாக வருகின்றேனே'**

இதனைக் 'கவி' சொல்லல் என்கின்றனர் கூத்துக் கலைஞர்கள். கவிப்பாடுதல் என்பது ஒவ்வோரு கதாப்பாத்திரங்களுக்கும் வேறுப்படுகின்றன.

#### 5.6.2.5.8.2. கதாப்பாத்திரம் திரையில் தோன்றுதல்

கதாப்பாத்திரம் ஏற்று நடிப்பவர்கள் 'கவி' சொல்லி முடித்தவுடன் ஒரு பாடலைப் பாடி திரையில் தோன்றுகின்றனர். தோன்றியவுடன் இசைக்கருவிகள், கூத்தின் மூத்த கலைஞர்கள் ஆகியோரைத் தொட்டு வணங்கி பின்னரே நடனத்தைத் தொடங்குகின்றனர். ஒவ்வொரு கதாப்பாத்திரமும் இம்முறையைப் பின்பற்றுகின்றனர். அவர்கள் கூத்தின்மேல் வைத்திருக்கும் பக்தியையும், மரியாதையையும் அவை உணர்த்துகிறது. பின்னர் கதாப்பாத்திரங்கள் பாடல்களின் வழி, தான் எந்த நாட்டு அரசன், யாருடைய பிள்ளை, தன்னுடைய ஒப்பனைகள் எவ்வாறு இருக்கின்றன என்பதைப் பாடி, அதனைச் சபையில் இருப்பவர்களுக்குத் தெரிவிப்பர். அதனையடுத்து தான் எதற்காக வந்திருக்கிறேன், எந்த கதாப்பாத்திரங்களைப் பார்க்க வேண்டும், எங்குச் செல்ல வேண்டும், போன்ற செய்திகளையும் பாடல்களின் வழியே பாடி பார்வையாளருக்கு விளக்குகின்றார். இதற்கு உறுதுணையாகக் கேள்வி கேட்டு, கதாபாத்திரங்களின் பதிலுக்குக் கேலி செய்து பார்வையாளர்களைச் சிரிக்க வைப்பவர்களாகக் கட்டியங்காரன் பாத்திரங்களை ஏற்று நடிப்பவர்கள் இருக்கின்றனர்.

#### 5.6.2.5.9. வசனம் கட்டுதல்

ஒவ்வொரு கதாப்பாத்திரங்களும் திரையில் தோன்றி ஆடி முடித்துவிட்டுச் சென்றவுடன், அடுத்த கதாபாத்திரங்கள் வருவதைச் சபையோருக்கு அறிவிப்பது 'வசனம் கட்டுதல்' என்று கூறுகின்றனர். உதாரணமாக 'தருமராஜா' கதாப்பாத்திரத்தினை ஏற்று

நடித்தவர் வந்தவுடன் அவர் தன்னுடைய மனைவியைப் பார்க்க நேர்ந்தால், ‘தருமராஜா’ தற்போது சபையிலே வந்து அமர்ந்திருக்கப்படியால், அவரைக் காண அவருடைய மனைவியாகிய ‘பாஞ்சாலி’, அல்லது ‘தூரோபதை’ சபைக்கு வருகின்ற விதம் காண்க! என்று வசனத்தைக் கட்டி முடித்தவுடன் அடுத்த கதாபாத்திரங்கள் வருவதைக் களப்பணியின் மூலம் காணமுடிந்தது. இது பார்வையாளர்களுக்கு அடுத்து வரப்போகும் கதாபாத்திரங்களை அறிவிப்பதற்கும், கூத்து விடுபடாமல் தொடர்ந்து ஒரு கோர்வையாகச் சொல்வதற்கும் பயன்படும் ஒரு நேர்த்தியாகும்.

### 5.6.2.5.10. பெயரை வாழ்த்துதல்

மலையாளிகள் கூத்து ஆடுகின்றபோது அவருடைய உறவினர்களும், நண்பர்களும் கூத்தாடுபவர்களுக்கு அன்பளிப்பு கொடுப்பதுண்டு. அத்துடன் நாடகக் குழுவினர்களுக்கும் அன்பளிப்பு கொடுக்கப்படுகிறது. அன்பளிப்புக் கொடுத்தவர் என்றும் புகழுடன், நோய் நொடியின்றி, இறைவனுடைய அருள் பெற்று வாழ வேண்டும் என்று வாழ்த்துகின்றனர். இதனைப் ‘பெயரை வாழ்த்துதல்’ என்று கூறுவர். மேலும், பார்வையாளர்களும் நாடகக் குழுவினர்களுக்கு அன்பளிப்பு கொடுத்து வாழ்த்துப் பெறுவதும் உண்டு. இறப்புக் காரியங்களில் நடைபெறும் கூத்தில் இறந்தவருடைய பெயரும் புகழும், ஆடுசபையிலும், பாடுசபையிலும் விளங்கி அவருடைய ஆன்மா முக்தி பெற்று வாழ வேண்டும் என்று வாழ்த்துவது மரபாகக் காணப்படுகின்றது.

### 5.6.2.5.11. ஒப்பனைகள்

மலையாளிகள் கூத்து ஆடுகின்றபோது ஆண் வேடம் ஏற்று நடிப்பவருக்குத் தலையில் கிரீடம் அணிவிக்கப்படுகிறது. கூத்தில் பங்குபெறுகின்ற அனைத்துக் கலைஞர்களும் காலில் சலங்கை அணிகின்றனர். இவற்றில் ஆண், பெண் வேறுபாடு கிடையாது. வேடம் புனைவதற்குப் பயன்படுத்தும் ஆடைகள் மூன்று வருடத்திற்கு ஒருமுறை மாற்றப்படுகிறது. ஆடைகள் கதாபாத்திரத்திற்கு ஏற்ப இருக்க வேண்டும் என்று கருதுகின்றனர். கூத்து முடிந்ததும் ஒப்பனை ஆடைகள் சுத்தம் செய்யப்பட்டு கூத்து வாத்தியாரின் பொறுப்பில் பாதுகாப்பாக வைத்துக் கொளப்படுகின்றது. சிலர் சொந்தமாக ஆடைகளை வாங்கி நடிப்பதும் உண்டு.

கூத்துக் கலைஞர்கள் கூத்தாடும்போது தங்களுடைய கதாப்பாத்திரங்களுக்கு ஏற்ப வண்ணப் பூச்சுகளைப் பயன்படுத்துகிறார்கள். கூத்து நடைபெறுவதற்கு இரண்டு மணி நேரத்திற்கு முன்பாகவே கலைஞர்கள் வண்ணக்கலவைகளைப் பூசிக் கொள்வதிலும், உடையலங்கார வேலைகளிலும் ஈடுபடுகின்றனர். ஒரு கதாபாத்திரத்தின் ஆடைகள் வாங்க

ரூ.3000 செலவு ஆவதாகக் கூறுகிறார்கள். கூத்துக் கலைஞர்கள் ‘முத்து’, ‘வெள்ளை’, ‘அரிதாரம்’, ‘கிளிப்பச்சை’, ‘மஞ்சள்பவுடர்’, ‘செந்துருவம்’, ‘வண்ணார நீலம்’, ‘சிக்னாபொடி’, ‘அப்ரேக்’ ஆகிய வண்ணப் பவுடர்களைப் பயன்படுத்துகிறார்கள். கலைஞர்கள் ஒருவருக்கொருவர் உதவிக் கொண்டு அலங்கார ஒப்பனைகளைச் செய்துகொள்கிறார்கள்.

ஒரு கலைஞர் ஒன்றுக்கு மேற்பட்ட வேடங்களை ஏற்று நடிப்பதும் உண்டு. கூத்துக் கலைஞர்கள் ஆடும் சூழலுக்கு ஏற்ப கதாப்பாத்திரங்களை ஏற்று ஒப்பனைகள் செய்து கொள்கின்றனர். பெண் வேடங்களை ஏற்று நடிக்கும் கலைஞர்கள் ‘டோபா’ (கூந்தல்) போன்ற அமைப்புடைய முடியைத் தலையில் மாட்டி அலங்கரித்துக் கொள்கின்றனர். தலையில் பூச்சூடி, பல்வேறு வண்ண மின்விளக்கு அமைப்புக் கொண்ட தலை அலங்காரப் பொருட்களை வாங்கி தலையில் செருகி ஒப்பனை செய்து கொள்கின்றனர். பெண் வேடம் ஏற்று நடிக்கும் சில கலைஞர்கள் காது, மூக்கு போன்றவற்றைக் குத்தி அதில் அணிகலன்களை அணிகின்றனர். மற்ற நாட்களில் அதில் சிறு துண்டுகுச்சியைச் செருகி வைத்திருக்கின்றனர்.

### 5.6.2.5.12. பயிற்சிப் பட்டறை

மலையாளிகள் ஒவ்வொரு விழாக்களின் போதும் கூத்து ஆடுவதற்கு ஒரு மாதத்திற்கு முன்பே என்ன கூத்து ஆட வேண்டும் என்று முடிவு செய்து, விழாக்காலம் வரும்வரை இரவு நேரங்களில் பயிற்சியில் ஈடுபடுகின்றனர். இந்தப் பயிற்சியை இரவு நேரங்களில் மட்டுமே நடத்துகிறார்கள். இரவு அனைவரும் உணவருந்திய பின்பு 8 மணிக்கு மேல் ஆரம்பித்து இரவு 11.30 வரை பயிற்சியில் ஈடுபடுகின்றனர். பகல் முழுவதும் வயல் வேலைகளைச் செய்கின்றனர். ஓய்வெடுக்கும் இரவு வேளையின் ஒரு பகுதியைக் கலைஞர்கள் பயிற்சிக்காகப் பயன்படுத்திக் கொள்கின்றனர். ஊருக்கு பொது இடமான ‘மந்தையில்’ மின்னொளி பொருத்தப்பட்ட வெளிச்சத்தில் பயிற்சியைத் தொடங்குகின்றனர். “மின்னொளி இல்லாத காலங்களில் நிலவு வெளிச்சத்தில் பயிற்சிப்பட்டறையை உருவாக்கி அதில் கூத்துக்கு வேண்டிய அடவுகளையும், பாடல்களையும் கற்றுக் கொண்டதாக அவ்வின கூத்து வாத்தியார்கள் கூறுகின்றனர். மேலும், நிலவு வரவில்லையென்றால் ‘தீப்பந்தம்’, ‘அருவாள் பந்தம்’, ‘விளக்கு வெளிச்சம்’ போன்றவற்றிலும் பயிற்சியை மேற்கொள்வோம்”[36] என்கிறார் கூத்து வாத்தியார் தேவராஜ்.

### 5.6.2.5.13. மங்களம் பாடுதல்

மங்களம் பாடுதல் என்பது கூத்தின் நிறைவுப் பகுதியாகும். மலையாளிகள் கூத்துத் தொடங்கும்போது 'கொழுபாடி' எவ்வாறு தொடங்கினார்களோ அதுபோல் கூத்து முடியும்போது 'மங்களம்பாடி', கும்மி அடித்து கூத்தினை முடிக்கின்றனர். இந்த மங்களம் பாடுதல் இரவு முழுவதும் கூத்து நடைபெற உதவியாக இருந்த இசைக்கருவிகள், தெய்வங்கள், மக்கள், போன்றவற்றிற்கு நன்றியினைத் தெரிவிப்பதற்காகப் பாடப்படுகிறது. மங்களம் பாடி முடித்தவுடன் ஒருவரையொருவர் கைக்கோர்த்து வட்டமாகச் சுற்றிப் பின்னர், இசைக் கருவிகளை வணங்குகின்றனர். இவ்வாறு மங்களம் பாடுதல் கூத்தின் இறுதி நிகழ்வாக அமைகின்றது.

### 5.6.2.5.14. தெருக்கூத்தும் பார்வையாளர்களும்

தெருக்கூத்தில் உடலசைவும், உதட்டசைவும் எதார்த்தமாகவும் எளிதாகவும் அமைத்து கலைஞர்கள் நடிப்பதால் சிறியவர் முதல், முதியவர் வரை அனைவரும் தெருக்கூத்தினைப் பார்வையாளர்களாக இருந்து கண்டு ரசிக்கின்றனர். இளைஞர்களைக் கவரும் கதாப்பாத்திரங்களாகப் பெண்வேடக் கலைஞர்களும், முதியவர் மற்றும் துடிப்பான ஆண்களைக் கவரும் கதாபாத்திரங்களாகத் தருமர், வீமன், தசரதன், துரியோதனன் போன்ற கதாப்பாத்திரங்களும், சிறியவர்களைக் கவரும் பாத்திரமாகக் கட்டியங்காரன் பாத்திரமும் அமைகின்றன.

சவ்வாதுமலை பழங்குடியின மக்கள் மகாபாரதம், இராமாயணக் கிளைக் கதைகளைக் கூத்தாக நடித்து மகிழ்கின்றனர். இவை வெறும் பொழுது போக்குகளாக மட்டுமின்றி நம்பிக்கையின் அடிப்படையிலும் நடித்துக்காட்டப்படுகிறது. இறந்தவர்கள் மோட்சம் அடைய வேண்டியும், மழை வேண்டியும், 'இடி' விழாமல் இருக்கவும், திருமணம் நடக்கவும் கூத்துகளை நிகழ்த்துகின்றனா். மேலும், இக்கதைகளை இன்றைய நிகழ்வோடு பொருத்தி நடிப்பதன் மூலம் அவை மக்களிடையே ஒரு விழிப்புணர்வையும் தருகின்றன.

தெருக்கூத்துக் கலையானது பார்வையாளர்களால் மட்டுமே வளர்ச்சி பெறுகிறது. பார்வையாளர்களைக் கவராத எந்த ஒரு கலையும் வெற்றியடைய முடியாது. எனவே, கூத்தின் நடிப்பும், உரையாடலும், நகைச்சுவையும் பார்வையாளர்களின் உள்ளங்களில் ஊடுருவி உதடுகளை அசைக்க வைத்துப் பார்வையாளர்களை மகிழ்விக்கிறது. மேலும், பாராட்டுகள், பரிசுகள் போன்றவைகள் எந்த அளவுக்குக் கிடைக்கிறதோ அந்த அளவுக்குக் கூத்தானது பார்வையாளா்களிடையே வெற்றியடைந்துவிட்டது என்பதை அறிந்துக் கொள்ளமுடிகிறது. பார்வையாளர்கள் சில சமயம் அரக்க குணங்களில் நடிக்கும்

கலைஞர்களைத் திட்டுவதும், போராடி வெற்றியடையும் கதாபாத்திரங்களை ஏற்று நடிக்கும் கலைஞர்களைப் புகழ்வதும் களப்பணியின் போது காணமுடிந்தது.

### 5.6.3. கைவினைக் கலைகள்

மலையாளிகள் தாம் வாழும் இயற்கை அமைப்பிற்கேற்ப தனக்குக் காட்டில் எளிதாகக் கிடைக்கும் பொருட்களைக் கொண்டு, பல கலைப் பொருட்களையும், வீட்டு உபயோகப் பொருட்களையும் செய்கின்றனர். இவர்கள் கூடை, முறம், வீசுமுறம், குதிர் போன்ற வீட்டு உபயோகப் பொருட்களையும், மணவறைப் பந்தல் அலங்காரம், மணமகள் ஒப்பனை, கோலம் போடுதல், ஓலைப் பொருட்கள் செய்தல் மற்றும் மரக்கட்டில், நாற்காலி, மணை போன்ற மரச்சாதனங்களாலான பொருட்களையும் தாங்களே செய்துகொள்கின்றனர்.

கலைநிகழ்ச்சிக்காக மேளம், மத்தாளம், உருமி முதலிய இசைக் கருவிகளையும் இவர்களே உருவாக்குகின்றனர். இதற்கு ஆட்டின் தோலை நன்கு பதப்படுத்தி போர்த்துகின்றனர். இதன் நடுப்பகுதி மரத்தால் பொருத்தப்படுகிறது. உருமியின் ஒருபகுதியினை ஊணான்பால் தேய்த்துக் காயவைக்கின்றனர். காய்ந்த பின்னர் ஒரு வகையான குச்சியை வைத்து தேய்த்துப் பதப்படுத்துகின்றனர். இவ்வாறு செய்வதால் இரு பக்கமும் வெவ்வேறு இசையை இசைக்க முடிகிறது என்கின்றனர். மேலும், வீட்டிற்கு அன்றாடம் பயன்படுத்தக்கூடிய பொருட்களையும் காடுகளில் கிடைக்கும் பொருட்களையும் வைத்தே செய்து கொள்கின்றனர்.

மலையாளிகள் எந்த விலங்கின் வேடத்தை ஏற்று நடிக்க இருக்கின்றனரோ அந்த விலங்கினைப் போன்று முகமூடியை உருவாக்குகின்றனர். கட்டியான ஒரு அட்டையை எடுத்துக்கொண்டு குறிப்பிட்ட விலங்கின் முகத்தைப் போன்று வெட்டியெடுத்து, அதில் கரியைக்கொண்டோ அல்லது சுண்ணாம்பைக்கொண்டோ கண்ணும், மூக்கும், வாயும் வரைகின்றனர். முகமூடியை உள்பாகத்தில் வளைத்து வேடமிடுபவரின் முகத்தோடு சேர்த்து வைத்துக் கட்டுகின்றனர்.

## 5.7. புழங்குப் பொருட்கள்

‘பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை’ என்பார் பொய்யா மொழிப் புலவர். இக்கூற்று ‘பணம்’ என்ற ஒன்றை மட்டும் சுட்டுவதாக அமையவில்லை. மனிதனைச் சுற்றி பலவகையான பொருட்கள் இருக்கின்றன, மனிதன் அதனைச் சார்ந்து வாழ்ந்து கொண்டிருக்கின்றான். மனித உணர்வுகள் அவற்றில் கலந்து இருக்கின்றன என்று கூடச் சொல்லலாம். அந்த அளவுக்கு நம்முடைய பண்பாட்டை வெளிக்காட்டும் பொருட்களாகப் புழங்குப் பொருட்கள் இருந்து வருகின்றன.

"புழங்குப் பொருட்கள் ஒரு சமூகப் பண்பாட்டுத் தளங்களில் ஒன்றாக இருக்கின்றது. 'புழங்குப்பொருட்கள்' அமைப்பாலும் பயன்படுத்தும் விதத்தாலும் இனத்திற்கு இனமும், மதத்திற்கு மதம் வேறுபட்டு இருந்த போதிலும் 'பண்பாடு' எனும் மையப் பொருளைக் குறிப்பதாக அமைகின்றது"[37]. பொருளுக்கும் பண்பாட்டிற்கும் மிக நெருங்கிய தொடர்பு உண்டு. 'பொருளும் பண்பாடும் நாணயத்தின் இரு பக்கங்கள் போன்றவை. மிகக் குறைந்த பட்ச வரையறையாகச் சொன்னால், பண்பாட்டின் கண்ணாடி புழங்குப் பொருட்கள்' ஆகும்.

பண்டைய மக்கள் தாம் வாழும் சூழலுக்கு ஏற்ப கிடைக்கும் பொருட்களைக் கொண்டு அறிவார்ந்த நிலையில் அழகியல் தன்மையோடு பலவகை புழங்குப் பொருட்களை உருவாக்கினர். அவைகள் இன்றைய நவீன உலகில் பல்வேறு பரிமாணங்களில் வளர்ச்சி பெற்றிருப்பினும் பயன்பாட்டு அளவில் ஒத்த தன்மை உடையதாகவே காணப்படுகின்றது. எனினும் இத்தகைய புழங்குப் பொருட்கள் பலவும் இன்று பழங்குடி மக்களின் பண்பாட்டில் அவர்களின் வாழ்வோடு பிரிக்க முடியாத ஒரு கூறாகக் காணப்படுகிறது. நவீன உலகில் பயன்படுத்தும் புழங்குப் பொருட்கள் உடல் நலத்திற்குத் தீங்கு விளைவிக்கக் கூடியதாகும். நவினவகையான புழங்குப் பொருட்களே இன்று உலகம் முழுவதும் புழங்கப்பட்டு வருகின்றன.

நாளுக்கு நாள் வளர்ந்து வரும் அறிவியல் முன்னேற்றத்தால் பல புதிய கண்டுபிடிப்புகள் மனித சமுதாயம் மேம்பட முக்கியப் பங்கினை ஆற்றிவரும் வேளையில் அவை ஏற்படுத்தும் எதிர் விளைவுகளும் அபாயகரமானதாகவே உள்ளன. மிக உயர்ந்த முன்னேறிய தொழில் நுட்ப நாகரிகம் நிறைந்துள்ள இந்தியாவில் மிகவும் பின்தங்கிய வறுமையான வளர்ச்சியற்ற பழங்குடியினரும் வாழ்ந்து வருகின்றனர். இவர்கள் இயற்கையோடு இயைந்த வாழ்வினை மேற்கொண்டு வருபவர்கள். இயற்கையில் கிடைக்கும் பொருட்களைக் கொண்டு தம்முடைய மரபு அறிவுக்கேற்ப வடிவமைத்து பயன்படுத்தி வருகின்றனர். இவற்றுள் மலையாளி இனப்பழங்குடி மக்களும் அடங்குவர்.

மலையாளி இனப் பழங்குடி மக்கள் தங்களுடைய மரபு அறிவுக்கேற்ப உருவாக்கிப் பயன்படுத்தி வரும் புழங்குப் பொருட்களை நான்கு வகையாகப் பகுக்கலாம். அவை,

1. இரும்பாலான புழங்குப் பொருட்கள்
2. மரத்தாலான புழங்குப் பொருட்கள்
3. மண்ணாலான புழங்குப் பொருட்கள்
4. பிற புழங்குப் பொருட்கள்

### 5.7.1. இரும்பாலான புழங்குப் பொருட்கள்

இரும்பாலான புழங்குப் பொருட்களாக மண்வெட்டி, களைக்கொட்டு, அரிவாள், கத்தி, நறுக்கரிவாள், கோடாரி, மரக்கால், கடப்பாரை, உளி, அம்பு போன்றவை அமைகின்றன.

#### 5.7.1.1. மண்வெட்டி

'மம்முட்டி' என்று நாட்டுப்புற வழக்கிலும், மலையாளிகளாலும் அழைக்கப்படும் இந்தக் கருவி இரும்புத் தகட்டால் ஆனது. இவை வரப்பில் உள்ள புற்களை வெட்டுவதற்கும், செதுக்குவதற்கும் ஏற்ற நிலையில் அமைக்கப்பட்டுள்ளன. மரத்தாலான கைப்பிடியைக் கொண்டதாக இருக்கின்றது. இது பெரும்பாலும் ஆண்களால் உபயோகப்படுத்தப்படுகின்றன. இக்கருவியின் துணைகொண்டு மலையாளிகள் தங்களுடைய புனங்காடுகளை (விவசாய நிலங்கள்), கொத்தி மண்ணைக் கிளறிப் பக்குவப்படுத்துகின்றனர். தினை, கொத்துசாமை, சோளம் போன்றவற்றைப் பயிரிடுவதற்கு இந்த நிலத்தைப் பயன்படுத்துகின்றனர். மேலும் விவசாயக் கூலி வேலைகளுக்கு எடுத்துச் செல்வது, பயிர்களுக்கு நீர்ப் பாய்ச்சுகின்ற பொழுது மடை திறப்பது, அடைப்பது, வாய்க்கால் பிடிப்பது, ஏழி போடுவது போன்ற பலவிதப் பணிகளுக்கும் பயன்படுத்துகின்றனர்.

#### 5.7.1.2. களைக்கொட்டு

வேளாண்மைப் பயிர்களுக்கு நடுவிலிருக்கும் களைகளைக் கொத்தி எடுப்பதற்குப் பயன்படுத்துவதால் 'களைக்கொட்டு' (கொத்து) என்று பெயரிட்டுள்ளனர். இது மண்வெட்டியின் அமைப்பைப் போன்று சிறியதாகக் காணப்படும். புனல் காடுகளில் களை எடுப்பதற்கும், ஏறு உழுவ முடியாத கரடுமுரடான கற்களுக்கிடையில் உள்ள புற்களைக் கொத்தி எடுப்பதற்கும், மலையாளிகள் களைக்கொட்டைப் பயன்படுத்துகின்றனர். இவை பெரும்பாலும் பெண்கள் பயன்படுத்தும் கருவியாகும்.

#### 5.7.1.3. வெட்டரிவாள்

மலையாளிகள் இதனைக் 'கொடுவாள்' என்று அழைக்கின்றனர். இ∴து அரை வட்ட அமைப்பில் உருவாக்கப்பட்டு, மரக் கைப்பிடியைக் கொண்டதாக இருக்கின்றது. ஒரு நுனி கூர்மையாகவும் மற்றொரு நுனி மரக் கைப்பிடி பொருத்தப்பட்டதகவும் இருக்கும். இதனைத் 'தீட்டு மனை'யில் நன்கு கூர்மையாகத் தீட்டி பதத்தோடு வைத்திருப்பர். இந்தக் கருவி நிலங்களில் உள்ள செடி கொடிகளை வெட்டுவதற்கும், விறகு வெட்டுவதற்கும், மரங்களை வெட்டுவதற்கும், காடுகளில் பாதைகளை அமைத்துக் கொள்வதற்கும் பயன்படுத்தப் படுகிறது. இந்தக் கருவி பதம் குறைந்தால் எளிதாக உடையும் தன்மைக்யுடைய ஒரு

கல்லை எடுத்து, உடைத்துப் பொடியாக்கி அதில் தீட்டி பதமாக வைத்துக்கொள்கின்றனர். சில நேரங்களில் பாறைகளின் மேல் தீட்டியும் பதமாக வைத்துக்கொள்வதும் உண்டு.

வெட்டரிவாளைப் பாறைகளின் மீது வேகமாக உரசினால் தீப்பொறி எழுவதும் உண்டு, அந்தச் சமயங்களில் இலவம் பஞ்சினை அருகில் வைத்தால் 'தீ' எளிதாகப் பற்றிக் கொள்ளும். காட்டுப் பகுதியில் தீப்பெட்டி இல்லாத சமயங்களில் மலையாளிகள் இவ்வாறு தீயை உண்டாக்கி கிழங்குகளைச் சுட்டுத் தின்பது வழக்கம். வெங்கச்சங்கல் என்ற ஒரு வகைக் கல் இரண்டை எடுத்து ஒன்றோடு ஒன்று உரசினால் தீப்பொறி எழும். ஆதனைப் பயன்படுத்திக் கொள்வதுமுண்டு.

### 5.7.1.4. கத்தி

வெட்டரிவாள் தடிமனாக இருக்கும். கத்தி மெல்லியதாக இருக்கும். இந்தக் கருவியை மலையாளிகள், காட்டிற்குச் செல்லும் போதும் வேளாண்மையில் ஈடுபடும்போதும் இடுப்பில் செருகிக் கொண்டு செல்வர். மரம் வெட்டுதல், வீடுகட்டுதல், வேலிகட்டுதல் போன்ற அனைத்துத் தொழிலுக்கும் கத்தி முக்கியப் பங்கு வகிக்கின்றது. கத்தியானது பலரிடம் பல வடிவங்களில் காணப்படுகிறது. பழங்குடிகள் பெரும்பாலும் அரிவாள் வடிவிலான மரத்தால் 'புடி' போட்டுட கத்தியைப் பயன்படுத்துகின்றனர். புடி செய்வதற்குப் பெரும்பாலும் 'சிறுவாரை' மூங்கில் பயன்படுத்துகின்றனர்.

### 5.7.1.5. கருக்கரிவாள்

கருக்கரிவாள் 'கூன்' பிறை வடிவில் அமைந்து இருக்கும். இரும்பாலான இந்தக் கருவிக்குச் 'சிறுவாரை' மூங்கிலின் கைப்பிடியைப் போட்டு பயன்படுத்துகின்றனர். இதன் வளைந்த உள்பகுதி பனங்கருக்கைப் போல் சொரசொரவென்று பதம் கொண்டதாக அமைக்கப்பட்டிருக்கும். மலையாளிகள் இதன் உதவி கொண்டு ராகி, சோளம், நெல்,கம்பு முதலிய தானியங்களை அறுவடை செய்கின்றனர். மேலும் வீட்டின் கூரை வேய்வதற்குப் பயன்படும் பொதைப்புல், ஊமைப்புல் போன்றவற்றை அறுப்பதற்கும் கருக்கரிவாளைப் பயன்படுத்துகின்றனர்.

### 5.7.1.6. கோடரி

மலையாளிகள் காடுகளில் விறகுவெட்டுவதற்கு கோடரி மிக முக்கியமான கருவியாகப் பயன்படுகிறது. கோடரியானது வெட்டுவதற்கு ஏற்ற வகையில் ஒரு சாண் அளவு நீளமுடைய இரும்புப் பட்டையைக்கொண்டு அமைந்திருக்கும். ஒருமுனை வெட்டும் வகையிலும் மறுமுனை கைப்பிடி போடும் வகையிலும் உருவாக்கப்பட்டிருக்கும். இந்தக்

கோடரியை சமவெளிப் பகுதிகளில் இருக்கும் இரும்புக் கடைகளில் இருந்து வாங்கி வந்து அவற்றிற்கு இவர்களே புடிபோட்டுப் பயன்படுத்துகின்றனர். கோடரி மரம் வெட்டுவதற்கும், விறகுப் பிளப்பதற்கும் பயன்படுத்துகின்றனர். இந்தக் கோடரியை அனைத்து மலையாளி இனக் குடும்பங்களும் வைத்திருக்கின்றனர்.

### 5.7.1.7. மரக்கால்

'மரக்கால்' என்பது இரும்பால் உருவாக்கப்பட்ட பொருளாகும். இதனைக் கடைகளில் விலை கொடுத்து வாங்கி வருகிறார்கள். இவை தானியங்களை அளப்பதற்குப் பயன்படுகிறது. மலையாளிகள் ஒவ்வொரு ஆண்டும் காடுகளில் ரத்தத்தைச் சிந்தி உழைக்கக் கூடியவர்கள். அவ்வாறு உழைத்து அறுவடை செய்த தானியங்களை மரக்காலால் அளந்து, குதிர், சாக்குப்பை போன்றவற்றில் போட்டுப் பாதுகாத்து வைத்துக் கொள்கின்றனர். தங்களுடைய தேவைக்கு மிஞ்சியதை விற்றுவிடுவதும் உண்டு. சாமை, நெல், சோளம், கம்பு, தினை போன்றவற்றை அளந்து வைத்துக்கொள்வதற்கும், கொடுப்பதற்கும் மரக்கால் பயன்படுகிறது.

### 5.7.1.8. கடப்பாரை

கடப்பாரை என்பது தடித்த பருமன் கொண்ட நீண்ட இரும்பாலான கருவியாகும். இதன் ஒரு முனை கூர்மையாகவும், மறுமுனைச் சப்பையாக நசுக்கப்பட்டு இருக்கும். கற்கள், சிறு பாறைகளைத் தோண்டி எடுப்பதற்கும், பெரிய கற்களை நகர்த்துவதற்கும், குழி தோண்டுவதற்கும் கடப்பாரை பயன்படுகிறது. மலையாளிகள் காடுகளில் மூலிகைகள், கிழங்குகள் போன்றவற்றைத் தோண்டி எடுப்பதற்கும் கடப்பாரையைப் பயன்படுத்துகின்றனர். இவ்வாறு பல்வேறு வகையில் பயன்பெற உருவாக்கப்பட்ட இந்தக் கருவியை அனைத்து குடும்பங்களும் வைத்திருக்கின்றன.

### 5.7.1.9. உளி

உளி என்பது இரும்பாலான கருவியாகும். இதன் ஒரு புறம் கூர்மையாகவும், மறுபுறம் சிறிது பட்டையாகவும் இருக்கும். கூர்மையான பகுதியில் மரத்தாலான 'கைப்பிடி' போட்டுப் பயன்படுத்துகின்றனர். இந்த உளியானது கலப்பை, மோழி, நுகர்தடி, போன்ற பொருட்களைத் துளையிடுவதற்குப் பயன்படுகிறது. மேலும், ஒரு மரத்தாலானப் பொருளை நன்கு வடிவமைத்துப் பளப்பளப்பாகவும், மென்மையாகவும் உருவாக்க பயன்படுகிறது. இரண்டு, மூன்று மரங்களை வெட்டி, அதில் துளையிட்டு ஒன்றாக இணைக்கவும் 'உளி' பயன்படுகிறது.

#### 5.7.1.10. அம்பு

இரும்பால் உருவாக்கப்பட்ட அம்பு கைப்பிடிக்கும் நுனிப்பகுதி சற்றுக் கூர்மையாகவும், அடிப்பகுதிப் பட்டையாகவும் இருக்கும். இது உணவுப் பண்டங்களான ரொட்டி, அடை, அதிரசம், தோசை போன்றவற்றைத் திருப்பிப் போட்டு எடுப்பதற்குப் பயன்படுகிறது. நுனிப்பகுதி குழிப்பனியாரம் எடுப்பதற்கும், மக்காச்சோளக் கதிரைக் கூர்மையான பகுதியில் குத்தி நெருப்பில் சுட்டு உண்பதற்கும் பயன்படுத்துகின்றனர்.

### 5.7.2. மரத்தாலானப் புழங்குப் பொருட்கள்

மலையாளி இனப் பண்பாட்டில் மிகுதியாகப் புழங்கக் கூடியவை மரத்தாலான புழங்குப் பொருட்கள் ஆகும். மனை, அகப்பை, மொழவை, மத்து, கப்பு, மொரகொண்டி, உரல், உலக்கை, பரண், விளக்கு போன்ற மரப்புழங்குப் பொருட்களை பயன்படுத்தி வருகின்றனர். மேலும், வேளாண்மைத் தொழிலுக்குப் பயன்படும் கருவிகளான கலப்பை, நுகத்தடி, மோழி, மொலையாணிக்குச்சி, கடக்குச்சி, பரம்பு போன்ற மரத்தாலான பொருட்களையும் மலையாளிகள் பயன்படுத்தி வருகின்றனர்.

#### 5.7.2.1. மனை

மலையாளிகள் பகல் முழுவதும் காடுகளில் உழைத்து இரவில் தலைக்கு வைத்து உறங்க மனையைப் பயன்படுத்துகின்றனர். இ்.து இரண்டடி நீளமும் ஓர் அடி அகலமும் உடையதாக இருக்கிறது. இவற்றை மரங்களில் இருந்து உருவாக்கிப் பயன்படுத்தி வருகின்றனர். இவ்வாறு உருவாக்கப்படும் மனைகள் ஐந்து, அல்லது பத்து ஆண்டுகள் வரை பயன்படுத்தும் பொருளாக இருந்து வருகிறது. இதனைக் குளிர் காயும்போது கீழேபோட்டு உட்காருவதற்கும் பயன்படுத்துகின்றனர்.

#### 5.7.2.2. அகப்பை

அகப்பை என்பது பாத்திரத்தில் இருக்கும் கூழ், மோர், கஞ்சி போன்றவற்றை எடுப்பதற்குப் பயன்படும் பொருளாகும். இதனைத் தேங்காயின் உடைந்த ஒரு பகுதியில் பருக்கைகளை எடுத்து அதனை நார் இல்லாமல் பளப்பளப்பாக தூய்மை செய்கின்றனர். அத்துடன் இரண்டடி உடைய ஒரு கம்பின் ஒரு பகுதி கூர்மையாக்கி அதன் அடிப்பகுதியில் பொருத்தி பயன்படுத்துகின்றனர். இவை சாம்பார், குழம்புப் போன்றவற்றை எடுப்பதற்கு பயன்படுத்திக் கொள்கின்றனர். இவை தொல் பழங்காலப் புழங்குப் பொருள் என்று கூறுவதற்கும் இடமுண்டு

#### 5.7.2.3. மொழவை

மொழவை என்பதும் மேற்சொல்லப்பட்ட அமைப்பிலே உருவாக்குகின்றனர். இது பானைகளில் உள்ள நீரினை எடுக்கப் பயன்படும் பொருளாகும். இது அகப்பையை விடச் சற்றுப் பெரிதாகக் காணப்படும். ஒரு தேங்காயின் முக்கால் பகுதியை உடைத்து, உருண்டையான இரண்டடிக் கம்பை எடுத்து அதன் நுனிப்பகுதியில் பொருத்திப் பயன்படுத்துகின்றனர். இதற்கு இவர்களிடையே ஒரு விடுகதை உள்ளது.

"ஆளு இல்லாத கிணற்றுல

மயில் இறங்கும் அது என்ன?"

விடை: மொழவை என்பதாகும்.

#### 5.7.2.4. மத்து

'மத்து' என்பது பருப்பு, கீரை போன்றவற்றைக் கடைந்து குழம்பு செய்வதற்கு பயன்படும் கருவியாகும். இதன் தலைப்பகுதி உருண்டையாகவும், வால் பகுதி ஒரு முழம் அளவு நீளமுள்ள கைப்பிடிப் பகுதியை உடையதாகவும் இருக்கிறது. 'மொட்டைப் பையனுக்கு முழம் நீட்டு வால்' (விடை: மத்து) என்பது இவர்களிடையே வழங்கும் விடுகதை ஆகும். மலையாளிகளின் வீடுகளில் மட்டுமல்லாமல் இன்று அனைவரின் இல்லங்களிலும் இந்தப் பொருள் காணப்படுகிறது.

#### 5.7.2.5. கிட்டிக்கப்

மலையாளிகள் தங்கள் காடுகளில் கிடைக்கும் மரக்கிளைகளில் 'வி' வடிவ அமைப்புக் கொண்ட விரிகிழைக் குச்சி ஒன்றை எடுத்து அதன் பட்டையைச் நீக்கி நீரில் போட்டு ஊறவைக்கின்றனர். நான்கு ஐந்து நாட்களுக்குப் பிறகு அதனை எடுத்து வெயிலில் முட் புதற்களைக் கையில் படாதவாறு அழுத்திக் கொண்டு வெட்டப் பயன்படுத்துகின்றனா். மேலும், வெட்டிய முட்புதற்களைக் கைப்படாதவாறு அதன் கழுத்துப் பகுதியில் இடுக்கிக் தூக்கிச் செல்லவும் பயன்படுத்தப்படுகிறது. பாம்பு போன்ற கொடிய விலங்குகளிடமிருந்து காத்துக்கொள்ளவும் இந்தக் கருவி பயன்படுகிறது.

#### 5.7.2.6. மொரம் கொண்டி

மலையாளிகள் ஐந்தடி நீளமுள்ள ஒரு மூங்கில் நுனியில் ஒரு கணுவை விட்டு வெட்டி அதனை நீரில் போட்டு நான்கு ஐந்து நாட்களுக்கு ஊறவைக்கின்றனர். பின்னா் அதனை எடுத்து வெயிலில் காயவைத்துப் புனை (தாம்பு) கட்டி சாமை, நெல் அடிக்கும்

போது அதன் தாள்களை வெளியே இழுத்து வருவதற்கும், புற்களை உலற்றுவதற்கும், சேர்ப்பதற்கும் பயன்படுத்தி வருகின்றனர். இந்தக் கருவி வேலையை எளிதாக எந்த சிரமமுமின்றி செய்யப் பயன்படுத்தப்படுகிறது.

### 5.7.2.7. உரல்

உரல்கள் பல வகைப்படும். ஆனல் கல்லுரல், மர உரல், பாறை உரல் என்ற மூவகை உரல்கள் மலையாளிகளிடையே புழக்கத்தில் உள்ளன. இதன் வடிவமானது உடுக்கையைப் போன்று இருக்கும். உரலின் மேற்பகுதியில் இரண்டு அல்லது மூன்று லிட்டர் கொள்ளவு உள்ள சற்று அகலமான துவாரம் இருக்கும். அந்தத் துவாரத்தில் தானியங்களைச் கொட்டி உலக்கையால் குத்தி அரிசியாக்குவது இவர்களது வழக்கமாகும். இதனை மழைக் காலங்களில் வீட்டிற்குள் வைத்தும் பயன்படுத்துவா்.

மரத்திலேயே 'குத்தாணி' என்று அழைக்கப்படுகின்ற மற்றொரு வகை உரலும் இவர்கள் பயன்படுத்துவது உண்டு. வாய் அகன்றும், சற்று ஆழமாகவும் காணப்படுகிறது. இதனை மலையாளிகள் அதிக நெல் குத்துவதற்கும், இரண்டு, மூன்று பேர் சேர்ந்து நெல் குத்துவதற்கும் பயன்படுத்துகின்றனர். ஆனால் இன்று இவை ஏதோ ஓர் காட்சிப் பொருள் போல ஒன்றிரண்டு வீடுகளில் மட்டுமே காணமுடிகின்றது.

### 5.7.2.8. உலக்கை

நீளமான மரக்கம்பைக்கொண்டு உருவாக்கப்பட்ட உரல், கருங்காலி, தேக்கு, ஆசாமரம், பொருசு போன்ற மரங்களிலிருந்து உருவாக்கப்பட்டு நான்கு முதல் ஐந்து அடிவரையில் காணப்படும். இதன் நுனிப்பகுதி கூர்மையாகவும், அடிப்பகுதி வட்டமாகவும் இருக்கும். அதில் இரும்புப் பூண் அமைத்துப் பயன்படுத்துகின்றனர். நன்கு முற்றிய மரங்களைக் கொண்டு உலக்கையைத் தயாரிக்கின்றனர். உரலில் தானியங்களைக் கொட்டி உலக்கையால் குத்தி அரிசியாக்க இவை பயன்படுகிறது. மேலும், திருமணச் சடங்குகளிலும் உலக்கைக்கு மிக முக்கியப் பங்குண்டு.

### 5.7.2.9. பரண்

மரப்பலகையைக் கொண்டும், மூங்கில் தப்பைகளைக் கொண்டும் வீட்டின் அடுப்பிற்குமேல் சிறு பரண் அமைத்துக்கொள்கின்றனர். அதன்மீது பாத்திரங்கள், தானியங்கள் போன்ற பொருட்கள் எல்லாவற்றையும் அடுக்கி வைத்துக்கொள்கின்றனர். பத்து முதல் பதினைந்து அடிவரை பல கம்புகளை ஒன்று சேர்த்துக்கட்டி பரண் அமைத்துள்ளனர். மலையாளிகளின் வீடுகள் பரண் இல்லாமல் இல்லை என்று கூறும்

அளவுக்கு இவர்களுடைய வாழ்வியலோடு இந்தப் பரண் ஒன்றி விட்டதைப் பார்க்க முடிகிறது.

### 5.7.2.10. விளக்கு

தற்பொழுது பல பகுதிகளிலும் மின் விளக்குகள் வசதி ஏற்பட்டு விட்டது. மின்விளக்குகளைப் பயன்படுத்த முடியாத காலக்கட்டங்களில் விளக்கு 'சிமிழில்' மண்ணெண்ணெய் ஊற்றி சிமிழின் மூடியில் உள்ள சிறுதுவாரத்தில் சிறு துணியிலான திரியிட்டு, அதனை விளக்காகப் பயன்படுத்தியுள்ளனர். அதற்கு முன்பு அரிவாளின் நுனிப் பகுதியில் சிறு துணியைச் சுற்றி எண்ணெயில் ஊறவைத்து அதைத் தீயிட்டுப் பந்தமாகப் பயன்படுத்தியும் வந்துள்ளனர். மேலும் காடுகளில் கிடைக்கும் 'தப்பைகள்' (மூங்கில் கழிவுப் பொருள்) சிலவற்றை ஒன்று சேர்த்து கட்டி, அதன் ஒரு பகுதியில் தீயிட்டும் பயன்படுத்தி வந்துள்ளனர். இதனை மலையாளிகள் 'சுளுந்தை' என்று கூறுகின்றனர்.

### 5.7.2.11.0. மூங்கிலால் உருவாக்கப்பட்ட புழங்குப் பொருட்கள்

மலையாளிகள் காடுகளில் கிடைக்கக்கூடிய முங்கில்களைக் கொண்டு பலவகையான புழங்குப் பொருட்களை உருவாக்கிப் பயன்படுத்தி வருகின்றனர்.

### 5.7.2.11.1. ஏணி

மலையாளிகளின் வாழ்வியலில் முக்கியமான ஒன்றாக ஏணியைக் கருதுகின்றனர். பரண்களின் மேலுள்ள பொருட்களை எடுப்பதற்கும், பலா, மாங்காய், தென்னை போன்ற மரங்களில் ஏறுவதற்கும், அவரைக்காய், பரங்கிக்காய், சுரக்காய் போன்றவற்றைப் பந்தல்மேல் ஏறிப் பறிப்பதற்கும் உயரமான பகுதிகளில் ஏறவும், வைக்கோல் வேயவும் ஏணி இவர்களிடத்தில் முக்கியப் பயன்பாட்டுப் பொருளாக இருந்து வருகிறது. இதனை மூங்கிலைக் கொண்டு செய்கின்றனர். மூங்கில் வளைவு இல்லாமல் நேராக இருக்கும். இதனைப் பத்து அடி உயரத்திற்குக் கணுக்களிடையே நேராகச் சிறு துளையிட்டு அதில் பிளக்கப்பட்ட மூங்கிலை எதிர் எதிரே பொருத்தி, அவற்றை இறுகக் கயிற்றினால் கட்டி உருவாக்குகின்றனர். சில இடங்களில் மூங்கிலைப் பிளக்காமல் கணுக்களை விட்டு அப்படியே பயன்படுத்துவதும் நடைமுறையில் உண்டு.

### 5.7.2.11.2. கூடை

மலையாளிகளில் சிலர் காடுகளில் கிடைக்கும் மூங்கிலை வெட்டி அதனைச் சிறுசிறு ஈர்க்குகளால் பிளந்து கூடையைப் பின்னுகின்றனர். பெரும்பாலோர் சமவெளிப் பகுதிக்குச் சென்று விலைக்கு வாங்கிக் கொள்கின்றனர். தானியங்களைக் கூடையில்

அள்ளி எடுத்துச் செல்வதற்கும், பிறப் பொருட்களை எடுத்துச் செல்வதற்கும் இதனைப் பயன்படுத்துகின்றனர்.

### 5.7.2.11.3. முறம்

முறம் 'ப' வடிவில் அமையும் புழங்குப் பொருளாகும். தானியங்களில் உள்ள பதற்களை நீக்குவதற்கும், புடைப்பதற்கும், அள்ளுவதற்கும் முறம் பயன்படுகிறது. தானியங்களில் உள்ள கற்களை எடுக்கவும், தானியங்களைத் தரம்பிரித்து எடுக்கவும் முறம் மலையாளிகளிடையே மிகுதியாகப் பயன்படுத்தப்படுகிறது. இவை மூங்கிலிருந்து எடுக்கப்படும் தப்பையைக் கொண்டு உருவாக்கப்படுகிறது.

### 5.7.2.11.4. வீசு முறம்

மூங்கிலிலிருந்து பிரித்து எடுக்கப்படும் சிறு சிறு ஈர்க்குகளைக் கொண்டு வீசு முறம் தயாரிக்கப்படுகிறது. இது பெரும்பாலும் 'ஏ' வடிவில் இரண்டடி முதல் மூன்றடி வரை நீளமுள்ளதாக இருக்கும். நெல், சாமை, கேழ்வரகு, கம்பு போன்ற தானியங்களைப் 'பதிர்' இல்லாமலும் 'பொட்டு' இல்லாமலும் தூற்றுவதற்குப் பயன்படுத்துகின்றனர். அறுவடைக் காலங்களில் மட்டுமே இதனுடைய தேவை அதிகமாக இருக்கிறது. மற்ற நாட்களில் கூரையில் செருகிப் பாதுகாப்பாக வைத்துக் கொள்கின்றனர்.

### 5.7.2.11.5. சிப்பி

'சிப்பி' என்பது சோறு வடிக்கப் பயன்படுத்தப்படும் புழங்குப்பொருள் ஆகும். இ∴து ஓர் அடி அளவு வட்டமாகக் காணப்படும். இதனை மூங்கிலிலிருந்து எடுக்கப்படும் சிறு சிறு ஈர்க்குகளைக் கொண்டு தயாரிக்கின்றனர். இவை மலையாளிகளின் குடியிருப்புகளில் அனைவராலும் பயன்படுத்தும் புழங்குப் பொருளாக இருந்து வருகிறது.

### 5.7.2.11.6. மக்கரி

மலையாளிகள் தத்தம் நிலங்களில் அறுவடைக்காலங்களில் விளைகிற மிளகாய், சோளம், கம்பு, எள் போன்றவற்றைச் சேகரித்து குவித்து வைத்திருப்பர். அவற்றை அள்ளிக் கொண்டுபோய் வீடுகளில் சேர்க்க 'மக்கரி' பயன்படுகிறது. விவசாயம் தொடர்பான தேவைகளுக்கு மட்டுமன்றி பிறவற்றிற்கும் 'மக்கரி' உதவுகிறது. விதைப்புக் காலங்களில் கோழிகளை அடைத்து வைக்கவும் இது பயன்படுகிறது. இது மூங்கிலின் பட்டைகளைக் கொண்டு உருவாக்கப்படுகிறது. இதனுடைய அடி பன்னிரண்டு முதல் பதினைந்து வரை வைத்து அடிச் சுற்றப்பட்டிருக்கும். இக்கட்டு நான்கு சுற்றாக அமைந்துள்ளது. கால்

பட்டையில் இருந்து ஒவ்வொரு பட்டையின் இடுக்கிலிருந்து ஈர்க்குகளை வைத்து பெண்களின் சடைப்பின்னலைப் போல் சுற்றிப் பின்னி வருவர். இ∴து அடிச்சுற்றிலிருந்து மேல்நோக்கி விரிக்கப்பட்டு உருவாக்கப்படுகிறது. ‘மக்கரியின்’ வாய்ப்பகுதியில் ஏழு சுற்றாகக் கட்டு வைத்து சுற்றப்பட்டிருக்கும் புழங்குப் பொருளாகும்.

### 5.7.2.11.7. ஜாடு (கூடை)

‘ஜாடு’ என்பது கூடையை விடப் பெரிதாகவும், வாயப்பகுதி சற்று விரிந்த நிலையிலும் காணப்படும். இ∴து பன்னிரண்டு அடி உயரமுள்ள மூன்று மூங்கில்களைக் கொண்டு தயாரிக்கப்படுகின்றது. ஒரு கூடையைச் செய்ய மூன்று நாட்கள் வரை ஆகும். மூங்கிலைப் பிளந்து சிறுசிறு பட்டையாகக் கிளித்து அடிப்பகுதியில் பண்னிரண்டு ஈர்க்குகளை வைத்துப் பின்னி ‘ஜாடு’ செய்கின்றனர். இது அதிகமான தானியங்களைக் கொட்டி வைக்கவும், எடுத்துச் செல்லவும் பயன்படுகிறது. இப்புழங்குப் பொருள் மலையாளிகளிடையே இன்று காண்பது அரிதாகவே இருக்கிறது.

### 5.7.2.11.8. பட்டி (தடுக்கு)

மலையாளிகள் தங்கள் நிலங்களில் மாடு, ஆடுகளை அடைத்து வைக்கக் கட்டப்படுவது பட்டியாகும். காட்டு விலங்குகளிடமிருந்து ஆடு, மாடுகளைப் பாதுகாப்பதற்கு இந்தப் பட்டி அமைப்புமுறையை மலையாளிகள் பயன்படுத்துகின்றனர். இதனை மூங்கிலைக் கொண்டு ஒன்பது முதல் பதினொரு கால்கள் ஓர் அடி இடைவெளி விட்டு நிறுத்தி அவற்றில் ‘தப்பைகளைக்’ கொண்டு பின்னுகின்றனர். மூங்கிலிலிருந்து ‘தப்பைகளைப்’ பிளந்துவிட்டால் இதனைப் பின்னுவது மிகவும் எளிதாகும். இதன் உயரம் ஐந்தடி வரை இருக்கும். இதனையே ‘தடுக்கில்’ என்று மலையாளிகள் கூறுகின்றனர். பின்னப்பட்ட ‘தடுக்கிலை’ பதினைந்து முதல் இருபது வரை வைத்துப் பட்டி அமைக்கின்றனர். இவைகள் கீழே விழாமல் இருப்பதற்கு இரண்டு ‘தடுக்கில்’ இணையும் இடத்தில் ஒரு கம்பை நட்டு அதில் தடுக்கிலை வளையம் கொண்டு மாட்டுகின்றனர். தடுக்கில் விழாமல் இருப்பதற்காக நடுவதைக் ‘கூட்டம்’ என்று மலையாளிகள் கூறுகின்றனர். மேலும், வீட்டுத் திண்ணை மற்றும் வீட்டிற்குத் தடுப்பு அமைக்கவும் இத்தகைய முறையைப் பயன்படுத்துகின்றனர்.

### 5.7.3. மண்ணாலான புழங்குப் பொருட்கள்

மலையாளிகள் பயன்படுத்தும் பொருட்களில் மண்ணால் செய்யப்பட்ட புழங்கும் பொருட்களும் அடங்கும். பூமியில் இருந்து வெட்டி எடுத்து அதனை நன்கு பதப்படுத்தித்

தன்னுடைய தேவைக்கு ஏற்ப வடிவமைத்துக் கொள்கின்றனர். அவ்வாறு வடிவமைக்கப்பட்ட பொருட்களாக அடுப்பு, சட்டி, பானை, மேடை, திண்ணை, சுவர் போன்றவை ஆகும்.

### 5.7.3.1. அடுப்பு

மலையாளிகள் தங்கள் வீடுகளில் சமைப்பதற்கென்று பெட்டி போன்ற நீள்சதுர வடிவில் மண்ணாலான இரு அடுப்புகளை உருவாக்கிப் பயன்படுத்தி வருகின்றனர். ஒரு சிலர் வட்டவடிவில் அமைத்து, அதில் பாத்திரம் வைப்பதற்கு என்று மூன்று மூலைகளில் சிறு மேடு அமைத்தும் பயன்படுத்தி வருகின்றனர். அதில் விறகு வைப்பதற்கு மட்டும் வழி இருக்கும். மண்ணால் உருவாக்கப்பட்ட அடுப்பில் விறகைக் கொண்டு சமைத்து உண்டால் உணவும் சுவையாக இருக்கும், ஆயுள் கூடும் என்று மலையாளிகள் நம்புகின்றனர்.

### 5.7.3.2. சட்டி

மலையாளிகள் பண்டைய காலங்களில் பயன்படுத்திய மண்சட்டியை இன்றும் சிலர் பயன்படுத்தி வருகின்றனர். இஃது இரண்டு கிலோ அரிசி வடிக்கக் கூடிய அளவுக்கு இருக்கும். இதனைச் சமவெளிப் பகுதிகளில் இருக்கும் குயவர்களிடமிருந்து வாங்கி கீரைகள் கடைவதற்கும் கறிக்குழம்பு, கூழ், போன்றவற்றைக் காய்ச்சுவதற்கும் பயன்படுத்தி வருகின்றனா்.

### 5.7.3.3. பானை

பானை, சட்டியை விட இரண்டு, மூன்று மடங்கு பெரிதாகும். இதுவும் குயவர்களிடமிருந்தே வாங்கி வரப்படுகிறது. மலையாளிகள் தண்ணீர் கொண்டு வரவும், தண்ணீரைச் சேமித்து வைத்துக்கொள்வதற்கும் பானையைப் பயன்படுத்துகின்றனர். மேலும் விழாக்காலங்களில் புதுப் பானையை வாங்கி பொங்கல் வைத்து வழிபடுவதும் வழக்கமாகும். காடுகளில் விளையும் பொருட்களையும் பானையில் போட்டு வைத்து பாதுகாத்துக் கொள்கின்றனா். ஆனால், இன்று பெரும்பாலானோர் பித்தளை, வெங்கலத்தால் உருவாக்கப்பட்ட பாத்திரங்களைப் பொங்கல் வைப்பதற்குப் பயன்படுத்தி வருகின்றனர்.

### 5.7.3.4. மேடை

மலையாளிகள் தங்கள் வீடுகளில் பின்பக்கச் சுவரின் உட்புறமாக அரை அடி அளவில் ஒரு சிறிய மண்மேடை அமைத்துள்ளனர். இந்த மேடையின் மீது மங்கள நாட்களில் பூக்களைப் போட்டு படையல் வைத்து வழிபடுகின்றனர். இங்குத் தங்களுடைய முன்னோர்களின் நினைவாக சாமி படங்களை வைத்து வழிபடுவது வழக்கமாகும்.

இவர்களுக்குப் பூஜை அறை என்று ஒன்றில்லை. இந்த மண்மேட்டின் மீதே படங்களை வைத்து வழிபடுகின்றனர்.

### 5.7.3.5. திண்ணை

திண்ணை என்பது பண்டைய காலம் முதல் இன்று வரை விருந்தினர்கள் வந்தால் அமரும் இடமாகவும், ஓய்வெடுக்கும் இடமாகவும் இருந்து வருகிறது. தங்கள் வீடுகளின் முற்றத்தில் தாழ்வாரம் அமைத்து ஐந்தடி நிலத்திற்கும் மூன்று அடி உயரத்திற்கும் சுவரை ஒட்டி ஒரு மண்மேட்டை உருவாக்கி இருக்கின்றனர். இதனைத் 'திண்ணை' என்று கூறுகின்றனர். இவைகளின் மீது உட்கார்ந்து கொண்டுதான் தாத்தாக்கள், பேரன்களுக்குக் கதை கூறியதாக தகவலாளிகள் குறிப்பிடுகின்றனர். மலையாளிகளின் வீடுகளில் திண்ணை இல்லாத வீடுகளே இல்லை என்றும் கூடச் சொல்லலாம், அந்த அளவுக்கு இந்தத் திண்ணை இவர்களுக்குப் பயன்படக் கூடிய ஒன்றாக இருந்து வருகின்றது.

### 5.7.3.6. தச்சுப்பு

தச்சுப்பு என்பது சட்டியை விடச் சற்றுச் சிறிதாகவும், வாய்ப்பகுதி விரிந்த நிலையிலும் இருக்கும். குயவர்களிடமிருந்து வாங்கி பயன்படுத்தும் இந்தப் புழங்குப் பொருளை, பசு வெண்ணெய், நெய் போன்றவற்றைப் போட்டு வைத்துக்கொள்ள மலையாளிகள் பயன்படுத்துகின்றனர். மேலும், புளி, மிளகாய் தூள் போன்ற பொருட்களையும் போட்டு வைத்துக்கொள்ள 'தச்சுப்பையை' மலையாளிகள் பயன்படுத்தி வருகின்றனர்.

## 5.7.4. பிற புழங்குப் பொருட்கள்

மேற்கண்டவை அல்லாமல் சில புழங்குப் பொருட்களையும் இவர்கள் பயன்படுத்தி வருவதை களப்பணியின் போது அறியமுடிந்தது.

### 5.7.4.1. கொடாப்பு

காட்டுக் கொடிகளாகிய 'காக்கனான், சீங்கை, சம்ரா' ஆகிய கொடிகளைக் கொண்டு மலையாளிகள் கொடாப்பு அமைத்து அதில் ஆட்டுக்குட்டிகள், கோழிகள் போன்றவற்றை அடைத்துவைக்கின்றனர். மேலும், பலா, புளியங்கா, மா செடிகளை விலங்குகள் மேய்ந்து விடாமல் இருப்பதற்கும் கொடாப்பு அமைக்கின்றனர். மூங்கில் மற்றும் தடிமனாகாத நொச்சிக் குச்சிகள் போன்றவற்றை பயன்படுத்தியும் கொடாப்பு அமைப்பதுண்டு.

### 5.7.4.2. சுரைக்குடுவை

மலையாளிகள் முன்பு சுரைக்காய் முற்றிய பிறகு அடிப்பகுதியில் துளையிட்டுக் காயவைத்து அதன் உள்ளிருக்கும் விதை மற்றும் சதைப்பகுதிகளை நீக்கிவிடுகின்றனர். அவ்வாறு நீக்கப்பட்ட சுரைக் குடுவை நான்கு முதல் ஐந்து லிட்டர் கொள்ளளவு கொண்ட குடம் போல் ஆகிவிடும். இதனை முதுகில் கட்டிக்கொண்டு தேனெடுக்கச் செல்கின்றனர். ஆடு, மாடுகள் மேய்க்கச் செல்லும் போதும் கூழ், கஞ்சி, மோர் போன்றவற்றைச் சுரைக்குடுவையில் ஊற்றி எடுத்துச் செல்வதும் உண்டு. இன்று தகர டின், பிளாஸ்டிக் பாட்டில் போன்றவைகள் புழக்கத்தில் உள்ளதால் அவற்றின் பயன்பாடு குறைந்து வருகிறது.

### 5.7.4.3. ஆட்டுக்கல்

மலையாளிகள் ஊற வைத்த அரிசி, உளுந்து, ராகி, சோளம், கம்பு போன்ற தானியங்களிலிருந்து மாவு அரைத்து எடுத்து இட்லி, தோசை போன்ற பலகாரங்கள் செய்வது வழக்கமாகும். ஊறிய தானியங்களை மாவாக அரைத்தெடுப்பதற்குப் பயன்படும் கல் ஆட்டுக்கல் ஆகும். இது கல்லாலான புழங்குப் பொருள். ஆரை அடி குழியுள்ள வட்டவடிவிலான அடிக்கல்லும், குழிக்குள் பொருந்தும்படியான ஆட்டுக் கல்லும் இருக்கும். இதன் கைப்பிடி ஓர் அடி நீளமுள்ள ஒரு குச்சியைக் கொண்டு உருவாக்கப்படுகிறது.

### 5.7.4.4. அம்மிக்கல்

அம்மிக்கல் குழம்பு வைப்பதற்குத் தேவையான கலவை, துவையல், பச்சை மிளகாய், போன்றவற்றை அரைத்தெடுப்பதற்குப் பயன்படுகிறது. அம்மிக்கல் நீள் சதுர வடிவிலும் அரைப்பதற்குரிய குழவிக்கல் நீள் வட்ட வடிவிலும் அமைந்திருக்கும். அம்மிக்கல் அனைத்து மலையாளிகளின் குடியிருப்பிலும் காணப்படும் ஒரு பொருளாக இருக்கிறது. மேலும், திருமணம் போன்ற சடங்குகளிலும் அம்மிக்கல் பயன்படுத்தப் படுவதால், இதனை இன்றளவும் பத்திரமாகப் பாதுகாத்து வைத்திருக்கின்றனர்.

### 5.7.4.5. அரைக்கல்

அரைக்கல் என்பது ராகி, சோளம், கம்பு, கேழ்வரகு போன்ற தானியங்களை நன்கு அரைக்கப் பயன்படும் கல் ஆகும். இவற்றில் அடிக்கல் மேல்கல் என்ற இரண்டு வகையான கற்கள் உண்டு. அடிக்கல் வட்ட வடிவில் அதன் மையப்பகுதியில் மரத்தாலான சிறு அச்சு பொருத்தப்பட்டிருக்கும். மேல்கல் அடிக்கல்லின் அச்சு பொருத்துவதற்கு ஏற்ப மேல் கல்லின் மையப் பகுதியில் பெரிய துவாரம் ஒன்று இருக்கும். மேல்கல்லை நகர்த்தி

அரைப்பதற்கு ஏற்ற வகையில் மற்றொரு மரத்தாலான ஓர் அடி கைப்பிடி மேல்கல்லில் பொருத்தப்படும். நடுவில் இருக்கும் துவாரத்தில் தானியங்களைக் கொட்டி அரைத்துக் கொள்கின்றனர்.

### 5.7.4.6. புணாய்

'புணாய்' என்பது நேராக நிற்கும் மூங்கிலை ஒரு கணுவுக்குக் கீழும் மற்றொரு கணுவுக்குக் கீழுமாக வெட்டினால் ஒரு நீளமான மூங்கில், பாத்திரம் அளவில் கிடைக்கும். இதனை மலையாளிகள் 'புணாய்' என்று அழைக்கின்றனர். அதனை உப்பு, புளி போன்ற பொருட்களை வைத்துக்கொள்வதற்கு பயன்படுத்துகின்றனர். சில சமையங்களில் காட்டுவேலைக்குச் செல்லும்போது குடிக்க தண்ணீர் எடுத்துச் செல்லவும் பயன்படுத்து வருகின்றனர்.

### 5.7.4.7. துடைப்பம்

மலையாளிகள் தங்களுடைய இல்லங்களைத் தூய்மையாக்க, நான்கு வகையான துடைப்பங்களைப் பயன்படுத்துகின்றனர். அவை ஈச்சந்துடைப்பம், பூந்துடைப்பம், தென்னந் துடைப்பம் போன்றவைகள் ஆகும். வீட்டின் உட்பகுதியைத் தூய்மைப்படுத்த ஈச்சந்துடைப்பத்தையும் பூந்துடைப்பத்தையும் பயன்படுத்தி வருகின்றனர். வாசல், களம் போன்றவற்றைத் தூய்மைப்படுத்தவும், தானியங்களைக் குவிக்கவும், தென்னை மற்றும் துடைப்பங்குச்சி இரண்டையும் பயன்படுத்துகின்றனர். தங்கள் இல்லங்களுக்கு அருகில் இருக்கும் காடுகளிலிருந்தே இவற்றை வெட்டி எடுத்துவந்து பயன்படுத்துகின்றனர்.

### 5.7.4.8. உறி

பூனை போன்ற விலங்கினங்கள் உணவுப் பொருட்களையும் பண்டங்களையும் தின்றுவிடாமல் இருப்பதற்கு உறி அமைத்துள்ளனர். ஆத்தி மரம், தென்னை மட்டைகள் போன்றவற்றில் இருந்து நார் எடுத்து பதப்படுத்தி பாத்திரம் வைக்கும் அளவிற்கு மூன்று பின்னல் பிரித்து, மீண்டும் ஒன்றாகச் சேரும்படியான ஒரு தயாரிப்பு உறி எனப்படும். அதனை வீட்டின் ஒரு மூளையில் கட்டித் தொங்கவிட்டு அதில் உணவுப் பண்டங்களை வைத்து பாதுகாக்கின்றனர். சிலா் வீடுகளில் மேற் கூரையிலும் உறியை பொருத்தி பன்படுத்தி வருகின்றனா்.

### 5.7.4.9. ஊதாங்குழல்

ஊதாங்குழல் ஒரு முழம் நீளம் அளவுள்ளதாகக் காணப்படுகிறது. இளஓட மூங்கில் துண்டுகளைக் கொண்டு **'ஊதாங்குழல்'** செய்து அடுப்பில் நெருப்பு மூட்டுவதற்கும் நெருப்பு

குறைந்து விட்டால் மீண்டும் நன்கு எரிய வைப்பதற்காகவும் பயன்படுத்துகின்றனர். ஊதாங்குழல் நெருப்பை வாய் வலிக்காமல் பற்ற வைக்கவும் புகை, சாம்பல் போன்றவை கண்களின் மேல் படாமல் இருக்கவும் பயன்படுத்தப்படுகிறது.

### 5.7.4.10. பாத்திரங்கள்

செம்பு, குண்டா, தட்டுக்கள், தம்ளர், வட்டில்கள், கரண்டிகள், தோசைக்கல், இட்லிச்சட்டி, சல்லடை, அரிவாள்மனை, வடச்சட்டி, குடம், சாலு, தூக்கு போன்ற பலவகைப் பாத்திரங்களையும் புழங்குப் பொருட்களாக மலையாளிகள் தங்களது வாழ்வில் பயன்படுத்தி வருகின்றார்கள். மேலும், இவற்றில் உணவு உன்னுவதற்கான வட்டில்கள், கிண்ணம், ஆடு, மாடுகளுக்கு நீர் வைக்கப் பயன்படும் மரத்தொட்டி போன்றவைகளும் அடங்கும்.

### 5.7.4.11. கொங்கட்டை

மழைக்காலங்களில் வேலை செய்யும்போதும், ஆடு, மாடுகள் மேய்க்கும்போதும், வெளியிடங்களுக்குச் செல்லும்போதும் நனையாமல் இருப்பதற்காகச் சாக்குப்பை கொண்டு தலையைப் பாதுகாக்கும் ஒரு அமைப்பு முறைக்கு கொங்கட்டை என்று பெயர்.

### 5.7.4.12. சாக்குப்பை

மலையாளிகள் தாங்கள் விளைவித்த தானியங்கள் மற்றும் கூலியாகப் பெற்ற தானியங்களைச் சாக்குப்பையில் சேமித்து வைக்கின்றனர். சாக்குப்பையைக் 'கோணிப்பை' என்றும் அழைப்பதுண்டு.

### 5.7.4.13. குதிர் (தானியங்கள் சேமிப்புக் கிடங்கு)

மலையாளிகள் தங்கள் விளைநிலங்களிலும், கூலியாகவும் பெற்ற தானியங்கள் தேவைக்கு அதிகமாக இருக்குமானால் அதனைச் சேமித்து வைத்துக் கொள்ள தானியக் குதிர்களைப் பயன்படுத்துகின்றனர். இது மூங்கிலால் பின்னப்பட்டுச் சாணிமண் கலந்து பூசப்பட்டுக் கதவு வைக்கப்பட்டிருக்கும். ஐந்தடி முதல் பத்து அடி வரை உயரம் கொண்டதாக அமைந்திருக்கும். இதில் தானியங்களை இரண்டாயிரம் எடைக்கல் வரை சேமிக்கக் கூடும். சிலர் இரண்டு, மூன்று அறைகள் வைத்தும் குதிர் அமைத்துத் தானியங்களைச் சேமித்து வைத்துக்கொள்ளும் வழக்கம் உண்டு. இதனைப் பயன்படுத்துவதால், எலிகளிடமிருந்து தானியங்கள் பாதுகாப்பாக இருக்க இம்முறையை பயன்படுத்துகின்றனர்.

### 5.7.4.14. தகரப் பெட்டி

மலையாளிகள் தகரப் பெட்டியைப் சமவெளிப்பகுதிகளில் இருக்கும் கடைகளில் விலை கொடுத்து வாங்குகிறார்கள். இதில் புதிய துணிமணிகள், பணம், அணிகலன்கள் போன்றவற்றைப் பூட்டுப்போட்டு பூட்டி வைத்துக்கொள்கிறார்கள். இந்தத் தகரப் பெட்டி ஐந்தடி நீளமும், இரண்டடி அகலமும், ஓர் அடி உயரமும் கொண்டதாக இருக்கும். முன்பெல்லாம் தகரப்பெட்டிக்குப் பதிலாக மரத்தால் செய்யப்பட்ட பெட்டியைப் பயன்படுத்தியுள்ளனர். இதனைப் 'பேழை' என்று கூறுவர். மூடி வைத்துக்கொள்வதற்கேற்ற அமைப்பு வடிவமைக்கப்பட்டு இருந்ததாகக் கள ஆய்வுப் பகுதிகளில் அறிய முடிந்தது.

### 5.7.4.15. ஓலைப்பாய்

தென்னை ஓலையால் படுத்து உறங்குவதற்கு ஏற்ற அமைப்பில் பின்னப்பட்டிருக்கும். இதனை விருந்தினர்கள் வந்தால் அமரவைப்பதற்குப் பயன்படுத்தி வருகின்றார்கள். இப்பொழுது இதன் பயன்பாடு மிகக் குறைந்து விட்டது. அனைவரும் பிளாஸ்டிக் பாய், கோரைப் பாய் என்று காலமாற்றங்களுக்கு ஏற்றவாறு பழகிக் கொண்டார்கள். சில வீடுகளில் காட்சிப் பொருளாக மட்டும் தென்னை ஓலையைக் காணமுடிகிறது.

### 5.7.4.16. கயிறு

மலையாளிகள் காடுகளில் கிடைக்கும் இளம் ஆத்தி மரத்தின் பட்டையை எடுத்து அதில் உட்புறம் இருக்கும் நாரை தனியே பிரித்து எடுத்து, வெயிலில் காய வைக்கின்றனர். அதன் பின்னர் தண்ணிரில் ஊறவைத்து சிறு சிறு நார்களாகக் கிழித்து எல்லாவற்றையும் ஒன்று சேர்த்துக் கயிராகத் திரித்து ஆடு, மாடுகள் கட்டுவதற்குப் பயன்படுத்திக் கொள்கின்றனர். மேலும், சிமெண்ட் மூட்டைகளின் சாக்குகளைப் பிரித்து அதில் கயிரினைத் தயாரித்தும் பயன்படுத்துகின்றனர். ஆடு மாடுகள் கட்டுவதற்கு மட்டுமில்லாமல் புனை, ஏர், உறி போன்ற கருவிகளைக் கட்டுவதற்கு 'கயிறு' பயனுடையதாக இருக்கிறது.

## 5.8. தொகுப்புரை

மலையாளி இனப் பழங்குடி மக்களின் சடங்குகளை, நம்பிக்கைகள் மற்றும் புழங்குப் பொருட்கள் போன்றவற்றை நோக்கும்பொது கீழ்கண்ட முடிவுகள் பெறப்படுகின்றன.

- மலையாளிகள் குழந்தை வேண்டி மடிப்பிச்சை எடுப்பதும், தெய்வத்திடம் மண்டியிட்டு வேண்டுவதும் பண்டைய காலத்தோடு பொருந்தி வருகின்றது.
- குழந்தை கருவில் இருக்கும்போது பல வகை சத்தான உணவுகளைத் தாய்க்குக் கொடுப்பது வசம்பு, ஓமப்பொடு கலந்து குழந்தைக்குக் கொடுப்பது தாய்க்கும், சேய்க்கும் உடல் ஆரோக்கியத்தைத் தருகின்றது.
- பெண் பூப்படைதலைக் குறிப்பதற்குப் பல பெயர்கள் வழக்கில் இருந்து வந்துள்ளதைக் காணமுடிகிறது. பூப்படைந்த பெண்ணிற்கு அளிக்கப்படும் பாதுகாப்பு அவளின் உடல் நலனையும், குடும்ப நலனையும் கருத்தில் கொண்டே அளிக்கப்படுகிறது.
- பூப்படைந்த பெண்ணை வீட்டிலிருந்து விலக்கித் தனியே குடிலில் வைக்கும் வழக்கம் பிற பழங்குடிகளிலும் இருப்பது போன்றே சவ்வாது மலைப் பழங்குடியின மக்களிடமும் காணமுடிகிறது.
- குழந்தைகளுக்குப் பெயர் சூட்டுதலும் குலதெய்வத்தின் பெயரை வைத்தலும், இவர்களிடத்தே காலம் காலமாகப் பின்பற்றி வரும் ஒரு வழக்கமாக இருந்து வருகிறது. குழந்தைப் பேற்றின்போது சங்க காலத்தைப் போன்றே ‘வாலாமை’ கற்பிக்கும் முறையைக் காண்கிறோம்,
- பெயர் சூட்டுதல், காதுகுத்துதல் சடங்குகள் அவரவர்களின் பொருளாதாரத்திற்கு ஏற்ற வகையில் காலச் சூழலுக்கு ஏற்ப மாறுதல் பெற்று வருகின்றன. குழந்தைகளுக்குக் குலதெய்வங்களின் பெயரையும், முன்னோர்களின் பெயரையும் வைப்பதால் அவர்களைப் போலவே வாழ்க்கையில் எல்லப் புகழையும் பெற்று வாழ்வார்கள் என்று கருதுவதை அறிய முடிகின்றது..
- மலையாளிகளின் திருமணச் சடங்கு முழுக்க முழுக்கத் தமிழ் சூழலோடு பொருந்தியிருப்பதைக் காணமுடிகிறது. பெண் கேட்கும் முறை, பரிசப்பணம் கொடுத்து பெண்ணெடுக்கும் வழக்கம், புரோகிதரில்லாத, அக்னி சாட்சியில்லாதத் திருமணச் சடங்குகள், பிற இனமக்களின் பண்பாட்டுக் கலப்பில்லாதத் திருமணச் சடங்குகள், மருமுசி போதல் போன்றவை பண்டையத் தமிழரின் திருமண முறைகளோடு பொருந்தி வருவதை உய்த்துணர முடிகிறது.

- தற்காலத்தில் ஒரு சிலர் பிற நாட்டுப்புற மக்களின் பழக்கங்களைப் பின்பற்றும் நிலை ஏற்படுகின்றன. பொருளாதார வளத்தில் சற்று முன்னேற்றம் கண்டிருக்கும் மலையாளிகள் பெண் பிள்ளைகளைத் திருமணம் செய்து கொடுக்கும்போது மூன்று பவுன் முதல் ஐந்து பவுன் வரை தங்க நகை பூட்டித் திருமணம் செய்து கொள்ளும் பழக்கம் மெல்லத் தலை தூக்கி இருப்பதைக் கள ஆய்வின்போது அறியமுடிகிறது.
- தங்களுடைய குடியிருப்புப் பகுதியில் ஒருவர் இறந்தவுடன் அச்செய்தியை உறவினர்களுக்குச் சொல்லி அனுப்புவது, ஊர்க் கவுண்டரும், நாட்சேவரும் காரியங்களைக் கவனிப்பது, பிணத்தின் நெற்றியில் நாணயம் வைப்பது, வாக்கரிசி போடுவது, பாடை மற்றும் தேர், கட்டுவது இசைக் கருவிகளை முழக்குவது (சாவுப் பறை அடித்தல்) தலை தெற்குப் பகுதியில் இருக்குமாறு பிணத்தைப் புதைப்பது, பொறி தானியம் இறைப்பது, கருமாதிச் சடங்கு செய்வது என மலையாளிகளின் இறப்புச் சடங்குகள் ஊரார் அனைவரின் செயல்பாடுகளுடன் நிகழ்கின்றன.
- இவர்களின் இறப்புச் சடங்குகளைக் கூர்ந்து கவனித்தோமானால் பல பழங்குடியின மக்கள் பின்பற்றக்கூடிய சடங்கு முறைகளோடு ஒன்றி வருகின்றது. மேலும், இவை பண்டைய திராவிடர்களின் சடங்குகளாக அமைவதையும் கணமுடிகிறது.
- மலையாளிகளின் வழிபாட்டு முறையானது செப்பமுறாத கல்லுருவிலும், கண்ணுக்குப் புலப்படாத நுண்ணுருவிலும் உள்ள பல தெய்வ வழிபாட்டு நெறியாகவே உள்ளது. இந்த வழிபாட்டு முறைகள் நாட்டார் வழிபாடுகளில் அடங்கிக் கிடக்கும் சிறுதெய்வ வழிபாட்டு முறைக்குப் பொருந்தி வருவதைக் காணமுடிகிறது.
- மலையாளிகள் தாங்கள் வாழும் எல்லாக் குடியிருப்புக்களிலும் பல சிறு தெய்வங்களை நிலைக்கச் செய்து தங்களுடைய வாழ்விற்கு ஓர் ஊன்றுகோலைத் தேடிக்கொள்கிறார்கள். முன்பு திணைத் தெய்வங்களாகக் கருதப்பட்ட முருகன், திருமால், சிவன் போன்ற பெருந்தெய்வங்களையும் இம்மக்கள் இப்பொழுது வழிப்படத் தொடங்கியுள்ளனர்.
- ஊர்க்கவுண்டர் தலைமையில் எல்லாவித சடங்குகளும் நிகழ்த்தப்படுகின்றன. இறப்புச் சடங்கில் இவ்வின மக்கள் அனைவரும் தவறாமல் கலந்து கொள்கின்றனர், பிறந்தவீட்டுக்கோடி, புகுந்தவீட்டுக்கோடி எனப் பிற சமூகத்தைப் போல எடுத்து வருவதைக் காணமுடிகிறது. இறந்த மறுநாள் பாலும், மூன்றாம் நாள் காரியமும் இவர்கள் செய்கின்றனர்.
- மலையாளிகள் தங்களுடைய வாழ்நாள் முழுவதும் பற்பல நம்பிக்கைகளோடு வாழ்ந்து வருவதைப் பார்க்க முடிகிறது. இம்மக்கள் தெரிந்தோ, தெரியாமலோ பல

ஆக்கப்பூர்வமான நம்பிக்கைகளையும், பல மூட நம்பிக்கைகளையும் கொண்டுள்ளனர் என்பதை அறிந்துகொள்ள முடிகின்றது.

- மலையாளியின மக்களிடையே பல நம்பிக்கைகள் இருந்து வருகின்றன. இந்நம்பிக்கைகள் காலங்காலமாகப் பழைய தலைமுறையினரிடமிருந்து புதிய தலைமுறையினருக்குக் கடத்தப்படுகின்றன. ஒரு சில பழக்க வழக்கங்கள் நம்பிக்கைகளாக மாறுவதற்கும் காலம் இடம் தருகின்றது.
- கலைகள் மலையாளிகளின் கலைத்திறனைப் படம்பிடித்துக் காட்டுகின்றன. பாரம்பரிய நடனம் ஆடும் போது இவர்கள் ஆடும் அடவு பயன்படுத்தும் இசைக்கருவிகள் ஆகியன இம்மக்களின் கலைத்திறனையும் நுட்பத்தினையும் அடையாளம் காட்டுவனவாய் அமைகின்றன.
- கூத்தில் களரி கொட்டுவதும், இறுதியில் மக்கள் பாடுவதும் இவர்கள் கூத்தின் மீது கொண்டுள்ள அந்த நம்பிக்கைகளையும், பக்தியையும் காட்டுகிறது. கூத்துக் கலைஞர்கள் தங்களுடைய ஒப்பனைகளைத் தாங்களே போட்டுக்கொள்கின்றனர். இந்த ஒப்பனைகள் கதாப்பாத்திரங்களுக்கு ஏற்ப அமைத்துக்கொள்வது தனிச் சிறப்பு.
- மலையாளிகளின் மாறிவரும் புழங்குப் பொருட்களைப் பார்க்கும்போது அவர்களும் இயற்கை சார்ந்த வாழ்வியல் முறையைக் கைவிட்டு நோய்களுக்கு இருப்பிடமாகத் திகழும் நகர்புறச் சூழலுக்கு வந்துவிடுவார்களோ என்ற ஐயம் எழுகின்றது.
- மலையாளிகளிடையே ஏற்பட்டிருக்கும் நாகரிகத் தாக்கம் அம்மக்களின் பண்பாட்டினைப் பறைசாற்றுகின்ற புழங்குப் பொருட்களை மாற்ற துவங்கிவிட்டது என்பதை அறியமுடிகிறது.

**அடிக்குறிப்புகள்**

1. த. விஜயலட்சுமி, இரவாளப் பழங்குடிகளின் வாழ்வியல், ப.48.
2. மா. கோதண்டராமன், நாட்டுப்புறவியலும் பண்பாடும். பக்.159-160.
3. ஜி. வசந்தி, சேலம் மாவட்ட நாட்டுப்புறப் பாடல்கள் சமுதாய ஆய்வு, ப.186.
4. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.524.
5. சற்குணவதி, தமிழக நாட்டுப்புறவியல், ப.131.
6. ருக்குமணி, அத்திப்பட்டு, கூலிவேலை, தகவலாளி
7. ஆ. குழந்தை, வாக்ரிகளின் வாழ்வியல், ப.109.
8. சு. சக்திவேல், தமிழ்நாட்டுப் பழங்குடி மக்கள், ப.306.
9. ஆ. சிவசுப்பிரமணியன், அடித்தள மக்கள் வரலாறு, ப.196.
10. யோ. தர்மராஜ், காணிக்காரப் பழங்குடி மக்களின் வழக்காற்றியல், ப.83.
11. சு. இராஜேந்திரன், முதுவர் இனப் பழங்குடிகள், ப.94.
12. கே.கே. பிள்ளை, தமிழக வரலாறும் பண்பாடும், ப.140.
13. வாழ்வியல் கலைக்களஞ்சியம், தொகுதி-2, பக்.189-190.
14. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.515.
15. மா. பழனிச்சாமி, கேரள ஊராளிப் பழங்குடிகளின் வழக்காற்றியல்,பக்.110-111.
16. க.ப. அறவாணன், தமிழ் மக்கள் வரலாறு, பழந்தமிழர் வழிபாடுகள், ப.53.
17. ஓ. முத்தையா, பண்பாட்டுப் பதிவுகள், ப.118.
18. சுந்தரபாண்டியன், நாட்டுப்புற வழிபாட்டு மரபுகள், ப.137.
19. க.ப. அறவாணன், தமிழ் மக்கள் வரலாறு பழந்தமிழா் வழிபாடுகள், ப.30.
20. ஹான்செட் 1982 : 220-21.
21. பக்தவத்சல பாரதி, இலக்கிய மானிடவியல், ப.249.
22. இரா. சுந்தரவத்தியத்தேவன், பிறமலைக் கள்ளா் வாழ்வும் வரலாறும், ப.223.
23. சண்முகம், கோம்பை, தகவலாளி, கோயில் பூசாரி.
24. தே. லூர்து, (தொ.ஆ) நாட்டார் வழக்காற்றியல் மந்திரம், ப.1.
25. ஆ. சிவசுப்பிரமணியன், மந்திரம் சடங்குகள்., ப.7.
26. க. கைலாசபதி, பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும், ப.93.
27. ஆ. சிவசுப்பிரமணியன், மந்திரமும் சடங்குகளும், ப.29
28. தே. ஞானசேகரன், மக்கள் வாழ்வில் மந்திரச் சடங்குகள் ப.45
29. Neelakanta Sastri, Development of Religion in Sout India, p.36.
30. தமிழவன், நாட்டுப்புற நம்பிக்கைகள், ப.6.
31. க. காந்தி, தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.259.

32. த., கவிதா, மலசர் பழங்குடிகள், ப.115.

33. ஆறு., இராமநாதன், நாட்டுப்புறக் கலைகள், ப.13.

34. மேலது, ப.28.

35. ஆ., சிங்கார வேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப.494.

36. தேவராஜ். நடுகுப்பம், கூத்து வாத்தியார்.

37. சீ.மா.,இரவிச்சந்திரன், (மு.ப.ஆ), கொங்கு நாட்டுப்புறவியல் தொகுதி-1,ப.190.